# இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்

முனைவர் அ.அ. மணவாளன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

# இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்

முனைவர் அ. அ. மணவாளன்
பேராசிரியர் & தலைவர்
தமிழ்மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி. டி. டி. ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை - 600 113.

பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளைச் சொற்பொழிவு-4
(18, 19-5-94)

Perunthalaivar KAMARAJAR Endowment Lecture, No-4

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Irupatam Nurrantin Ilakkiya Kotpadukal** |
| Author | : | Dr. A. A. MANAVALAN<br>Professor & Head, Department of Tamil, University of Madras. |
| Publication & Copy right | : | International Institute of Tamil Studies, T.T.T.I Post, Taramani, Madras-600 113. |
| Publication No | : | 231 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | December 1995 |
| Edition | : | First |
| Paper Used | : | 16 Kg White Printing Paper |
| Size | : | 21 × 14 cms |
| Printing types used | : | 10, '10', 18pts |
| No of Copies | : | 1200 |
| No. of pages | : | VIII+142 |
| Price | : | Rs. 30/- |
| Printers | : | N. D. S. Printers,<br>42, Vellala Street,<br>Aminjikarai, Madras-600 029 |
| Artist | : | S. Sathiya |
| Subject | : | Literary Theories |


* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

* வெள்ளி விழா வெளியீடு

முனைவர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

இந்தியத் துணைக் கண்டத்தில் பிற மாநிலங்களில் ஆங்கில இலக்கியம் படித்தவர்கள் தங்கள் தாய்மொழியை வளர்ப்பதில் முன்னிலையில் இருப்பதை இந்திய இலக்கிய வரலாற்றைப் படித்தவர்கள் நன்கு உணர்வர். எடுத்துக் காட்டாகக் கர்நாடக மாநிலத்தில் கன்னட மொழியைக் கட்டாய மொழியாக்கிய செயல்பாட்டிற்குக் காரணமாக அமைந்தவர் ஆங்கிலப் பேராசிரியர் கோக்காக் அவர்கள். சாகித்யா அகாதமி தலைவ ராக அமைந்து இருக்கின்றார் கன்னட மாநிலத்தைச் சார்ந்த யூ. ஆர். அனந்தமூர்த்தி, இவரும் ஆங்கிலப் பேராசிரியர் ஆவார்.

தமிழகத்திலும் ஆங்கில இலக்கியம் படித்து, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள் உண்டு. அவர்களுள் வி. ஆர். எம். செட்டியார், சீனிவாசராகவன், முனைவர் கே.செல்லப்பன், முனைவர் சச்சிதானந்தம் முனைவர் எஸ். ராம கிருஷ்ணன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுடன் இணைகின்றார் முனைவர் அ. அ. மணவாளன்.

தமிழிலும், ஆங்கிலத்திலும் சரிநிகர் புலமை பெற்ற பேராசிரியர் பெருந்தகை முனைவர் அ.அ. மணவாளன். இலக் கியத் திறனாய்வு, இலக்கியக் கோட்பாடு, ஒப்பிலக்கியம், மொழி பெயர்ப்பு போன்ற துறைகளில் தனித்த ஆற்றல் பெற்ற ஆய்வாளர்.

சான்றாண்மைக்கு ஆழி என்று எடுத்துக் காட்டத்தக்க இவர், அரிஸ்டாடில், Tamil Research Through Journals போன்ற இலக்கியத் திறனாய்வு, மொழி பெயர்ப்புத் தொடர்பான பத்து ஆங்கில நூல்களையும் தமிழ் நூல்களையும் எழுதியுள்ளார்.

இந்தியாவில் உள்ள பல தமிழ் அமைப்புகளுக்குப் பொறுப் பாளராக அமைந்துள்ளார். இவருடைய திறன் தமிழ் நாட்டில் மட்டுமன்றி அயல் நாடுகளிலும் பரவியுள்ளது குறிப்பிடத் தக்கது.

பேராசிரியர் முனைவர் அ.அ. மணவாளன் அவர்கள் இந் நிறுவனத்தில் பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளைச் சொற்பொழிவினை நிகழ்த்தினார். வெள்ளிவிழா கொண்டாட இருக்கின்ற இந்த நேரத்தில் இவரின் சொற்பொழிவு நூலாக வெளி வருவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களுக்கு நன்றி. தமிழ் வ்ளர்ச்சிப் பண்பாட்டுத்துறைச் செயலர் அவர்களுக்கும் நன்றி.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவினைச் சிறப்பாக நடத்திய முன்னாள் இயக்குநர் பொறுப்பு முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு, முன்னாள் அறக்கட்டளைப் பொறுப் பாளர் முனைவர் ச. சிவகாமி ஆகியோர்க்கும் என் நன்றி.

நூலினைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிட்ட என். டி. எஸ். அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

**அ. அ. மணவாளன்**
பேராசிரியர் & தலைவர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை-5,

## முன்னுரை

பெருந்தலைவர் காமராசர் பெயரால் நிறுவப்பட்டுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவினை ஆற்றுமாறு உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் (பொறுப்பு) டாக்டர் அன்னி தாமசு அவர்கள் அன்புடன் பணித்தனர். அதற்கேற்ப 1994 ஆம் ஆண்டு மே திங்கள் 18, 19 ஆகிய இரு நாட்களில், ''இக் கால இலக்கியக் கோட்பாடுகள்'' என்னும் தலைப்பில் இந்தச் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது. இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவினை ஆற்ற வாய்ப்பளித்த டாக்டர் அன்னி தாமசு அவர்கட்கும் இச் சொற்பொழிவினை ஆற்றுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்த நிறுவன முதுநிலை ஆய்வாளர் டாக்டர் ச. சிவகாமி அவர்கட்கும் மிக்க நன்றியுடையேன்.

டாக்டர் இராமர் இளங்கோ அவர்கள் நிறுவன இயக்குநராகப் பணியேற்ற பின்னர் இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவினை அச்சேற்றும் பணி தொடங்கியது. நூல் வடிவம் பெறும்போது ''இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்'' என்னும் பெயரில் சொற்பொழிவுத் தலைப்பு சிறிது மாற்றியமைக்கப்பட்டுள்ளது. வெறும் சொற்பொழிவாக நின்று விடாமல் நிலைபேறுடைய நூலாக வெளிவரப் பணித்த இயக்குநர் டாக்டர் இராமர் இளங்கோ அவர்கட்கும், இந்த வகையில் தெளிவு செய்ய அவருக்கு உதவிய மூதறிஞர் குழுவுக்கும் பெரிதும் நன்றியுடையேன்.

இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள் எனப் பெயரிட்டிருப்பினும் உலக அளவில் இருபதாம் நூற்றாண்டில்

தோன்றி நிலவிய / நிலவிவரும் எல்லா இலக்கியக் கோட்பாடு களும் இங்கே பேசப்பெறவில்லை. ஒரு சொற்பொழிவில் இவை அடங்குவனல்ல என்பதும் ஒரு சிறு நூலிலும் இவற்றை முழுவது மாகக் கூற இயலாது என்பதும் வெள்ளிடைமலை. எனவே பெரும்பான்மையாக நடைமுறையில் இருக்கும் மிக இன்றி யமையாதனவாகிய புதுத்திறனாய்வு, அமைப்பியல் வாதம், மீயமைப்பியல்வாதம் என்னும் மூன்று கோட்பாடுகள் மட்டும் சுருக்கமாக இந்த நூலில் பேசப்பட்டுள்ளன. இவற்றுள்ளும் மீயமைப்பியல்வாத இலக்கியக் கோட்பாடுகளுள் வாசகர் கோட்பாடு, பெண்ணியக் கோட்பாடு என்னும் இரண்டு இன்றி யமையாத கூறுகள் கால, இட, முயற்சிச் சுருக்கம் கருதி இந் நூலுள் பேசப்படவில்லை. இக் குறைபாட்டினைப் பொறுத்துக் கொள்ளுமாறு இந்நூலினைப் படிக்க நேரும் அறிஞர் பெரு மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

**அ. அ. மணவாளன்**

# பொருளடக்கம்

# அறிமுகம்

இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள் எனப் பொதுப்படையான தலைப்பைக் கொண்டிருப்பினும் ஐரோப்பா, அமெரிக்கா மற்றும் காமன்வெல்த் நாடுகளில் பரவலாகப் பயிலப்பட்டு நடைமுறையில் இருக்கும் இலக்கியக் கொள்கைகளையே நான் இங்கு ஆய்வுக்குரியனவாக எடுத்துக் கொண்டுள்ளேன். இந்த நூற்றாண்டின் தொடக்கம் முதலே அறிவுத் துறைகள் எல்லாம் உலகளாவியனவாகக் கொண்டு ஆராயப்படுவதாலும், நம் நாட்டிலும், தமிழகத்திலும் இன்று பயிலப்பட்டு அல்லது இலக்கிய அறிஞர்களாலும், எழுத்தாளர்களாலும் எடுத்தாளப்பட்டு வருவன பெரும்பாலும் மேலை இலக்கியக் கோட்பாடுகளே யாதலாலும், இவற்றின் வரலாற்றை ஆய்வதாகவே இவ் அறக்கட்டளைச் சொற்பொழிவினை நான் அமைத்துக் கொண்டுள்ளேன். இக்கோட்பாடுகளைத் தவிர, நம் நாட்டிற்கே உரியனவாகவோ, அன்றி நம் நாட்டின் பண்பாட்டிற்கேற்ப மாற்றம் பெற்றனவாகவோ காணப்பெறும் இலக்கியக் கோட்பாடுகளையும் விவாதத்தின்போது, ஒப்பீட்டு நிலையில் ஆங்காங்கே சுட்டிக் காட்டும் முயற்சியும் இவ் ஆய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இலக்கியக் கோட்பாடு பல்துறைத் தொடர்பு, அவாய் நிலை என்னும் இருவகைப் பார்வைகளால் இணைந்து உருவாகிறது அல்லது உருவாக்கப்படுகிறது. ஒரு கூற்று அல்லது நூல் (utterance or work) தான் எழும் சமுதாயம், அரசியல், சமயம் போன்ற பண்பாட்டுச் சூழல்களுக்கேற்பப் பொருள் தரும் இயல்பினது. ஒரு வகை படைப்புச் சூழலில் தோன்றிய நூல் அல்லது கூற்று வேறொரு சூழலில் அதே பொருளைத் தான் (Significance) தரவேண்டும் என்பதில்லை. அதனின்றும் மாறிய, மாற்றமடைந்த பிறிதொரு பொருளையும் தரும் இயல்பினது. இவ்வாறு பல்துறைச் சூழலில் எழும் ஒரு படைப்பு அல்லது நூலின் பொருள், அச்சூழலின் பிற கூறுகளால் தீர்மானிக்கப்

படுகிறது. இத்தகைய பண்பாட்டுக் கூறுகள் ஒன்றையொன்று அவாவி நிற்பன (dialogism). அதாவது படைப்புச் சூழலின் முழுமையை எந்த ஒரு கூறும் முழுமையாகப் பிரதிபலிப்ப தில்லை. ஒரு கூறு முழுமையின் ஒரு பகுதியாதலின் எந்த ஒரு கூறும் தன் பொருண்மைக்குப் பிற கூறுகளைச் சார்ந்திருக்கும் இயல்பினது. எனவே எந்த ஒரு கூறு பற்றிய கோட்பாடும் பிற கூறுகளின் கோட்பாடுகளையும் தழுவியே செல்லும் தன்மை யுடையதாக அமைகிறது. இந்நிலையில் ஒரு கோட்பாட்டைப் பற்றிச் சிந்திக்கிறபோதே பிற கோட்பாடுகளும் இயல்பாகத் தலையிடும் காரணத்தால் கோட்பாடுகளுக்குத் தொடக் கமும் இல்லை; முடிவும் இல்லை. தொடர்ச்சியே நிலையான பண்பாக அமைகிறது. எனவே எந்த ஒரு கூற்றின் அல்லது துறையின் வரலாறும் வரையறுத்த முதல், இடை, கடை என்னும் அமைப்பினைப் பெற்றிருப்பதில்லை.[1]

மைக்கேல் பக்தினின் (Mikhail Bakhtin) இந்தக் கோட் பாட்டால், மானுட அறிவுத்துறைகளின் எல்லைகள் மறை கின்றன. ஒவ்வொரு துறையின் தனிப்பட்ட கோட்பாடும் மற்ற துறைகளின் கோட்பாடுகளைப் பாதிக்கின்ற காரணத்தால் கோட்பாடுகள் பலவாகப் பல்கிப் பெருகிவிட்டன; எந்தத் துறைக்கும் தனிப்பட்ட ஒரு கோட்பாடென்பது இல்லாமல் போகவே கருத்துக் குழப்பங்கள் ஒரு நிலையிலும், கருத்து வளர்ச்சி மற்றொரு நிலையிலும் உருப்பெறலாயின.

ஒரு மானுட வினைநிகழ்ச்சி (Chronotope) இலக்கியப் படைப்புக்கு ஆதாரமாகிறது. அதாவது உலக இயற்கை நிகழ்ச்சி இலக்கிய நிகழ்ச்சியாக மாறுகிறது. பின்னர் இலக்கிய நிகழ்ச்சி இயற்கை நிகழ்ச்சியோடு தொடர்பு கொள்கிறது. தோற்றத்திற்கு அடிப்படையான இயற்கை நிகழ்ச்சியும் படைப் புடன் தொடர்பு கொள்ளும் இயற்கை நிகழ்ச்சியும் ஒரே தன்மை உடையனவாக இருப்பதில்லை. தோற்றத்திற்கு ஆதாரமான இயற்கை நிகழ்ச்சி உலகம், மானுட வாழ்க்கை முறைகள், அறிவுத்துறைகள், இலக்கியம் படைக்கும் படைப் பாளி என்னும் பல கூறுகளை உடையது. படைப்புடன் தொடர்பு கொள்ளும் இயற்கை நிகழ்ச்சியும் உலகம், மானுட வாழ்க்கை முறைகள், அறிவுத்துறைகள், இலக்கியத்தை நுகரும் வாசகன் என்னும் பல கூறுகளை உடையது. இக்கூறுகள் கால,

---

1. Joseph Natoli, **Tracing Literary Theory** (Chicago : university of Illinois Press, 1987) P. XI

தேச, நடைமுறையால் வேறுபட்டனவாதலின் படைப்பின் பொருண்மையும் வேறுபடும் தன்மையுடையதாகிறது.

இலக்கியக் கோட்பாடுகளை உருவாக்கும் நிலையில் இத்தகைய பல்துறை-பன்முகப் பார்வை இடம் பெறுவதால் கோட்பாடுகள் பலவாக மலிந்து விடுவதைத் தவிர்க்க இயல வில்லை. எண்ணிக்கையில் பலவாகப் பெருகுவதோடு, ஒன்றுக் கொன்று முரண்பட்டனவாகவும் இக்கோட்பாடுகள் அமை வதையும் தவிர்க்க இயலவில்லை. படைப்போன், படைப்பு, படிப்போன் என்னும் முத்திறப் படைப்புக் கூறுகளை ஆராயு மிடத்து உலகம், மனிதன் (ஆண், பெண்) மொழி போன்ற வற்றைப் பற்றியெழுந்துள்ள, எழுகின்ற தத்துவக் கோட்பாடு களும் உளவியல், சமயம், சமுதாயம், அரசியல் பற்றி எழுந் துள்ள, எழும் கோட்பாடுகளும் இலக்கியக் கோட்பாடுகளின் தோற்றப் பரிமாணத்தை மிகவும் ஆழமானதாகவும் சிக்க லுடையதாகவும் மாற்றி விட்டன.

இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகளை வரலாற்றடைவில் ஆராயப்புகுமிடத்து இந்த ஆழமும், அகலமும் சிக்கலும் நம்மை எதிர்கொள்கின்றன. இங்கே ஆழமும், அகலமும் என்பன மானுட அறிவுத்துறைகள் பலவற்றின் வளர்ச் சியாலும், ஒன்றோடொன்று இணைந்து செயல்படும் பல்துறை ஆய்வாலும் விளைவன. இவை உண்மை நிகழ்வுகள் (facts/ events). இங்கே சிக்கல் என்பது இந்த நிகழ்வுகளின் இயற்கைத் தன்மையைக் குறிக்கவில்லை. இக்கோட்பாடுகளை வரவேற்கும் அறிஞர்களின் மனப்பாங்கைக் (attitude) குறிக்கிறது; வர வேற்கும் அறிஞர்களின் முற்பயிற்சியையும், முற்சாய்வையும் (Prejudice) குறிக்கிறது. அதாவது, 'ஒரு கோட்பாடு என்பது தெளிவாக ஐயத்திற்கு இடமின்றி முரண்பாடுகள் இல்லாமல், ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும்' என்று முன்னரே நெறிப்படுத்தப் பெற்ற பார்வையுடையவர்களுக்கு (முற்பயிற்சி) இவை சிக்கலுடையதாகத் தோன்றும். இது ஒரு வகையான முருகியல் சார்ந்த, கருத்தீடு (aesthetic construct). இது ஒரு பூங்கா எவ்வாறு அமைக்கப்படவேண்டும் என்பதைப் போன்ற பார்வை. உலக இயற்கையே முரண்பாடுடையது தான், இயற்கையே கரடுமுரடானதுதான். மானுட அனுபவங் களும் பல்வேறு வகையினதாம்; தம்முள் முரண்பாடுடையன தாம்; இப்படியிருப்பதுதான் இயற்கை என்னும் மனப்பாங்கில் வளர்ந்தவர்களுக்கு இது சிக்கலாகத் தோன்றாது. ஏறக்குறைய கலை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதில் தோன்றும் வேறு பட்ட மனப்பாங்கு போன்றதுதான் இதுவும்; டாவின்சி, இரவி

வர்மா போன்றோரின் ஓவியங்களைப் பற்றியும், இக்கால ஓவியங் களைப் பற்றியும் (modern art) எழும் வேறுபட்ட மனப்பாங்கு களை நினைவிற்குக் கொணர்ந்தால் இக்கருத்து மேலும் தெளிவாகும். அதாவது, டாவின்சி, இரவிவர்மா போன்றோரின் ஓவியங்களே சிறந்தவை என்னும் கருத்தில் ஊறியோர்க்கு ஏற்படும் முற்சாய்வின் காரணமாக இக்கால ஓவியங்கள் ஆராயும் முன்பே பொருளற்றனவாகக் கலையைக் குலைப்பனவாகத் தோன்றும். இத்தகைய முற்சாய்வால் புதிய இலக்கியக் கோட்பாடுகள் சிக்கலும், குழப்பமும் உடையனவாக ஒரு சாராரால் கருதப்படுகின்றன.

எனினும் பல்துறைப் பன்முகத்தினவாக வளர்ந்துவிட்ட இலக்கியக் கோட்பாடுகள் பல தம்முள் எதில் ஒன்றுபடுகின்றன என்றோ எதில் வேறுபடுகின்றன என்றோ திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை. ஏன் சில இடங்களில், இவை எதைப் பற்றி விவாதிக்கின்றன என்றே அறிய இயலாதவாறு அமைந்துள்ளன. எனவே சில கோட்பாடுகளை ஒப்பிட்டு ஆராயவும் இயலாத நிலை ஏற்படுகிறது. இலக்கியத்தோடு தொடர்புடையனவாக இருப்பதாகக் கருதப்படுவதால் அவற்றையும் நாம் பொறுமையாக ஆராய வேண்டிய நிலையில் உள்ளோம். இலக்கியப் பயிற்சி ஒன்றே உடையார்க்கு இக் கோட்பாடுகளுள் பல மற்றொன்று விரித்தலாகவும் வெற்றெனத் தொடுத்தலாகவும் காணப்படும். இதற்குரியனவாக இரண்டு காரணங்களைச் சுட்டலாம். ஒன்று இலக்கியம் தவிர்ந்த பிற துறைப் பொருண்மைகளை அறிந்திராமையால் ஏற்படும் இருண்மை; மற்றொன்று சில குறிப்பிட்ட கோட்பாடுகளை முன்னரே தங்களுக்கு உரியனவாகத் தன்வயப்படுத்திக் கொண்ட நிலையில் பிறிதொன்றை வரவேற்க இயலாத மனப்பாங்கு. இத்தகைய மனப்பாங்குடைய அறிஞர்கள் இக்கால இலக்கியக் கோட்பாடுகளை வரவேற்பதில் தயக்கம் காட்டுவதோடு அமையாமல், எதிர்க்கவும் செய்கின்றனர். இவ்வாறு இக்கால இலக்கியக் கோட்பாட்டுக் குரல்களில் ஆங்காங்கே சில எதிர்ப்புக் குரல்களும் ஒலித்துக் கொண்டிருக்கக் கேட்கிறோம்.

இத்தகைய பல்துறைப் பன்முக இலக்கியக் கோட்பாடுகள், இலக்கிய அறிஞர்களிடையேயும், ஆய்வாளர்களிடையேயும் இன்னும் பரவலாக அறிமுகமாகவில்லை. ஒரு சில முன்னோடித் திறனாய்வாளர்கள், கோட்பாட்டாளர்கள், ஆராய்ச்சியாளர் கள் ஆகியோரிடம் மட்டும் விவாத நிலையிலும், சிற்சில இடங் களில் பயன்பாட்டு நிலையிலும் இவை தொழிற்பட்டு வரு கின்றன.

இந்த இருபதாம் நூற்றாண்டைக் கோட்பாட்டுக் காலம் (Age of Theories) என்று அறிஞர்கள் வரையறுக்கின்றனர். இலக்கியத்தைப் பொறுத்தவரை இது முற்றிலும் பொருந்தும். இதற்கு முன்னரேயும் கோட்பாட்டுக் குரல்கள் ஒலித்துக் கொண்டு இருந்தனவாயினும் (அரிஸ்டாடில், ஆரஸ், லாஞ் சைனஸ், கோலரிட்ஜ், அர்னால்டு; தொல்காப்பியர், க்ஷேமேந் திரர், ஆனந்தவர்த்தனர், தண்டி, பாமகர்) அவை எல்லாம் தம் உடன்காலக் கோட்பாடுகளின் முழுமையைப் பிரதிபலிப் பனவல்ல; அவ்வக் குரல்கள் ஒலிக்கும் சிற்சில தனிப்பட்ட நூல் களையே குறிப்பன. இத்தனிப்பட்ட நூல்கள் பேராற்றல் உடையனவாக இருந்தமையால் மாற்றுக் குரல்கள் காலந் தொறும் வளர்ந்து வந்தமையை அறிய இயலாதவாறு மறக்கடிக் கப்பட்டன; அல்லது மறைந்தொழிந்தன. இந்த இருபதாம் நூற்றாண்டுக் கோட்பாடுகள் அறிவியல் மற்றும் மக்களாட்சிக் காலத்துக்கு உரியனவாதலின், வலியன எளியன என்னும் வேறு பாடின்றி நம்மிடையே ஒலிக்கும் உரிமை பெற்றுள்ளன. இக்கோட்பாடுகளை எதிர்கொள்ளும் நிலையில் உள்ள நாமும் முற்சாய்வு எதுவும் இன்றி எல்லாக் கோட்பாடுகளையும் வர வேற்று, நம் பயன்பாட்டுக்கு உரியனவற்றைக் கொள்ளவும், அல்லனவற்றை ஒதுக்கி வைக்கவும் உரிமை பெற்றவராக உள்ளோம்.

எனவே பல்வேறு கோட்பாட்டுக் குரல்கள் கூறும் விவாதங் களை நாம் கேட்போம். இலக்கிய நுகர்வுக்கும், ஆய்வுக்கும் அவை எந்த அளவுக்கு, எந்த வகையில் பயன்படும் என்று ஆராய் வோம். இலக்கிய நுகர்வு விருப்புகளோ, ஆய்வு முடிவுகளோ எப்போதும் நிலையானவை அல்ல; காலந்தொறும் மாறும் தன்மையின. எனவே நடுநிலையில் நின்று ஆராய்ந்து, பயனு டையனவற்றை, பயனுடையன என்று இன்று கருதுவனவற்றை வரவேற்றுப் பயன்படுத்துவோம். இலக்கிய நுகர்வுக்கோ, ஆய்வுக்கோ பயன்படாதன என்று இன்று நாம் கருதுவன வற்றைச் சற்றுத் தள்ளி வைப்போம். இவ்வாறு சிலவற்றைக் கொள்ளுவதற்கும், சிலவற்றைத் தள்ளுவதற்கும் முன்னர் தத்தம் விவாதங்களையும், விளக்கங்களையும் இப்போது ஒவ் வொன்றாக அவை நம்முன் அரங்கேற்றட்டும். அரங்கேற்ற முடிவில் அவற்றின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து அவற்றைக் கொள்ளவோ, தள்ளவோ செய்யலாம்.

இருபதாம் நூற்றாண்டு நெடுகத் தோன்றி ஒலித்த, ஒலித்துக் கொண்டிருக்கும் கோட்பாட்டுக் குரல்கள் பலப்பல

வகையின; அவை அனைத்தையும் ஒருங்கு ஆய்வது இச் சொற் பொழிவின் எல்லையைக் கடக்குமாதலின், அவற்றுள் பரவலாக வழக்கில் இருப்பனவற்றை அவற்றின் மையக் கருதுகோள்களின் அடிப்படையில் மூன்றாகப் பகுத்து ஆராய்வது தெளிவிற்கும், எளிமைக்கும் வழி செய்யும். புதுத் திறனாய்வுக் கோட்பாடுகள் (New Criticism), அமைப்பியல் கோட்பாடுகள் (Structuralist theories), அமைப்பியல் மருவிய கோட்பாடுகள் (Post Structuralist theories) என்னும் மூன்று தலையாய கோட்பாட்டு அரங்கு களாகப் பகுத்து இவற்றை ஆராயலாம். இந்த ஒவ்வொரு கோட்பாட்டுக்குள்ளும் மாறியும் மருவியும் ஒலிக்கும் அகமுரண் பாட்டுக் குரல்கள் பல ஒலிப்பதால், இவற்றைக் குழு என்று பெயரிட்டு அழைக்கவும் இயலவில்லை. எனவே ஒரு பொது அமைப்புக்கு உடன்பட்டுச் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டி ருக்கும் இவற்றை ஓர் அரங்காக வகுத்துப் பார்ப்பது தெளி வுக்குத் துணை செய்யும் எனக் கொண்டு, இவற்றை மூன்று **கோட்பாட்டு அரங்குகள்** என்று பெயரிட்டு அழைக்க விரும்பு கிறேன். ஒவ்வொரு அரங்கிலும் உள்ள தனிக் குழுக்கள் அல்லது உட்குழுக்கள் தத்தம் கொள்கைகளைக் கூறி அரங் கேற்ற வாய்ப்பளித்தால் அவையாகிய நாம் அவற்றை இனங் கண்டு புரிந்து கொள்ள எளிமையாக இருக்கும் என்ற கருத்தில் இப் பாகுபாடு செய்யப்படுகிறது.

இதன்படி வரலாற்றடைவில் முதலில் புதுத் திறனாய்வுக் கோட்பாடுகளையும், அதன் பின்னர் அமைப்பியல் கோட்பாடு களையும் இறுதியாக அமைப்பியல் மருவிய கோட்பாடுகளையும் பற்றிச் சிந்திக்கலாம். இந்த வைப்பு முறை கால அடைவிற் கேற்ப பெறப்பட்டதாயினும், இவை ஒவ்வொன்றும் தனித் தனித் தோற்ற முடிவுகளை உடையனவல்ல. அதாவது புதுத் திறனாய்வுக் கோட்பாடுகள் தோன்றி மறைந்த பின்னர் அமைப் பியல் கோட்பாடுகளோ, அவை மறைந்த பின்னர் அமைப்பியல் மருவிய கோட்பாடுகளோ தோன்றின என்பது பொருளன்று. புதுத்திறனாய்வுக் கோட்பாடுகளின் குறைபாடுகளைச் சுட்டிச் காட்டி அவற்றினும் சிறந்தனவாகத் தம் கோட்பாடுகளை அமைப்பியல்வாதிகள் கூறத்தலைப்பட்டனர். எனினும் புதுத் திறனாய்வுக் கோட்பாடுகள் அறவே கைவிடப்படவில்லை; அவையே சிறந்தன என்று கருதும் அறிஞர்கள் இன்றும் உளர்; இவ்வாறே அமைப்பியல் கோட்பாடுகளுள் பொருத்தமில்லாத சில கூறுகளைச் சுட்டிக் காட்டி, வேறு புதிய கோட்பாடுகள் சிலவற்றை முன் வைத்து ஆராயும் இக்காலத்தே, அமைப்பியல் கோட்பாடுகளையே பெரும்பாலும் பின்பற்றி விவாதிக்கும்

கோட்பாட்டாளர்கள் இன்றும் உள்ளனர். எனவே இம்மூவகைக் கோட்பாட்டரங்குகளும் இன்றும் நடைமுறையில் இருக்கின்றன. எனினும் முதிய தலைமுறையினராகிய மிகச் சிறுபான்மையினர் மட்டும் புதுத்திறனாய்வுக் கோட்பாடுகளை ஆதரிப்போரா கவும், நடுவயதினராகிய பெரும்பான்மையினர் அமைப்பியல் கோட்பாடுகளை ஆதரிப்போராகவும், சிறுபான்மையினராக உள்ள இளைய தலைமுறை அறிஞர்கள் அமைப்பியல் மருவிய கோட்பாடுகளை முன்மொழிந்து சோதனைக் களங்களில் விவாதித்து வருபவராகவும் உள்ளனர்.

ஒவ்வொரு கோட்பாடும் தொடக்கத்தில் தன் உடன்காலச் சுழலுக்கு மிகவும் பொருத்தமுடையாதக் கருதப்பட்டு வர வேற்பைப் பெறுகிறது. காலம் செல்லச் செல்ல மாறி வரும் கலை இலக்கியப் பண்பாட்டுச் சூழல் காரணமாக இக்கோட் பாட்டின் குறைகள் ஒவ்வொன்றாக உணரப்படும். எனினும் அவற்றைப் புறனடைகளாகக் கருதி அதனுள்ளேயே அடக்கிக் காட்டுவர். இவ்வாறு கால அடைவில் ஏற்படும் மாறுதல்களால் புறனடைகள் மூலக் கோட்பாட்டுக் கூறுகளை விட எண்ணிக்கை யிலும் பொருத்தமுடைமையிலும் மிகுந்து தோன்றும். அந் நிலையில் எல்லாப் புறனடைகளையும் தன்னுள் அடக்கிக் காட்ட இயலாமையின், வேறொரு, புதிய கோட்பாடு தோன்ற வேண்டிய சூழல் ஏற்பட்டு விடும். இவ்வாறு சமயம், அரசியல், பொருளாதாரம், கலை மற்றும் இலக்கியம் அறிவியல் போன்ற எல்லாத் துறைகளிலும் கோட்பாடுகள் உள்ளது சிறத்தல் முறையில் (evolution) வளர்ந்து பிறிதொன்றாகி, மேலும் வளர்ந்து பிறதொன்றாகிச் சென்று கொண்டே இருப்பது உலகப் பொருண்மையின் இயற்கையாகக் காணப்படுகிறது. ஹீப்ரு, யூத, பாரசீக, கிரேக்க, பைஜாண்டிய நாகரிகங்களின் வளர்ச்சிக் கோட்பாடும் (gyre theory), தாமஸ் கூனின் அறிவியல் கொள்கைப் புரட்சிக் கோட்பாடும்[2] இந்த வளர்ச்சி முறையைத் தெளிவுபடுத்துகின்றன. முன்னது சமயக் கண் ணோட்டம் உடையது; பின்னது இன்றைய அறிவியல் கோட்பாட்டு வளர்ச்சியை ஆராய்வது. இந்த இருவகைக் கருத்துகளும் மேலே காட்டிய இலக்கிய கோட்பாடுகளின் வளர்ச்சிப் படிநிலைகளை உணர்ந்து கொள்ளப் பெரிதும் துணை செய்யக் காணலாம்.

---

2. காண்க ; Paradigm and paradigm shift in Thomas Kuhn, **The Structure of Scientific Revolutions**, (New York, 1962).

இவ்வாறு உள்ளது சிறத்தல் முறையில் வளர்ந்து இயங்கி வரும் இம்மூவகை இலக்கியக் கோட்பாட்டரங்குகளும் இன்றும் நடைமுறையில் இருக்கும் காரணத்தால் **இக்கால இலக்கியக் கோட்பாடுகள்** என்னும் தலைப்பின்கீழ் இங்கே ஆராயப் பெறுகின்றன.

கோட்பாடுகளை வகுத்துக் கூறுவதற்கு முன்னர் இக்கோட் பாடுகளை அடக்கி நிற்கும் அல்லது இக்கோட்பாடுகளின் ஆய்வுப் பொருளாக இருக்கும் இலக்கியம் என்னும் ஒரு பொருளைப் (object) பற்றியும் சிந்திப்பது தேவையாகிறது. எனவே ''எது இலக்கியம்'' என்னும் ஒரு தனித்த ஆய்வை மேற்கொண்ட பின்னர் இலக்கியக் கோட்பாடுகள் குறித்துச் சிந்திக்கலாம்.

# எது இலக்கியம்?

இலக்கியக் கோட்பாடெனவே இலக்கியத்தைப் பற்றிய கோட்பாடு என்பது தெளிவாகிறது. இத்தெளிவு 'அவ்வா றாயின் இலக்கியம் என்பது யாது?' என்னும் வினாவைத் தோற்றுவிக்கிறது. மொழியை வாயிலாகக் கொண்டு படைக்கப் பெறும் நூல்களுள் எது இலக்கியம், எது இலக்கியம் அல்லாதது என்று இனம் காண்பது எவ்வாறு? இலக்கியம் எனக் கருதப் படும் நூலுக்கும் அல்லாதது என்று கருதப்படும் நூலுக்கும் இடையே அமைந்துள்ள வெளிப்படையான வேறுபாடு யாது? என்னும் வினாக்கள் தொடர்ந்து எழுகின்றன. கோட்பாடு களை ஆராயும் உயர்நிலையில் இத்தகைய வினாக்கள் எளிவந்த னவாக, பிள்ளைமைத்தன்மையுடையனவாகத் தோன்றலாம். ஆனால் இதற்குரிய விடைகளை ஆராயப் புகுந்தால், அவ்வாறு தோன்றவில்லை. அல்லது, மிகச் சிறு குழந்தைகள் கேட்கின்ற வினாக்கள் சிலவற்றுக்கு விடையளிக்க நாம் இடர்ப்படுவதைப் போல், இந்த வினாக்கள் சிறுபிள்ளைத்தனமானவை என்று கொண்டாலும் கொள்ளலாம். எவ்வாறாயினும் மேற்கண்ட வினாக்களுக்கு விடை காண முற்படுவது நம் ஆய்வுக்கு அடிப் படைத் தேவையாக அமைகிறது.

இலக்கியம் என்பது யாது என்னும் இவ் அடிப்படை வினாவை இன்று தான் முதன்முதலில் எழுப்புகிறோம் என்று நான் கருதவில்லை. காலங்காலமாக வந்த பல பண்பாடுகள், பல அறிஞர்கள் இவ்வினாவை எழுப்பி அதற்குரிய பல விடை களை, பல்வேறு விடைகளை அளித்துள்ளனர். அவற்றை யெல்லாம் இங்கே வரலாற்றடைவில் நிரல்படுத்திக் கூற நான் முனையவில்லை. மாறாக, இருபதாம் நூற்றாண்டில் இலக்கிய ஆய்வில் ஈடுபட்டுள்ள அறிஞர்கள் இத்தகைய வினாவிற்கு எவ்வாறு விடையளித்துள்ளனர்; அவை எந்த அளவிற்குப் பொருந்துகின்றன; எந்த அளவிற்குப் பொருந்தவில்லை என்பதை மட்டும் எடுத்துக் காட்டுவதே இங்கு நோக்கமாக அமைகிறது.

இலக்கிய ஆராய்ச்சி வரலாற்றில் காணப்பட்ட விடைகள் சிலவும் இன்றைய அறிஞர்களின் விடைகளில் அடங்கியிருக்கக் காணலாம். சான்றாகச் சில :

1. பொருள்களை வகைப்படுத்திக் காணும்போது ஒவ்வொரு வகைக்கும் உரிய தனிக் கூறுகளைத் துல்லியமாக வேறுபடுத்திக் காண்பது ஓர் அறிஞனுக்குரிய இலக்கணமாகும். இத்தகைய துல்லியமான வேறுபாட்டை அறிந்து கொள்ள இடம் தரும் பொருள்களில் மட்டும் இதனை அறிஞன் மேற்கொள்ளலாம்.[3] (அரிஸ்டாடில்)

2. பாஸ்வெல் : அவ்வாறாயின், ஐய, கவிதை என்பது யாது?

ஜான்சன் : ஐய, எது கவிதை இல்லை என்று கூறுவது மிகவும் எளிது. வெளிச்சம் என்றால் என்ன என்று நம் எல்லோருக்கும் **நன்றாகத் தெரியும்.** ஆனால் வெளிச்சம் என்றால் என்ன என்று எடுத்துச் **சொல்ல** நம்மால் **முடியாது.**[4]

மேலே காட்டிய மேற்கோள்களில் முந்தையது உலக இலக்கியத் திறனாய்வுத் தந்தை என்று போற்றப்பெறும் அரிஸ்டாலின் கூற்று. மானுட அறிவுத்துறைகள் பலவற்றை, உயிரியல், விலங்கியல் உள்ளிட்ட அறிவியல் துறை உட்பட, பாகுபாடு செய்து, வரையறை தந்து விளக்கியவர் அரிஸ்டாடில். மேலே குறிப்பிட்டுள்ள அவருடைய கூற்றிலிருந்து, துல்லியமாக வரையறுக்க இயலாத துறைகளும் சில உண்டு என்பதை அவர் உணர்ந்திருந்தார் என்பது தெளிவாகிறது.

இரண்டாவது மேற்கோள் சாமுவேல் ஜான்சனின் கூற்று. சாதாரண ஆரம்பப்பள்ளி ஆசிரியனாக இருந்து, ஆராத அறிவு

---

3. It is the mark of an educated man to look for precision in each class of things, just so far as the nature of the subject admits. (Nicomachean Ethics)

4. Boswell : Then, Sir, what is poetry?

Johnson: Why, Sir, it is much easier to say what it is not. We all know what light is, but it is not easy to tell what it is.

(Boswell's **Johnson**)

வேட்கையின் காரணமாக இலண்டன் மாநகருக்கு நடந்தே வந்து, நண்பர்களின் உதவியால் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு புத்தகக் கடைகளிலும், பிரபுக்களின் வீடுகளிலும் இருந்த நூல்களையெல்லாம் தாமே முயன்று கற்று, நடமாடும் நூலகமாக விளங்கிப் பல்கலைக் கழகத்தால் 'டாக்டர்' பட்டம் கொடுத்துக் கௌரவிக்கப் பெற்றவர்; உலகத்திலேயே முதன் முதலாகத் தாம் ஒருவராகவே இருந்து தொகுத்தமையால் ''அகராதி ஜான்சன்'' என்றும், இலக்கிய விவாதங்களில் தமக்கு ஈடும் எடுப்பும் இல்லாமல் விளங்கியமையால் ''இலக்கிய எதேச் சதிகாரி ஜான்சன்'' (Johnson, the Literary Dictator) என்றும் தம் காலத்திலேயே புகழ் பெற்ற ஓர் இலக்கிய மாமேதையாகிய சாமுவேல் ஜான்சன், ''எது இலக்கியம் இல்லை என்று கூறுவது எளிது; எது இலக்கியம் என்று உணரலாமே தவிர உணர்த்த இயலாது'' என்கிறார். அரிஸ்டாடில் (கி. மு. 384-322) ஜான்சன் (கி.பி. 1709-1784) என்னும் இரு பேரறிஞர்களின் விடைகளிலிருந்து நாம் எழுப்பிய வினாவின் ஆழத்தையும், சிக்கலையும் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வினாவிற்கு இந்த நூற்றாண்டில் தரப்பட்ட, தரப்படு கின்ற கோட்பாட்டு விடைகளை,

1. வடிவம் அல்லது உருவம்,
2. பாடுபொருள் அல்லது உள்ளடக்கம்,
3. பயன் அல்லது பணி
4. வாசகன் அல்லது வரவேற்பு

என்னும் நான்கு தலைப்புகளின் கீழ் ஆராயலாம்.

### 1. வடிவம்

வடிவம் என்பது யாப்பு வடிவத்தையும், மொழி வடிவத் தையும் குறிக்கும். மொழிவடிவம் என்பது ஒலி, தொடரமைப்பு, சொற்புணர்ப்பு, சொற்கள் ஆகியவற்றைக் குறிக்கும்.

#### செய்யுள்-யாப்பு

இலக்கியம் என்பது செய்யுள் வடிவத்தில் அமைவது என்பது மிகவும் பழைய வரையறை; பயனற்ற வரையறையும் கூட. இலக்கியம் தவிர்ந்த பிறதுறை நூல்களும் யாப்பு வடிவம் பெற்றி

ருப்பதும், மிகச் சிறந்த இலக்கியங்கள் என்று கருதப்படுவன பல உரைநடையில் அமைந்திருப்பதும் இவ்விடையைப் பொருத்த மற்ற தாக்கி விடுகின்றன. எனவே யாப்பு வடிவத்தில் அமைந்தி ருக்கும் ஒரு நூல் இலக்கியம் என்னும் விடை பொருந்தாமையை உணர்கிறோம். எனினும் கலைகளுள் சிறந்தது இலக்கியம்; இலக்கிய வகைகளுள் தலையாயது, தாய் போன்றது கவிதையே என்னும் கருத்துடைய இலக்கிய அறிஞர்கள் பலர் இந்நூற் றாண்டில் இருந்துள்ளனர் என்னும் உண்மையையும் நாம் மறக்க லாகாது.

**கவிதை மொழி**

இனி இலக்கியம் என்பது கவிதை நடையை உடையது; சாதாரண மொழி, மக்கள் அன்றாடம் பயன்படுத்தும் மொழி கவிஞனின் கற்பனைத் திறத்தால் உவமை, உருவகம், உள் ளுறை, அங்கதம், குறிப்பு, முரண்படு மெய்ம்மை, முரண் குறிப்பு, பன்மைப் பொருண்மை என்னும் பல்வேறு கவிதை உத்திகளாக மாறி இலக்கிய மொழியாகப் பரிணமிக்கிறது. சாதாரண மொழிநடையிலிருந்து திரிந்த சொற்றொடர் அமைப்பாலும், தக்க சொல்லாட்சியாலும், அணிநயங்களாலும் வேறுபட்டுப் புதுமையாகத் தோன்றும் கவிதை நடையை உடையது எதுவோ அதுவே இலக்கியம் என்பது இரஷ்ய வடிவ இயலாளரின் கோட்பாடு. கி.பி. 1917இல் வெளியான "Art as Device" என்னும் விக்டர் ஷ்க்லோவ்ஸ்கியின் கட்டுரைதான் முதல்முதலாக இக்கருத்தை வெளியிட்டது. இரஷ்ய வடிவ இயல்கோட்பாட்டைத் தொடங்கி வைத்த பெருமை இவரைச் சாரும். இவர் பிரபலப்படுத்திய புதுமைப்படுத்தல் அல்லது அசாதாரணமாக்குதல் (defamiliarisation) என்னும் கவிதை உத்தி செய்யுளுக்கு மட்டுமின்றி உரைநடைக்கும் உரியது என்பர். எனவே செய்யுள், உரைநடை என்னும் இருவகை இலக்கிய வகைகளும் இந்தப் புதுமைப்படுத்தும் உத்தியால் இலக்கியம் என்னும் தகுதியைப் பெறுகின்றன என்று இவர் காட்டுகிறார்.

இந்தக் கோட்பாட்டாளர்கள் கருத்தில் இலக்கியத்தின் பாடுபொருள் அல்லது உள்ளடக்கம் அவ்வளவாக இன்றியமை யாததன்று; வடிவத்திற்காகவே, சில உத்திகளைப் பயன்படுத்து வதற்காகவே பொருத்தமான பாடுபொருளைக் கவிஞர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். இலக்கியம் பாடுபொருளால் சிறப்படைவதில்லை. உத்தியால் மட்டுமே இலக்கியத் தன்மை (literariness) உருவாகிறது என்று இவர்கள் கருதுகின்றனர்.

ஒரு கூற்று (utterance or text) இலக்கியம் என்று கருதப்பட வேண்டுமானால் அது இலக்கியத் தன்மை பெற்றிருக்க வேண்டும் என்பதும், மொழியை மேலே கூறிய உத்தி வகைகளால் புதுமைப்படுவதால் (defamiliarize) அல்லது சாதாரண மொழி நடையிலிருந்து சேய்மைப்படுத்துவதால் (estrangement) இத் தகைய இலக்கியத் தன்மை உருவாகும் என்பதும் இவர்கள் கோட்பாடு. இதனைச் சற்றுச் சிந்தித்துப் பார்ப்போம்.

சாதாரண மொழி என்பது ஒன்று இருக்கிறது. அதிலிருந்து சேய்மைப்படுத்தினால் கவிதைமொழி உருவாகிறது என்னும் இவர்களது கருத்து வலுவுடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் காலம், இடம், மக்களுடைய சமுதாய அந்தஸ்து எனப் பலவகைக் காரணங்களால் ஒரு மொழி சேய்மைப்படும் வாய்ப்பினைப் பெறுகிறது. பதினேழு அல்லது பதினெட்டாம் நூற்றாண்டில் எழுதப் பெற்ற ஒரு சாதாரணச் செய்தியின் மொழிநடை இன்று நமக்குச் சேய்மைப் பட்டதாக விளங்கு கிறது. நாகர்கோயில் தமிழ்நடை சென்னை வாசிகளுக்குச் சேய்மைப் பட்டதாக அமைய சென்னைத் தமிழ் கொங்கு நாட்டார்க்கு மிகவும் சேய்மைப்பட்ட, புதுமைப்படுத்தப் பெற்ற மொழியாக உணரப்படுகிறது. இதற்காக இந்த வேறுபட்ட வழக்குகளில் எழுதப்படுவன வெல்லாம் இலக்கியம் என்று கொள்ளத் தகுமா என்று எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது.

மேலும் சாதாரண மொழி என்று ஒரு வடிவம் இருப்பதாகக் கருதுவதும் ஒரு மாயைதான். ஒரு பகுதியினர்க்குச் சாதாரண மொழியாக இருப்பது மற்றொரு பகுதியினர்க்கு அசாதாரண மொழியாக அமைகிறது. ஒரு காலத்தே சாதாரண மொழி யாக இருப்பது மற்றொரு காலத்தே சாதாரணமற்றதாக உணரப்படுகிறது.

இனி இந்தச் சேய்மைப் படுத்தலும், புதுமைப்படுத்தலும் தொடரமைப்பில் கவிஞனால் செய்யப்படுகிறது என்னும் அவர்கள் கருத்தையும் ஆராயலாம். 'கற்பினுக்கு அணியைக் கண்களால் கண்டனன்' என்னும் சாதாரணத் தொடர மைப்பைக் 'கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்' என்று மாற்றியவுடன் கவிதைத் தன்மை பிறந்து விடுவதை இவர்கள் சான்றாகக் காட்டுவர். அதாவது இத்தகைய பிறழ்ச்சித் தொடரமைப்பைக் (deviated structure) காட்டுவர். இத்தகைய தொடர்கள் இலக்கியங்களில் காணப்படுதல் உண்மையேயாயி னும், சாதாரண மக்களின் பேச்சு மொழியிலும் இத்தகைய

பிறழ்ச்சிகள் வழங்கப்படுவதைக் காணலாம். 'தொட்டான் சீதையை, கெட்டான் இராவணன்' என்பது போன்ற முது மொழிகளும், 'வந்துட்டான் ரொம்ப வக்கணையா பேசறதுக்கு' என்பது போன்ற பேச்சு வழக்குத் தொடர்களும் பிறழ்ச்சிகளே யாயினும் இவற்றை நாம் இலக்கியமாகக் கருதுவதில்லை என்பது வெளிப்படை. எழுத்துத் தமிழிலும், சில மொழி பெயர்ப்புகளும், இக்கால உரைநடை எழுத்தாளர்கள் சிலரது தமிழ்த் தொடர்களும், இத்தகைய பிறழ்ச்சிகள் பலவற்றை ஒலியளவிலும், தொடர் அமைப்பளவிலும் பெற்றிருக்கக் காண் கிறோம். அதற்காக இவற்றைக் கவிதைமொழி என்று கூற முடியுமா?

இனி உவமை, உருவகம், ஆகுபெயர் போன்ற அணிகளால் நிரம்பிய மொழி நடையை உடையது இலக்கியம்; பன்மைப் பொருண்மை, முரண்குறிப்பு, ஓரளவு இருண்மை போன்ற உத்தி கள் உடையது இலக்கியம் என்னும் புதுத் திறனாய்வாளர்களின் கோட்பாட்டைச் சற்று நோக்குவோம்.

மேலே கூறிய உத்திகள் எல்லாம் சிறந்த இலக்கியங்களில் காணப்படுதல் உண்மையே யாயினும், இவை அமைந்திருக்கும் கூற்றுகளெல்லாம் (texts) இலக்கியமாய் விடுமா என்பது வினா. உவமை, உருவகம், ஆகுபெயர் போன்ற அணிகள் எல்லாம் சாதாரணமாகப் பேச்சு வழக்கிலேயே செறிந்து கிடக்கக் காண லாம். உள்ளுறை உவமம், இறைச்சி போன்ற உத்திகள் கூடப் பேச்சு வழக்கில் இல்லாமல் இல்லை. ''எல்லார்க்கும் நல்லதைச் சொல்லிக் கழுநீர்ப் பானையில் விழுந்ததாம் பல்லி'' என்பன போன்று வழங்கும் பேச்சுமொழிக் கூறுகளை இங்கே நினைத்துப் பார்க்கலாம். இருண்மைப் பண்பு சித்தர் பாடல்களிலும் சித்திரக் கவிகளிலும், மடக்கு போன்ற அலங்காரப் பகுதிகளிலும் மேலும் சட்ட நூல்களிலும், தத்துவ நூல்களிலும் நிறைந்திருப்பதை அறிவோம். எனினும் இவற்றை யெல்லாம் நல்ல இலக்கியங்களுக்குரிய எடுத்துக் காட்டுகளாக இன்று நாம் காட்டுவதில்லை. ''இங்கே புகை பிடிக்கக் கூடாது'', ''இங்கே சாலையைக் கடக்கக் கூடாது'' என்னும் வாசகங்கள் தரும் முரண் குறிப்புப் பொருளால் (irony) அவற்றை இலக்கியம் என்று கூறலாமா? ''நாய்கள் ஜாக்கிரதை'' என்னும் தொடர் பன்மைப் பொருண்மை உடையது என்பதால் இலக்கியமாகக் கருதத் தக்கதா என்றெல் லாம் சிந்திக்க வேண்டியவர்களாக உள்ளோம்.

இதுவரை கூறியதிலிருந்து, யாப்பு வடிவமோ, மொழியாட்சியோ மட்டும் இலக்கியம் என்னும் தகுதியை ஒரு கூற்றுக்கு அல்லது படைப்புக்குத் தந்து விடுவதில்லை என்பது தெளிவாகிறது. எதுகை, மோனை போன்ற ஒலி நயங்களும், அணிகளும், பிற இலக்கிய உத்திகளும் இலக்கியங்களிற் காணப் படுவது உண்மையாயினும், இக்கூறுகள் ஒரு மொழியின் இலக்கிய மல்லாத பிறவழக்குகளிலும் காணப்படுகின்ற காரணத்தால் எது இலக்கியம் என்னும் வினாவிற்கு இரஷ்ய வடிவ இயல் கோட்பாடும் புதுத் திறனாய்வுக் கோட்பாடும் தரும் விடைகள் முற்றிலும் பொருந்துவனவாக இல்லை என அறிகிறோம்.

## 2. பாடுபொருள்-உள்ளடக்கம்

இலக்கியம் என்பது கற்பனையால் விளையும் பாடுபொருளை உடையது (fictitive) ; உள்ளடக்கம் யதார்த்தப் பொருண்மையிலிருந்தும் அன்றாட நடைமுறைப் பயன்பாட்டிலிருந்தும் விலகியிருக்கும் பாங்கினது (non-pragmatic); இலக்கியம் ஓர் உருவாக்கம்; படைக்கப்படுவது (creation). எது இலக்கியம் என்னும் வினாவிற்கு அளிக்கப்படும் மேற்கண்ட விடை மேலும் சில வினாக்களைத் தோற்றுவிக்கிறது.

கற்பனைப் பொருண்மை உடையது இலக்கியமாயின், கற்பனைப் பொருண்மை உடையனவெல்லாம் இலக்கியம் என்னும் தகுதியைப் பெறுமா என்னும் வினா எழுகிறது. தேவர் நரகர், சொர்க்கம், நரகம் என்னும் பொருள் பற்றி எழுந்துள்ள நூல்கள் எல்லாம் இலக்கியங்களா? பிளேட்டோவின் **குடியரசும்,** தாமஸ் மூரின் **யுதோப்பியாவும்** இலக்கிய வரிசையில் சேருமா? அல்லது கற்பனைப் பொருண்மையற்ற நூல்கள் எவையும் இலக்கியமாகாவா? புறநானூற்றுப் பாடல்களுள் பலவும், திருக்குறளின் முதலிரண்டு பால்களும் அல்லது இந்த நூற்றாண்டில் எழுந்த சுப்பிரமணிய பாரதியாரின் நாட்டுப் பாடல்களும், மொழிப் பாடல்களும் இலக்கியங்கள் ஆகாவா? எனப் பல்வேறு வினாக்கள் நம் மனத்தே தோன்றுகின்றன.

இனி, யதார்த்தப் பொருண்மையிலிருந்து விலகி அன்றாட நடைமுறைப் பயன்பாட்டிற்கு உதவாதது இலக்கியம் என்னும் விடை' முந்தைய விடையோடு தொடர்புடையது. எனவே மேலே காட்டியவாறு மீமானுடம் பற்றி எழுந்துள்ள நூல்களும், குறிக்கோள் உலகம் பற்றி எழுந்துள்ள நூல்களும் இலக்கியம் என்னும் தகுதியைப் பெறுமா என்னும் வினா மீண்டும் எழுந்து இவ்விடையின் பொருத்தமின்மையைச் சுட்டி நிற்கிறது. மேலும்

நடைமுறைப் பயன்பாட்டிற்கு உதவாதது என்னும் கருத்தும் வலுவுடையதாகத் தோன்றவில்லை. முற்றிலும் கற்பனைப் பொருண்மையே உடைய நூல்கள் நடைமுறை வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படுவதில்லை என்பது உண்மையேயாயினும், நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படும் சில நூல்களை இலக்கியம் அல்ல என்று ஒதுக்குவது ஏற்றுக் கொள்ளக் கூடிய கருத்தா என்றும் சிந்திக்க வேண்டியுள்ளது, காட்டாக,

> யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
> சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு (127)

எனவும்,

> ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை
> போகாறு அகலாக் கடை (478)

எனவும்,

> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே (புறம். 187)

எனவும் வரும் கூற்றுகள் மானுட வாழ்க்கையின் நடைமுறைக்குப் பயன்படாதன என்றோ, இக்கூற்றுகள் இலக்கியமாகா என்றோ கூற இயலுமா? அல்லது கற்பனைப் பொருண்மையே உடைய 'பஞ்ச தந்திரக் கதைகள்' நடைமுறையைச் சுட்டாமல், அதாவது மனித வாழ்க்கையின் கூறுகளைச் சுட்டாமல் விலங்குகளுக்குப் பயன்பட வேண்டும் என்று எழுதப் பட்டனவா? என்றெல்லாம் சிந்திக்க நேர்கிறது.

இனி, யதார்த்தமற்றதும், நடைமுறைப் பயன்பாடற்றதும் இலக்கியம் என்னும் கருத்து பிறிதொரு தடையினையும் எதிர் கொள்ள நேர்கிறது. அதாவது, வானியற்பியல் (astrophysics), அணுவியற்பியல் (nuclear physics), அணுக் கொள்கை (atomism), உயர் கணிதம் (Pure mathematics) போன்ற பொருள் பற்றி எழுந்துள்ள கூற்றுகள் எல்லாம் அன்றாட நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படாதன என்று பொதுவாக உணர்கிறோம். எனவே இவற்றை இலக்கியம் என்று ஏற்றுக் கொள்ளலாமா? யாராவது இலக்கியம் என்று இவற்றைக் கொள்ளுகிறார்களா?

மேலும், யதார்த்தமற்றது, நடைமுறைக்குப் பயன்படாதது என்னும் கருத்தீடும் ஒரு கூற்றின் அகப்பொருண்மை அன்று (not intrinsic). ஒருவர்க்கு நடைமுறைப் பயன்பாடற்றது, வேறொருவர்க்கு நடைமுறைப் பயன்பாடுடையதாக இருக்

கலாம். நமக்கு யதார்த்தமாகப்படுவது மற்றவர்க்கு யதார்த்த மற்றதாகப் படுகிறது. உடலுக்கு யதார்த்தமாகப் பொருந்துவது உயிருக்கு மாயையாகத் தோன்றுகிறது.[5] எனவே இந்த விடை, ஒரு கூற்றின் பொருண்மையைப் பற்றியதாக அமையாமல் அது சென்று சேரும் அல்லது அதனை வரவேற்கும் வாசகரின் மனப்பாங்கு பற்றியதாக அமைந்து விடுவதால் ஒரு முழு வரையறை உடையதாக அமையவில்லை. மொழியின் தன்னோக்கியல்பு (Self-referential nature of language) என்னும் இரஷ்ய வடிவ இயல்வாதமும், ஒரு கூற்றின் (text) பொருண்மை தன்னுள்ளேயே அடங்கியுள்ளது (Self Contained) என்னும் ஆங்கிலேய-அமெரிக்கப் புதுத்திறனாய்வு வாதமும் இத்தகைய இலக்கிய வரையறையை முன் வைத்துப் பேசின. இக்கருத்தின் பொருத்தமின்மை அடுத்த இயலில் விரிவாகப் பேசப் பெறுகிறது.

### 3. இலக்கியப் பயன் / பணி

ஒரு கூற்று அல்லது படைப்பு அது அளிக்கும் பயனால் அல்லது அது ஆற்றும் பணியால் இலக்கியம் என்று இனம் கண்டு கொள்ளப்படுகிறது என்பது இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்த ஒரு கோட்பாடு. ஒரு படைப்பு ஆற்றும் முருகியற் பணியால் அதனை இலக்கியம் என்று கொள்ளலாம் என்று புதுத் திறனாய்வுக் கோட்பாடு கருதுகிறது. இத்தகைய முருகியற் பணியை இலக்கியம் தவிர்ந்த பிற நூல்கள் ஆற்றுவதில்லை என்பது இவர்கள் கோட்பாடு. எனினும் இலக்கியம் தரும் இந்த முருகியல் நுகர்ச்சி இலக்கியத்தில் மட்டும் இல்லை; பிற கூற்றுகளிலும் உண்டு என்று மறுப்பர் இரஷ்ய வடிவியலாளர். ஒரு சொற்பொழிவாளரின் பேச்சு. மக்கள் தமக்குள் அன்றாடம் நிகழ்த்திக் கொள்ளும் உரையாடல்கள், செய்தித்தாள்களில் வரும் சில கட்டுரைகள், விளம்பரங்கள், சில அறிவியல் ஆய்வுகள் போன்றனவும் முருகியற் பணியை ஆற்றுவனவாக இவர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.[6]

---

5. ''உடற்கழு தனையோ உயிர்க்கழு தனையோ'' (23:73) என்னும் மணிமேகலைப் பகுதி இங்குச் சிந்திக்கத் தக்கது, Realism and Surrealism என்னும் கோட்பாடுகளும் இத்துடன் இணைத்து நோக்கத் தக்கன.

6. Roman Jakobson, ''The Dominant'', **Twentieth Century Literary Theory** ed. K.M. Newton (New york : St. Martins Press, 1988) P. 27.

மேலும் ஓர் இலக்கியப் படைப்பு முருகியற் பணியை மட்டுமே செய்வதில்லை. மொழி சார்ந்த பிற பணிகளையும் செய்கின்றது. தத்துவம், சமுதாய ஒழுகலாறுகள், நீதிகள் போன்ற பிற பணிகளையும் இவை ஆற்றுகின்றன. இதனால் சில இடங்களில் இவை பண்பாட்டு வரலாறாகவும், வாழ்க்கை வரலாற்று நூலாகவும், ஒரு சமுதாயத்தின் உள்ளார்ந்த உறவு களைக் கூறுவனவாகவும் பயன்படுகின்றன; பணி செய்கின்றன என்றும் சில வடிவ இயலாளர்கள் புதுத் திறனாய்வுக் கோட் பாட்டை மறுத்துரைக்கின்றனர். இவ்வாறு பன்முகப் பணி உடையதாகக் காணப்படினும், இலக்கியம் என்பது முருகியல் நுகர்வுப் பணியையே தலைமைப் பண்பாகக் கொண்டிலங்கு கின்றது என்று முன்னணி வடிவ இயலாளர் கருதுகின்றனர்.[7]

ஓர் இலக்கியம் ஆற்றும் பணி அல்லது அளிக்கும் பயனை அடிப்படையாகக் கொண்டு இலக்கியத்தை இனம்காணக் கூறப் படும் மேற்காட்டிய விடைகள் புதுத் திறனாய்வு, வடிவ இயல், அமைப்பியல் என்னும் மூவகைக் கோட்பாட்டரங்குகளாலும் தரப்படுகின்றன. இவற்றுள் எந்த ஒரு விடையும் தனியே நின்று இலக்கியத்தை இனங்கண்டு கொள்ள உதவாது என்பது வெளிப் படை. இவை எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக இலக்கியப் படைப்பு திகழ்வதை நாம் அனுபவத்தின் வாயிலாக வாசகர் என்ற முறையில் உணர்கிறோம்.

மேலும் இந்த விடைகள் நம்மைப் படைப்பிலிருந்து வாச கனிடம் கொண்டு செல்வதைக் காணலாம். இதுவரை கண்ட மூவகை விடைகளும், அதாவது உருவம், உள்ளடக்கம், இலக் கியப் பணி அல்லது பயன் ஆகியவற்றை உளப்படுத்தித் தரப் பட்ட விடைகள், ஒரு படைப்பைத் தனித்து வைத்து ஆராய் வதால் விளைந்தனவாகும். இவற்றுள்ளும் மூன்றாவது விடை படைப்பை விட்டு வாசகனை நோக்கி நகர்வதை உணர்கிறோம். அடுத்து வரும் தலைப்புக்கு இம்மூன்றாவது விடையே தோற்று வாயாக அமைந்து விடுகிறது.

### 4, வாசகனின் வரவேற்பு

ஒரு படைப்பின் அல்லது கூற்றின் வடிவக் கூறுகளோ, மொழியாட்சியோ "எது இலக்கியம்" என்னும் வினாவிற்குத்

---

7. Roman Jakobson, "The Dominant", **Twentieth Century Literary Theory** ed. K.M. Newton (New york : St. Martins Press, 1988) P. 27.

தெளிவான விடையளிக்கப் பயன்படவில்லை. அவ்வாறே, ஒரு கூற்றின் அல்லது படைப்பின் உள்ளடக்கமாகிய பாடுபொருளும் இலக்கியம் இன்ன தன்மைத்து என்று வரையறுக்கப் பயன்பட வில்லை. ஆக ஒரு படைப்பு (உருவமும் உள்ளடக்கமுமாகச் சேர்ந்து) தன்னை இலக்கியம் என்று வரையறுத்துக் காட்டும் பொருண்மையை அல்லது பண்பைத் தன்னளவில் மட்டும் பெற்றிருக்கவில்லை என்பது தெளிவாகிறது.

எனவே எது இலக்கியம் என்னும் வினா, அதனைத் துய்க்கும் வாசகனை நோக்கி எழுப்பப்படுகிறது. வாசகன் எதனை இலக்கியம் என்று கருதுகிறான்; எந்த அடிப்படையில் அவ்வாறு கருதுகிறான் என்று இரு பிரிவாக இதனை ஆராயலாம்.

**வாசகன் நோக்கில் இலக்கியம்**

படைப்புகளில் இலக்கியத்தன்மை தானே வெளிப்படாதது போலவே, படைப்பாளியும் (இக்காலப் படைப்பாளியைத் தவிர) தன் படைப்பு எந்த இனத்தைச் சார்ந்தது என்று பெரும்பாலும் தாமே கூறுவதில்லை. சிலர், இக்காலத்தே பலர், தம் படைப்பு இன்ன இலக்கிய வகையைச் சார்ந்தது என்று தாமே குறிப்பிட்டாலும், படைப்புகளை நுகரும் வாசகன் அவற்றை எவ்வாறு கருதுகிறான் என்பதை ஆராய்வது மிகவும் சுவையானதொரு பயிற்சியாகும்.

பைபிளை எழுதியவர்கள் அதனை இலக்கியம் என்றோ, பண்பாட்டு வரலாறு என்றோ, தத்துவம் என்றோ, சமயநூல் என்றோ குறிப்பிடவில்லை. ஆனால் பின்வந்த வாசகர் இதனை இலக்கியமாகவும் கருதினர்; இன்றும் கருதுகின்றனர். பல்கலைக் கழக இலக்கியப் பாடத்திட்டத்தை நோக்கினால் இது விளங்கும். தொன்மவியலாரும், பண்பாட்டு வரலாற்றாசிரியரும், மானுடவியலாரும், தத்துவவாதியரும் பைபிளைத் தத்தம் துறைக்குரிய நூலாகக் கருதுகின்றனர். இங்கே வாசகன் என்று குறிப்பிடுவது வெறும் எழுதப் படிக்கத் தெரிந்தவரையல்ல; அவ்வத்துறையில் கற்றுப் புலமை நிறைந்த அறிஞரையே கருதுகிறோம். இவ்வாறே ஹோமரும் தம் படைப்புகளை அல்லது படைப்பைக் காப்பிய இலக்கியம் என்று கூறவில்லை. ஆனால் இலக்கியவாதிகள் அவற்றை இலக்கியமாகக் கொள்ளுகின்றனர். புகழ்பெற்ற ஜெர்மானிய அகழ்வாராய்ச்சி அறிஞர் கிளிமான்சோ அதனை வரலாற்று ஏடாகக் கருதிப் பலமுறை மனப்பாடமாகப் படித்து அதன் (Iliad) அடிப்படையில், புதைந்து கிடந்த மூன்றடுக்கு டிராய் நகரத்தைத் தோண்டி

எடுத்துள்ளார். அவருக்கு அது வரலாறு தான்; புனை கதையன்று. இனி ஜான் பனியனின் ''பில்கிரிம்ஸ் புரோக்ரஸ்'' (Pilgrim's Progress) என்னும் நூல் கிருத்துவ சமயத்தின் கடைப்பிடிக்கோட்பாட்டு நூலாகக் கருதப்படுகிறது. ஆனால் ஆங்கில வாசகர் உலகம் அதனை அருமையானதொரு இலக்கியமாகக் கருதி இன்றும் பயில்கிறது. பிரான்சிஸ் பேகனின் கல்வியியல் கட்டுரைகளும் (Advancement of Learning), அறிவுரைக் கொத்தும் (Bacon's essays) இலக்கியம் என்று அவர் கூறவில்லையாயினும், இன்றும் அவை இலக்கியப் பாடங்களாகக் கொள்ளப்பட்டு வருகின்றன. இவ்வாறு பல எடுத்துக்காட்டுகளை மேலை இலக்கிய உலகிலிருந்து காட்டலாம்.

நம்முடைய இலக்கிய மரபிலும் இத்தகைய நிலை காணப்படுகிறது. தனிப்பட்ட வாசகர், அறிஞர் தம் காலப் படைப்புகளை எவ்வாறு மதித்தனர் என்பதை அறிதற்குரிய வரலாற்றுக் குறிப்புகள் நமக்கு மேலை நாடுகளைப் போல மிகுதியும் இல்லையாயினும், சிறப்புப் பாயிரங்கள், சாற்றுக்கவிகள் என்னும் வடிவில் நம்மிடையேயும் சில குறிப்புகள் நிலை பெற்றுள்ளன. காட்டாகச் சிலவற்றைக் காணலாம்.

1. திருவள்ளுவ மாலை என்னும் பாடல் தொகுப்பு திருக்குறளைப் பற்றி நமக்குக் கிடைத்திருக்கிற முதல் மதிப்பீட்டுத் திறனாய்வு எனலாம். இதிலுள்ள பல பாடல்கள் திருக்குறளின் தனிப்பெருமையைப் பலபடப் பாராட்டிப் பேசுகின்றன. சில பாடல்கள் அக்கால அறிஞர் எவற்றை நல்ல இலக்கியங்களாகக் கருதினர் என்பதைக் கூறுமுகத்தான் அக்கால வாசகர்எது இலக்கியம் என்று இனங்காட்டியுள்ளனர் என்பதையும் அறிய முடிகிறது.

> நாடா முதல்நான் மறைநான் முகன்நாவில்
> பாடா இடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
> எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாற, பின்
> வள்ளுவன் வாயதென் வாக்கு. (நாமகள்),
>
> (திருவள்ளுவ மாலை-2)

(ஆதிகாலத்திலே நான்முகன் வாயால் வேதங்களைக் கூறினேன்; இடைக்காலத்திலே பாரதம் பகர்ந்தேன்; இக்காலத்திலே என்வாக்கு திருவள்ளுவரின் திருக்குறளாக மலர்ந்துள்ளது என்று நாமகள் கூறுகிறாள்.)

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்-முப்பாற்குப்
பாரதம்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். (பாரதம் பாடிய
பெருந்தேவனார்)
(திருவள்ளுவ மாலை-30)

(வள்ளுவர் மொழிந்த திருக்குறளுக்கு ஒப்பாகப் பாரதம், இராமாயணம், மனுநூல், பழையவேதம் ஆகியவற்றை மட்டுமே கூறலாம்; பிறவெல்லாம் ஒப்பாகமாட்டா என்று பாரதம் பாடிய பெருந்தேவனார் கருதுகிறார்.)

திருவள்ளுவ மாலையில் காணப்பெறும் புலவர்களின் தனித் தனி காலத்தை அறிய வாய்ப்பில்லை. எனினும் தமிழ் நூல்கள் தொகைப்படுத்தப் பெற்ற காலமாகிய கி.பி. ஐந்தாம் நூற்றாண்டளவில் இம்மாலை தொகுக்கப் பெற்றிருக்கலாம். அதாவது பக்தி இயக்கக் காலத்திற்கு முந்திய நூலாக இதனைக் கருதலாம். இக்காலத்தே இருந்த தமிழறிஞர் இலக்கியங்களாக எவற்றைக் கருதினர் என்ற செய்தி இப்பாடல்களால் புலனாகிறது. இச்செய்தியிலிருந்து மேலும் இரு கருத்துகள் வெளிப்படுகின்றன. ஒன்று வேதமும், மனுஸ்மிருதியும் இதிகாசங்களோடும், திருக்குறளோடும் ஒப்ப வைத்து எண்ணப்பட்டுள்ளன; எனவே அவர்கள் எது இலக்கியம் என்று கருதினர் என்று சிந்திக்கும் போது நாம் இதுவரை விவாதித்த கருத்துகள் எவையும் அவர்கள் பார்வையில் இலக்கியம் சார்ந்தனவாகத் தோன்றவில்லை. மற்றொன்று, சங்கம் மருவிய இக்காலத்தேயும் அதற்கு முன்னரும் தோன்றிய தொல்காப்பியம், சங்கப் பாடல்கள், சிலப்பதிகாரம், நாலடியார் போன்றன இவ் அறிஞர்களால் இலக்கியங்களாகக் கருதப்படவில்லை.

2. தமிழ்ப் பண்பாட்டு வரலாற்றின் இடைக்காலத்தே, அதாவது சமயச் சாத்திர நூல்கள் தோன்றிப் பல்கிய உரையாசிரியர் காலத்தே (கி.பி. 13 முதல் 15 ஆம் நூற்றாண்டு வரை) இருந்த பெயரறியப்படாத அறிஞர்களின் கூற்றாக இரு பாடல்கள் காணப்படுகின்றன :

தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

வள்ளுவர்நூல் அன்பர்திரு வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை-ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகைசித்தி யோராறும்
தண்டமிழின் மேலாந் தரம்.

இவற்றுள் முதல் பாடல், திருக்குறள், வேதாந்தங்கள், மூவர் தேவாரம், முனிமொழி, திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம் ஆகியன ஒரே தரத்தினவாய நூல்கள் என்று கூறுகிறது. இரண்டாவது பாடல், திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், பரிமேலழகர் உரை, பெரிய புராணம், சிவஞான சித்தியார் ஆகிய ஆறும் தண்டமிழ் இலக்கியத்தின் தலைசிறந்த நூல்கள் என்று கூறுகிறது. இவற்றை ஒப்பிட்டு நோக்கினால், சற்று முற்காலத்ததாக இருக்கலாம் என்று கருதுதற்குரிய முதற்பாடல் தொல்காப்பியம், சங்க நூல்கள், சிலப்பதிகாரம் போன்றன குறித்து எதுவுமே கூறவில்லை. இரண்டாவது பாடல் தேவாரத்தைச் சேர்க்கவில்லை; முன்னையதைப் போலன்றித் தொல்காப்பியத்தைச் சேர்த்துக் கூறுகிறது. எனினும் சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், சிந்தாமணி போன்ற பெருநூல்களைச் சேர்த்துக் கூறவில்லை. ஆனால் ஓர் இலக்கிய உரையைச் சேர்த்துக் கூறியுள்ளது.

சைவ சமய அறிஞரின் கருத்தாக இப்பாடல்கள் காணப்படுவது உண்மை. எனினும் ஒன்றில் தேவாரம் சேர்க்கப் படாமையும், மற்றொன்றில் இலக்கிய வகையாகவே கருதப்படும் திருக்கோவையார் சேர்க்கப் படாமையும் சிந்திக்கத்தக்கது. இக்காலகட்டத்திலும் இலக்கிய நூல்களும், பக்திப் பாடல்களும், வேதமும், இலக்கண நூலும், சாத்திர நூலும், ஏன் உரையும் கூடத் தரமான தமிழ் நூல்களாகத் தொகுத்துக் கூறப்பட்டிருப்பதை நோக்கினால், இடைக்காலத்தே எதை இலக்கியம் என்று கருதினர் என்று தெளிவாக அறிய இயலவில்லை.

3. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தே (1901) எழுந்த நான்காம் தமிழ்ச்சங்கம் தமிழுக்குக் **கதி** என்று கம்பராமாயணத்தையும், திருக்குறளையும் கருதியது. அந்தக் காலத்தே சங்க நூல்களும், தொல்காப்பியமும், சிலப்பதிகாரமும் அச்சில் வெளிவர தொடங்கியிருந்தன. எனினும் அவர்கள் இவற்றைச் சேர்த்துக் கூறவில்லை. இலக்கியம் என்பது குறித்த விதாதங்களும் அக்காலத்தே அறிஞர்களிடையே இடம் பெற்றிருந்தது.

4. இந்த நூற்றாண்டின் நாற்பது, ஐம்பது தொடங்கி, அதாவது தமிழ் மறுமலர்ச்சியின் அறுவடைக் காலத்தில் சங்க

இலக்கியம், தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், பாரதியார் கவிதைகள், பின்னர் பாரதிதாசன் நூல்கள் தமிழ் இலக்கிய வரிசையில் முதலிடத்தைப் பெறலாயின.

இங்கே சான்றுகளாகப் பார்த்த நான்கு கால கட்டங்களில் தமிழ் வாசகர் எவ்வெவற்றை இலக்கியங்களாகத் தேர்ந்து எடுத்துக் கூறினர் அல்லது போற்றினர் என்பதைப் பார்க்குமிடத்து, எது இலக்கியம் என்று எந்த அடிப்படையில் அவர்கள் வகைப்படுத்தினர் என்று அறிய இயலவில்லை.

இவ்வாறு எது இலக்கியம் என்று தீர்மானிப்பதில் வாசகர் காலந்தொறும் வேறுபட்டு நிற்பதை ஆராயுமிடத்துச் சில கருத்துகள் முன்வந்து நிற்கின்றன. இலக்கியப் பண்பு என்று ஒன்று நூலுள்ளேயே அடங்கியிருக்குமானால் இத்தகைய வேறுபட்ட கருத்துகள் தோன்ற வழியில்லை. சில நூல்களை இலக்கியம் என்று ஒரு தலைமுறை கருதுகிறது; வேறு சில நூல்களை அடுத்த தலைமுறை இலக்கியமாகக் கருதுகிறது. இலக்கியம் எது என்பதற்குத் தெளிவான வரையறையை வாசகர் வெளிப்படையாகக் கூறவில்லையேனும், சில குறிப்பிட்ட நூல்களை மட்டும் இலக்கியங்களாக இனம் கண்டு போற்றுவதைக் காண்கிறோம். இலக்கிய நூல்களுக்குள்ளாகவே உயர்ந்தது, தாழ்ந்தது என்னும் வேறுபாட்டை நான் இங்கே குறிக்கவில்லை. இன்னின்ன நூல்கள் இலக்கியத் தன்மையுடையன என்று பிரித்துணர்வதில் வாசகர்கள் வேறுபட்ட கருத்துடையவர்களாக உள்ளனர் என்பதை மட்டுமே இங்குத் தெளிவுபடுத்த முயல்கிறேன்.

அரிஸ்டாடில் குறிப்பிடுவதைப்போல், இலக்கியம் துல்லியமான ஒரு வரையறைக்கு உட்படவில்லை என்பது மட்டும் இங்கே தெளிவாகிறது. தத்துவ மேதைகள் குறிப்பிடுவதைப் போல, இலக்கியம் என்பது ஒரு தொழிற்படு கலைச் சொல்லே (functional term) தவிர, அதன் உண்மையை அதாவது இருப்பைக் (existence) குறிக்கும் பொருண்மைக் கலைச்சொல் (ontological term) அன்று. அதனால்தான் ஜான்சனே, அகராதி தயாரித்த ஜான்சனே எது இலக்கியம் என்று கூறுவது இயலாது; ஆனால் உணர முடியும் என்று கூறுகிறார் போலும். டெரி ஈகிள்டன் ஓர் அழகான உவமையைப் பயன்படுத்தி இந்தச் சிக்கலை இனங் காட்டுகிறார். ‘இலக்கியம்’ என்பது ‘களை’யைப் போல என்கிறார் ஈகிள்டன். களை என்றால் என்ன என்று வரையறுக்க. இயலாது; ஆனால் எது களை, எது

பயிர் என்று விவசாயியால் பிரித்துணர முடியும் என்று கூறுகிறார்.[8]

இலக்கியத்துக்குக் 'களை' எதிர்மறையாக உவமையாகிறது என்கிறார் ஈகிள்டன். அதாவது பயனற்ற களையை வரை யறுக்க ஒரு விவசாயியால் முடியாவிடினும் களைகளைக் கண்டு பிடித்துப் பிடுங்கி எறிவதில் அவன் தவறுவதில்லை; அதுபோலப் பயன்படுகின்ற பயிர் போன்ற இலக்கியங்களை வாசகர்கள் வரையறுக்க இயலாவிடினும், தத்தம் காலத்துக் கோட்பாடு களுக்கேற்பப் பிரித்துணர்ந்து போற்றுகிறார்கள் என்று கூறு கிறார். ஜான் எல்லிசின் உவமையாகிய களையைக் கையாளும் ஈகிள்டன், பயிர், களை என்பனவற்றைப் பொருண்மைக் கலைச் சொற்களாகக் கருதிவிட்டார் போலும். அதாவது பயிர்-பயன் படுவது; களை - பயன்படாதது அல்லது பயன்படும் பயிரை அழிப்பது அல்லது அதன் வளர்ச்சியைத் தடுப்பது என்று அவற் றிற்குக் கொள்ளப் பெறும் பொதுவான சொற்பொருள் இவ் வாறு அவரை எண்ணச் செய்திருக்கலாம்.

ஆனால் உண்மையில் இலக்கியம் போன்று இவை இரண்டுங் கூடத் தொழிற்படு கலைச்சொற்களே என்று கூறலாம். எவ்வா றெனில், நெற்பயிரிடும் வயலில் கம்பு முளைத்திருந்தால் அது களை எனக் கருதப் பெற்று நீக்கப்படும்; கம்பு பயிராகும் கொல்லையில் நெல்லோ, சோளமோ விதைக்காமலே முளைத்தி ருக்குமானால் அவை களை என்று கருதப்பட்டுப் பிடுங்கி எறியப் படும். மாட்டுத் தீவனம் பயிரிடும் வயலில் கடலைச் செடிகள் இங்கொன்றும், அங்கொன்றுமாக முளைத்திருக்குமானால் அவையும் களை என்றே நீக்கப்படும். எனவே ஓரிடத்தில் பயிராக இருப்பது மற்றோரிடத்தில் களையாகிறது; ஓரிடத்தில் களையாக இருப்பது மற்றோரிடத்தில் பயிராகிறது. இக்கால அரசியலில் களையெடுப்பதும் ஏறக்குறைய இவ்வாறுதான். எனவே எது களை, எது பயிர் என்று வரையறுக்க இயலா விடினும், பயன்பாட்டு அடிப்படையில் உழவனால் எது பயிர், எது களை என்று இனம் கண்டு கொள்ள முடியும். வாசகர் இலக்கியத்தை இனம் கண்டு போற்றுவதும் இவ்வாறுதான் என்று கூறலாம்.

---

8. Terry Eagleton, **Literary Theory : An Introduction** (Minneapolis; USA : VMP, 1983) P.9.

களையையும், பயிரையும் இனம் கண்டு கொள்ள அவ்வப் போது பயிரிடப்படும் பயிர் உதவுவது போல், வாசகர் இலக்கியத்தை இனம் கண்டு மதித்துப் போற்றுவதற்கு அவர் கால வாழ்வியற் பார்வை (ideology) உதவி செய்கிறது. சமுதாய மதிப்பீடுகளைப் போலவே இலக்கிய மதிப்பீடும் ஒரு சமுதாயத்தின் வாழ்வியற் பார்வையைப் பொறுத்தே அமைகிறது. இந்த வாழ்வியற் பார்வை நாடு சார்ந்தோ, அரசியல் சார்ந்தோ அமையலாம். இப்படிப் பல்வேறு சார்புகள் இருப்பினும், இவற்றுள் ஆதிக்கம் பெற்ற சார்பே அச்சமுதாயத்தின் வாழ்வியற் பார்வையாக அமையும். சமுதாய வாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்துவனவற்றுள் அரசியல், பொருளாதாரம், சமயம் என்பன இன்றியமையாதன. இவற்றுள் வாசகன் எந்த வாழ்வியற் பார்வைக்கு உட்பட்டனவனாக உள்ளானோ-எது ஆதிக்க நிலையில் உள்ளதோ, அதற்கேற்பத்தான் அவன் எது இலக்கியம் என்று தேர்ந்தெடுப்பதும் அமையும். ஓர் ஆதிக்க வாழ்வியற் பார்வைதான் (dominant ideology) வாசகனை இவ்வகையில் நெறிப்படுத்துகிறது. இந்தப் பார்வைக்கு உடன்பாடான கருத்துகள், நோக்குகள் எந்த நூலில் உள்ளனவோ அவற்றை வாசகன் இலக்கியம் என்று போற்றுகிறான். காலச் சுழற்சியில் வாழ்வியல் பார்வை மாறும் பொழுது, எது இலக்கியம் என்னும் கருத்திலும் மாற்றம் ஏற்படும். அதனால்தான் மேலே கண்டவாறு மதிப்பீடுகள் காலந்தொறும் வேறுபட்டு நின்ற பான்மையைக் கண்டோம்.

இவ்வாறு காலந்தொறும் வாசகர் மதிப்பீட்டில் எது இலக்கியம் என்பதற்குரிய விடைகள் மாறி மாறிவரினும் சில நூல்கள் தொடர்ந்து இலக்கியமாகக் கருதப்பட்டு வருவதையும் காண்கிறோம். மேலை மரபில் ஹோமரின் நூல்களும், பைபிளும், வெர்ஜிலின் படைப்புகளும், ஷேக்ஸ்பியரின் நாடகங்களும், மில்டனின் காப்பியமும் நம்நாட்டில் இராமயண, மகாபாரதம் ஆகிய இதிகாசங்களும், திருக்குறளும் தொடர்ந்து வாசகர் இலக்கியப் பட்டியலில் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம். எனவே அமைப்பியல் கோட்பாடாகிய வாழ்வியற் பார்வைகள் மாறினாலும் எல்லா வகையான வாழ்வியற் பார்வைகளுக்கும் பொருந்தக் கூடிய வகையில் சில படைப்புகள் அமைந்துள்ளமையையும் காண முடிகிறது.

இனிப் புதுத்திறனாய்வுக் கோட்பாட்டின்படி மதிப்பும் இலக்கியத் தகவும் அதனுள்ளேயே வீற்றிருக்கின்றன என்னும் கருத்து பெரும்பாலும் பொருந்தவில்லை யாயினும், மேலே

சுட்டியது போன்ற சில படைப்புகள் தம் உருவ, உள்ளடக்கப் பொருண்மைகளாலும் இலக்கியச் செவ்வியைப் பெற்றுள்ளன என்பதையும் காண முடிகிறது.

இதுகாறும் கண்டவற்றால் சில நூல்கள் இலக்கியங்களாகவே பிறக்கின்றன. சில நூல்கள் கால அடைவில் இலக்கியத் தன்மை உடையனவாகக் கருதப்பட்டு ஏற்றுக்கொள்ளப்படுகின்றன; வாழ்வியற் பார்வையின் அதிகார அழுத்தங்களின் காரணமாகச் சில நூல்கள் மீது இலக்கியத்தன்மையும் தகவும் வலிந்து ஏற்றியுரைக்கப்படுகின்றன என்று அறிகிறோம்.

# புதுத் திறனாய்வுக் கோட்பாடுகள்

இந்த நூற்றாண்டின் இருபது முப்பதுகளில் தோன்றி நாற்பது, ஐம்பதுகளில் தனிச் செங்கோலோச்சி, தான் ஏற்றுக் கொண்ட சில மாற்றங்களால் அறுபது, எழுபதுகளிலும் சிறு பான்மை வழக்காகத் தொடர்ந்து எண்பது, தொண்ணூறுகளில் வரலாறாகி நிற்கின்ற இலக்கியக் கோட்பாட்டரங்கின் பெயர் தான் புதுத்திறனாய்வுக் கோட்பாடென்பது. 1920, 30 களில் டி. எஸ். எலியட், ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ் என்பவர்களால் பிரிட்டனில் உருவாகிய புதுத் திறனாய்வு ஓரளவு செல்வாக்கை எட்டியிருந்த போதிலும், அமெரிக்காவுக்குக் குடிபெயர்ந்த பின்னரே இக்கோட்பாடு வளம் பெற்று வலுவடைந்து ஏறக்குறைய அனைத்துலகக் கோட்பாடாக உயர்ந்தது. அமெரிக்கப் புதுத் திறனாய்வாகவே மாறிவிட்ட இக்கோட்பாட்டரங்கில் ஒலித்த குரல்களில் புகழ் பெற்றோராக ஜான்குரோ ரான்சம், கிளியந்த் புருக்ஸ், ஆலன்டேட், வாரன், விம்சத் ஆகியோரைக் குறிப் பிடலாம். மேலும், ராபர்ட் பென்வாரன், ஆர். பி. பிளாக்மூர், ரெனி வெல்லக், கென்னத் பர்க், ஜான் எல்லிஸ் போன்றோ ரையும் அடுத்த நிலையில் குறிப்பிடலாம். முதல் வரிசை அறிஞர் கள் இத்துறையில் முன்னோடிகள்; பின் வரிசையில் குறிப்பிடப் பெற்றோர் இக்கோட்பாடுகளில் சிற்சில மாற்றங்களைப் புகுத்திச் செப்பனிட்டு அதன் தொடர்ச்சிக்குத் தொண்டாற் றியோராவர்.

புதுத் திறனாய்வுக் கோட்பாட்டரங்கினைச் சேர்ந்த கிளை யரங்குகள் பல உண்டு. இரஷ்ய வடிவவியலும், சிகாகோ புதுத் திறனாய்வும், அனுபவ வழித்திறனாய்வும், (empirical criticism) பொதுவாகப் புதுக் திறனாய்வுக் கோட்பாட்டு எல்லைக்குள் அடங்குனவாய்க் கருதப்படுகின்றன. புதுத் திறனாய்வுக் கோட் பாடுகளிலிருந்து சற்று விலகிச் சிற்சில மாற்றங்களை இக்கிளை யரங்குகள் ஒலிக்கின்றன. எனினும் புதுத் திறனாய்வுக்கு முன்னர் வழக்கில் இருந்து நிலை பெற்ற ரொமாண்டிக் கோட்

பாடுகளுக்கும் புதுத் திறனாய்வுக்குப் பின்னர்த் தோன்றிய அமைப்பியல் கோட்பாடுகளுக்கும் இடையேஉள்ள இடைவெளியின் காரணமாக அவற்றோடு இக்கிளையரங்குகளை இணைத்து நோக்கப் பொருந்தாமையின், இவை புதுத் திறனாய்வுடன் இணைத்தே விவாதிக்கப்படுவது திறனாய்வு மரபாக இருந்து வருகிறது. இவ்வாறு பல்வேறு குரல்களை உடையதாகக் கேட்கப்படும் இப்புதுத் திறனாய்வுக் கோட்பாடுகளை அவற்றின் பன்முகத் தன்மையுடன் சேர்த்துச் சிந்திக்கலாம்.

ஆய்வுத் துறைகள் தனித்து நின்று செயற்பட்டு வந்த நிலை மாறிப் பிறதுறைகளின் கோட்பாடு மற்றும் ஆய்வு நெறி முறைகளால் தாக்கமுற்று, அவற்றுக்கேற்பத் தம் கோட்பாடுகளையும் மாற்றியமைத்துக் கொண்ட பாங்கினை (interdisciplinary approach) இருபதாம் நூற்றாண்டின் தனிச் சிறப்புகளுள் ஒன்றாகக் குறிக்கலாம். இந்தப் பொது நிலை ஆய்வுப்பாங்கு இலக்கிய ஆய்வுகளையும் பாதித்தது. இதற்கேற்ப இலக்கியக் கோட்பாடுகள் தத்தம் உடன்காலப் பிறதுறை ஆய்வுகளால் பாதிக்கப்பட்டன.

புதுத் திறனாய்வு அமெரிக்காவில் கால்கொண்டபோது, தத்துவ உலகில் தாமஸ் ஹாப்ஸ், ஜான்லாக், டேவிட் ஹ்யூம் போன்ற அறிஞர்களின் அனுபவக் கோட்பாடு (empiricism) என்னும் ஒருவகைத் தத்துவக் கோட்பாடு நடைமுறையில் இருந்தது. இக்கோட்பாட்டின்படி, மனிதன் ஐம் புலன்களின் மூலம் உலகப் பொருள்களை அல்லது நிகழ்ச்சிகளை அனுபவங்களாக உட்கொண்டு மனத்துட் பதிய வைத்துக் கொள்கிறான். பின்னர் அவ்வுணர்வுகளை மீட்டும் சிந்தித்துக் கருத்துகளாக நிலைபெறச் செய்து கொள்கிறான். இக் கருத்துகளை மொழிக் குறிகளின் (linguistic signs) வாயிலாகப் பிறர்க்குத் தெரியப் படுத்துகிறான்.

ஏறக்குறைய இதே காலகட்டத்தில் மொழியியல் ஆய்வுகள் மும்முரமாக நடந்து வந்தன. அதற்கு முன்னர்ப் பெருவழக்காக இருந்த மூலமொழி ஆய்வுக் கோட்பாடு (Theory of philology) அனுமானங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தது. பெர்டினான்டிசஸ்யூ, புளூம்பீல்டு போன்ற அறிஞர்கள் மொழியை ஆராய வந்த போது அறிவியல் நெறிமுறைகளைக் கடைப்பிடிக்கத் தொடங்கினர். அதன்படி மொழியின் கூறுகளாகிய ஒலியன், உருபன், தொடரன் போன்ற மொழி கூறு

களையும், மொழியமைப்புகளையும் அறிவியல் தரவுகளாகக் கொண்டு ஆராய்ந்தனர்.

மொழிக் கூறுகள் நேராகப் பொருளைச் சுட்டுவனவல்ல; வேற்று நிலை வழக்கால் பொருள்தரும் இயல்பின. சொல்லுக்கும் அதாவது மொழிக்குறிகட்கும் (signs) பொருளுக்கும் நேரடித் தொடர்பில்லை; இடுகுறித் தன்மையால் (arbitrariness) பொருள்களைச் சுட்டுவன என்பன போன்ற மொழியியல் முடிபுகள் பிற துறையினர்க்கும் பரவலாக அறிமுகமாகிக் கொண்டிருந்தன.

1933 இல் வெளிவந்த புளூம்பீல்டின் "The Language" என்ற ஆய்வு நூல் இக்கோட்பாடுகளைத் தாங்கி நின்றது. எனினும் புளூம்பீல்டின் ஆய்வுகள் மொழிப் பொருண்மையைத் (meaning) தம் ஆய்வுக்குரியதாகக் கொள்ளவில்லை. அறிவியல் தரவாக (Scientific data) அதனைக் கொள்ள இயலாமையின் மொழியியலாரின் ஆய்வுக்குள் பொருண்மை அடங்கவில்லை. மொழியமைப்புகளே (linguistic structure) வேற்றுநிலை வழக்கால் பொருளுணர்த்தும் தன்மையின என்று அமைப்பியல் மொழியாய்வுகள் எடுத்துக்காட்டியமையால் பொருண்மைக் கூறுகளை ஆராய்வதில் மொழியியலார் அக்கறை கொள்ளவில்லை.

மேலே குறிப்பிட்ட அனுபவ வழித் தத்துவக் கருத்துகளையும், உடன்கால மொழியியல் கோட்பாடுகளையும் உட்கொண்டு புதுத் திறனாய்வாளர்கள் தம் இலக்கியக் கோட்பாடுகளை வகுத்துக் கொள்ளலாயினர். இவர்கள் கோட்பாட்டினைச் சற்று விளக்கமாக இப்போது காணலாம். இலக்கியப் படைப்பு, மொழிக்கோட்பாடு, பொருண்மைக் கோட்பாடு, "கலை கலைக்காகவே" என்னும் தலைப்புகளின்கீழ்ப் புதுத் திறனாய்வுக் கோட்பாடுகளை ஆராயலாம்.

## 1. இலக்கியப் படைப்பு :

ஓர் இலக்கியப் படைப்பு உருப் பெறுவதற்குப் படைப்பாளியின் வாழ்க்கை அனுபவமும், மொழித்திறனும் அடிப்படைக் காரணங்களாகின்றன. எனினும் படைப்பு உருப்பெற்ற பின்னர் அவனுக்கும் அதற்கும் யாதொரு தொடர்புமில்லை. உருவாகிய படைப்பு இப்போது ஒரு புறமைப் பொருள் (object) தகுதியைப் பெற்று விடுகிறது. எனவே, படைப்பாளியையும்

படைப்பை நுகரும் வாசகனையும் தொடர்பு படுத்தாமலே ஒரு படைப்பை ஆராயலாம். புறமைப் பொருள்கள் எல்லாம் அறிவியல் ஆய்வுக்கு உட்பட்டனவாதலின், புறமைப் பொரு ளாய இலக்கியப் படைப்பையும் அறிவியல் முறைகளைப் பயன் படுத்தி ஆராயலாம். ஆகவே **ஒவ்வொரு இலக்கியப் படைப்பும் தன்னியலானது** (autonomous); தன்னிறைவுடையது என்னும் புதுத் திறனாய்வின் தலையாய கோட்பாடு உருவாகியது.[9]

புதுத் திறனாய்வாளரின் காலத்துக்கு முந்திய கோட்பாடு கள் இலக்கியப் பொருளை ஆராய்வதற்குப் படைப்பாளியின் காலச் சூழல், அவனுடைய ஆளுமையை அறிந்து கொள்ள உதவும் வாழ்க்கைக் குறிப்புகள், தன் படைப்பைப் பற்றி அவன் கூறியுள்ள கருத்துகள் ஆகியவற்றைத் துணையாகக் கொண்டன. மேலும் ஒரு படைப்பு வாசகனை எவ்வாறு பாதிக்கிறது என் பதைக் கொண்டும் அதன் பொருளையும் பயன்பாட்டையும் வரையறுத்துக் கொண்டன. இந்தக் கருத்துகளைப் புதுத் திறனாய்வு முற்றிலும் மறுத்து ஒதுக்கிவிட்டது.

அதாவது ஒரு படைப்பின் மெய்ம்மைப் பொருளை அல்லது மையக் கருத்தை அறிந்து கொள்ள அப்படைப்பு தோன்றிய காலத்தில் இருந்த சமுதாய, அரசியல் பண்பாட்டுச் சூழல்களும் படைப்பாளியின் வாழ்க்கை வரலாறும் பெரிதும் பயன்படு கின்றன என்று கருதுவதும் அவ்வாறே வலிந்து பயன்படுத்து வதும் வேண்டத் தகாதன மட்டுமல்ல; கொள்கை வழுவுமாகும் என்பர் புதுத் திறனாய்வாளர். இத்தகைய வழுவினை **வரலாற்று முறை மாயை** (historical fallacy) என்று இகழ்வர். முந்தைய நூற்றாண்டில் சில திறனாய்வாளர் ஷேக்ஸ்பியரின் சலவைக் கணக்குகளைக் கூடத் தோண்டி எடுத்து அதன்வழி அவருடைய நாடகங்களை ஆராய முற்பட்டனர். இவ்வாறே சாசர், பேகன், மில்டன், வோர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், பைரன், ஷெல்லி போன்ற கவிஞரை ஆராய முற்பட்ட சிலதிறனாய் வாளரும் அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைக் குடைந்து அதில் கிடைத்த சிலதுணுக்குகளைக் கொண்டு அவர்தம் படைப் புகளுக்கு விளக்கம் அளிக்க முனைந்தனர். இவற்றால் பெரும் பயன் விளையாமையோடு, ஆய்வாளர் படைப்பை விட்டு விலகி

---

9 a) John Crowe Ransom, **The World's Body** (Ny : 1938) PP. 327—28.

b) Art Berman, **From The New Criticism to Deconstruction** (Chicago : univ. of Illinois, 1988) P. 30.

மற்றொன்று விரித்தலாகச் செயற்படுவதை உணர்ந்த புதுத் திறனாய்வாளர் இம்முறையை **மாயை** (fallacy) எனக் கடிந்து ஒதுக்கினர்.

சில திறனாய்வாளர் ஒரு படைப்பை ஆராயுமிடத்து அதன் ஆசிரியன் அதன் முன்னுரையிலோ அல்லது அது பற்றிப் பிற இடங்களிலோ கூறியிருப்பதைக் காட்டி, அப்படைப்பின் பொருண்மையை அல்லது மையக் கருத்தை விளக்குவர். ஆசிரியன் கூற்றாக வரும் பகுதிகள் அவனுடைய உண்மையான படைப்பு நோக்கத்தை வெளிப்படுத்துவனவாகையால் அதற்கு மாறாகப் பொருள் கொள்ளலாகாது என்று சிலதிறனாய்வாளர் கூறித் திறனாய்வு செய்வதைப் புதுத் திறனாய்வு ஏற்றுக் கொள்ளவில்லை. இத்தகைய முறையை **நுதற் பொருள் மாயை** (intentional fallacy) என்று இகழ்ந்து ஒதுக்கினர்.

இன்னும் சில முன்னைய திறனாய்வாளர் சில இலக்கியங்கள் வாசகரை எவ்வாறு பாதிக்கின்றன என்று பார்த்து அதற்கேற்ப அவற்றைத் திறனாய்வு செய்தனர். கம்பராமாயணப் பாடல்களைப் பாடி அனுபவித்து அவ் அனுபவ அடிப்படையில் கம்பன் பாடல்கள் இவையே என்று டி.கே.சி நம் நாட்டில் ஆராய்ந்ததைப் போன்று மேலை நாட்டுத் திறனாய்வாளரில் சிலர், ஷேக்ஸ்பியர் நாடகங்களையும், மில்டன் காப்பியத்தையும், டாம் ஜோன்ஸ் நாவல்களையும் திறனாய்வு செய்தனர். இத்தகைய திறனாய்வு உண்மைத் திறனாய்வாகாது என்றும் இது **அனுபவ மாயை** அல்லது பாதிப்பு மாயையால் (affective fallacy) விளைவது என்றும் கருதி புதுத் திறனாய்வுக் கோட்பாட்டினர் இதனை ஒதுக்கினர்.

இவ்வாறு முன்னைய திறனாய்வுக் கோட்பாடுகளைக் கடிந்து ஒதுக்கிய புதுத் திறனாய்வாளர்கள் ஏதோ முற்சாய்வின் (Prejudice) காரணமாக இவ்வாறு செய்யவில்லை. ஒரு படைப்பு ஒரு குறிப்பிட்ட சமுதாய, அரசியல் பண்பாட்டுச் சூழல்களில் தோன்றுகிறது என்பதையோ அக்கூறுகள் அப்படைப்பில் இலைமறை காயாகவேனும் புதைந்து கிடக்கும் என்பதையோ இவர்கள் மறுக்கவில்லை. ஆனால் இக்கூறுகளைப் படைப்பின்கண் தேட வேண்டுமே ஒழிய, அதாவது திறனாய்வு செய்யுமிடத்துப் படைப்பிலிருந்து இவை வெளிப்பட வேண்டுமேயொழிய, புறத்தேயிருந்து திறனாய்வாளன் இவற்றைப் படைப்

பினுள் புகுத்தி ஆராயலாகாது என்பதே இவர்களுடைய கருத்து.[10]

இவ்வாறே நூலுக்குப் புறம்பே ஆசிரியன் கூறும் கருத்துகள் படைப்பில் வெளிப்பட வேண்டுமே தவிர திறனாய்வாளன் அவற்றைப் படைப்பின்மேல் ஏற்றலாகாது என்பதையே இவர்கள் நுதற்பொருள் மாயை என்று கண்டிக்கின்றனர். இக்குறைகள் இரண்டும் படைப்பாளன் சார்பிலிருந்து திறனாய்வாளன் வலிந்து கூறுவதால் ஏற்படுவன. இனி, படைப்பை நுகரும் வாசகன் அது வெளிப்படுத்தும் அல்லது கலைப் பாற்படுத்தும் உணர்ச்சி, கருத்துகள் ஆகியவற்றால் பாதிக்கப்படுவது உண்மையேயாயினும், இப்பாதிப்புக்கு முன்னர்த் தோன்றிய படைப்பைத் திறனாய்வு செய்ய, பின்னர் நிகழ்ந்த பாதிப்பை அடிப்படையாகக் கொள்ளக் கூடாது என்பதே இவர்கள் கருத்தாகக் காணக்கிடக்கிறது. எனவேதான் இம்முறையைப் பாதிப்பு மாயை என்று ஓதுக்குகின்றனர்.

மேலே காட்டிய மூவகை மாயைகளுள் முன்னைய இரண்டும் படைப்புக்கு முந்தியன; அல்லது படைப்பாளியோடு தொடர்புடையன. பின்னையது படைப்பிற்குப் பிற்பட்டுத் தோன்றுவது; வாசகனோடு தொடர்புடையது. கீழ்வரும் வரைபடம் இதனைத் தெளிவாக்கும்.




இம்மூவகைத் திறனாய்வு முறைகளும் படைப்பை முதன்மையாகக் கொள்ளாமல் அதன் புறத்தே அமைந்தவற்றை ஆதாரமாகக் கொள்வதால் இவற்றைப் புதுத்திறனாய்வு மறுத்து ஒதுக்கி விடுகிறது; படைப்பின் அமைப்பை, மொழிவழக்கு, யாப்பு அமைதி, சொல்லாட்சி, கிளத்தல் உத்திகள் போன்ற படைப்பின் அகக்கூறுகளை அடிப்படை ஆதாரங்களாகக் கொண்டு திறனாய்வு செய்தல் வேண்டும் என்பது அவர்தம் கொள்கை.

---

10 Cleanth Brooks, "The Formalist Critic," **Twentieth Century Literary Theory** ed. K. M. Newton (Ny : St. Martin's Press, 1988) P. 48

இந்தக் கொள்கைக்கு அடிப்படை, மேலே காட்டியவாறு படைப்பு தன்னிறைவு உடையது (Self containted and self sustaining) என்று இவர்கள் வகுத்துக் கொண்ட மற்றொரு கோட்பாடாகும். தன்னிறைவு உடைமையாவது, ஒரு கவிதை அல்லது படைப்பு தான் அடக்கியுள்ள செய்தியை அல்லது கருத்தைத் (பொருண்மையை) தன் வடிவ அமைப்பாலேயே வெளிப்படுத்தும் ஆற்றலுடையது; அவ் அமைப்பைப் பகுத்தாய்ந்து அதன் பொருண்மை தானே வெளிப்படுமாறு காட்டுவது திறனாய்வின் பணி; இப்பொருண்மை வெளிப்பாட்டிற்குப் பிற புறக் கூறுகளின் துணை தேவையில்லை என்பதாகும்.

இவ்வாறு புதுத் திறனாய்வாளர்கள் தன்னிறைவுக் கோட்பாட்டை நிறுவிக் கொண்டமைக்கு மொழியின் இயற்கையைக் குறித்தும், படைப்பின் பொருளைப் பற்றியும் அவர்கள் கொண்ட தவறான கொள்கைகளே காரணமாயின.

## 2. மொழிக் கோட்பாடு :

மேலே இவ்வியலின் தொடக்கத்தில் குறிப்பிட்டதைப் போன்று அனுபவவழி தத்துவ கோட்பாட்டுக்கு (empiricism) ஆட்பட்ட புதுத்திறனாய்வு, மொழி பற்றிய கோட்பாட்டையும் அதனிடமிருந்து பெற்றுக் கொண்டது. ஜான் லாக் (John Locke) என்னும் அனுபவ வழி தத்துவவாதியின் கருத்துப்படி, புறவுலகப் பொருள்களைப் புலனுணர்வு வழியாக (Perception) அனுபவமாக வாங்கிக் கொள்ளும் மனித மனம் பின்னர் மீட்டும் அவற்றைச் சிந்திப்பதன் வாயிலாகக் (reflection) கருத்துகளாக மாற்றிக் கொள்கிறது. பின்னர் இக்கருத்துகளுக்கு நேரான சொற்களை ஒலிகளின் மூலம் குறிகளாகப் (Signs) பயன்படுத்தி மனிதன் தன் எண்ணங்களைப் பிறர்க்குத் தெரியப்படுத்துகிறான். எளிய கருத்துகளை, எளிய தனித்த குறிகளாலும், சிக்கலான கருத்துகளைக் கூட்டுக் குறிகளாலும் தெரியப்படுத்துகிறான்.[11]

லாக்கின் இந்த மொழிக் கோட்பாடு பல குறைபாடுகளை உடையது. இதன்படி மொழியின் துணையில்லாமலே கருத்துகள் உருவாகின்றன என்பதும் உலகப் பொருள்களுக்கும், மனித

---

11 Art Berman, PP. 14-15.

மனத்திற்கும் (self) உள்ள தொடர்பு இதுதான் என்பதும் விவாதத்துக்கு உரியவை. மேலும் எல்லாக் கருத்துகளுக்கும் நேரான சொற்கள் மொழியில் உள்ளன என்பதும் சொற்கள் எல்லாம் (குறியீடுகள்) கருத்துகளின் வடிவம் என்பதும் மொழியியல் கண்ணோட்டத்திலும் பின்னர் வந்த தத்துவக் கண்ணோட்டத்திலும் பொருத்தமில்லாத வாதங்கள். காட்டாக, 'ஆனால், அல்லது, இல்லை' போன்ற குறியீடுகள் எந்தக் கருத்துகளுக்கு உரியவை என்று வினவினால் லாக்கின் கோட்பாட்டில் விடை கிடைப்பதற்கு வழியில்லை.

மேலும் சொற்களுக்கும் கருத்துகளுக்கும் நேரடித் தொடர்பு இயற்கையாகவே இருப்பதாக இக்கோட்பாடு கருதுகிறது (Correspondences or referentiality). இதுவும் விவாதத்திற்குரிய கோட்பாடு என்பது வெளிப்படை.

'இத்தகைய மொழிக் கோட்பாட்டைத் தொடக்கத்தில் ஏற்றுக் கொண்டமையால்தான் புதுத் திறனாய்வாளர்கன் ஒரு கவிதை அல்லது படைப்பு தன் பொருண்மைக்குப் பிற புறக்கூறுகளை வேண்டி நிற்பதில்லை; மொழி உத்திகளை அனுபவத்திற்கு (உணர்ச்சி அல்லது கருத்து) ஏற்றாற்போலப் பயன்படுத்துவதால் தற்பொருண்மையுடையது (Self Contained) என்னும் முடிவிற்கு வந்தனர். அதாவது மொழியின் கட்டமைப்பே பொருள் தரும் தன்மையது. கவிதையின் வடிவமாக இருக்கும் ஒலி, சொல், சொற்றொடர், அணிகள் போன்றவற்றின் ஆட்சியையும், அமைப்பையும் ஆராயவே கவிதையின் பொருளும் வெளிப்படும் என்பது இவர்கள் கொண்ட வடிவக் கோட்பாடு. இக் கூறுகள் புறமைத் தன்மை உடையனவாகலின், இவற்றை ஆராயப் பிற புறக் கூறுகள் தேவையற்றன என்று இவர்கள் கருதினர். இவ்வாறு இவர்கள் அறிவியல் ஆய்வு முறைகளைக் கையாண்டு இலக்கியத்தைத் திறனாய்வு செய்தனர். படைப்பு புறமைப் பொருளாதலின் (an object) அறிவியல் ஆய்வு முறைகள் இதனை ஆராயவும் பொருந்தும் என்று கொண்டு வடிவக் கூறுகளை அக்கு வேறு ஆணிவேறாகப் பிரித்துக் காட்டிக் கூட்டிப் பொருள் இதுதான் என்று காட்டும் திறனாய்வு முறையை (Practical Criticism) இவர்கள் மேற்கொண்டனர்.

இவ்வாறு மொழியியல் நோக்கில் அறிவியல் கண்ணோட்டத்தைப் புகுத்தினர்; புகுத்தவே வேறொரு சிக்கலை வரவழைத்துக் கொண்டனர். அதாவது மொழியமைப்பை ஆராய அறிவியல் முறைகளைக் கடைப்பிடித்த புதுத் திறனாய்வாளர்கள் இவ்வகை மொழியாய்வால் பெறப்பட்ட இலக்கியப் பொருளை

(meaning) உறுதி செய்ய அறிவியல் முறைகளைக் கடைப்பிடிக்க வில்லை. ஏனெனில் மொழியமைப்புகள் போலப் பொருண்மை (meaning) என்பது அறிவியல் தரவன்று; அதனைச் சோதனைக்கு உட்படுத்த இயலாது என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். அவர்கள் காலத்து மொழியியல் ஆய்வுகளும் மொழிப் பொருளை ஆய்வுப் பொருளாகக் கொள்ளவில்லை என்பதை மேலே குறிப்பிட்டோம். எனவே ஒரு பொருளை அதாவது இலக்கியத்தை ஆராய்வதற்கே இருவகை ஆய்வு முறைகளைக் கையாள நேர்ந்த கையற்ற நிலை உருவாயிற்று. கவிதையின் பொருள் அறிவியல் ஆய்வுக்கு உட்படாதது. ஆயினும், கவிதை ஆய்வு அறிவியல் அடிப்படையில் தான் அமைய வேண்டும் என்று என்று கூறி இச்சிக்கலை விடுவிக்க முயன்றனர் சில புதுத் திறனாய்வாளர்கள்.[12]

### 3. பொருண்மைக் கோட்பாடு (Theory of meaning)

பொருண்மைக் கோட்பாடு பற்றிய விவாதங்கள் மிக மிகப் பழமையானவை. பிளேட்டோ முதலான தத்துவ அறிஞர்களும் அரிஸ்டாடில் முதலான திறனாய்வாளர்களும் வரலாறு நெடுக இதுபற்றிப் பலவிதமாகக் கருத்துரைத்து வந்துள்ளனர். இன்று வரையும் இவ் விவாதம் தொடர்கிறது. இதற்குக் கருத்து வேறுபாடற்ற ஒருமித்த முடிவு எதுவும் காணப்பட்டதாகத் தெரிய வில்லை.

அறிவியல் தரவாகக் கொண்டு இலக்கியப் பொருண்மையை ஆராய இயலாமையை உணர்ந்த புதுத் திறனாய்வாளர்கள் தொடக்கத்தே, அறிவியல் உண்மைகள் (scientific truth) வேறு; இலக்கிய உண்மைகள் (Poetic truth) வேறு என்ற ஒரு பாகுபாட்டை முன்வைத்தனர். அறிவியல் உண்மையினின்றும் இலக்கிய உண்மை வேறுபட்டது என்று கூறினாலும் அது என்ன என்று இவர்கள் விளக்கவில்லை. அப்படி விளக்க முற்பட்ட அறிஞர்களிடையே ஒருமித்த கருத்தும் தோன்றவில்லை. பொருண்மை என்றால் என்ன என்னும் வினாவிற்குப் பல விடைகள் இவர்களால் தரப்படுகின்றன. சான்றாக சில :[13]

---

12 Rene wellek and Austin warren, **Theory of Literature** PP. 15-16.

13. Art Berman, P. 56.

1. கவிதையின் பொருண்மை புறஉலகைக் குறிக்காது; மனிதனின் உள்ளார்ந்த உணர்வுத் தூண்டல்துலங் களைக் குறிப்பது (ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ்).

2. பொதுவாக எல்லா மக்களாலும் பகிர்ந்து அறியப்படக் கூடிய உணர்வுகளும், உணர்ச்சிகளுமே கவிதைப் பொருண்மையாகும் (டி. எஸ். எலியட்).

3. யதார்த்த அல்லது யதார்த்தம் போன்று காணப்படக் கூடிய உலகைக் குறிப்பது (டி. ஈ. ஹல்ம், ஜான்குரோ ரான்சம்).

4. நீதிக் கருத்துகளை மதிப்பிட்டுக் காட்டுவது (விண்டர்ஸ்).

5. தருக்க முறைமைக்கு ஏற்ற வடிவமைப்பே இலக்கியப் பொருண்மை (ரான்சம்).

6. புறவுலகக் கூறுகள் சிலவற்றை முழுமையாகவும் அணுக்கத் தொடர்புடையனவாகவும் படைத்துக் காட்டுதல் (ஆலன் டேட்).

7. கட்டமைப்பாலும், நாடக முறைமையாலும் ஒருங் கமைந்து நிற்கும் நிலை (கிளியந்த் புருக்ஸ்).

இவை தவிர இன்னும் பல்வேறான விடைகளை இவர்கள் இவ்வினாவிற்கு முன் வைக்கின்றனர். புதுத் திறனாய்வாளர்கள் இவற்றைப் பலவிடங்களில் பலவாறாகத் தாம் விரும்பியவா றெல்லாம் கூறுகின்றனர். பல்பொருட்கேற்பின் நல்லது கோடல் என்னும் உத்தியின்படி இடத்திற்குத் தக்கவாறு ஒருவரே பல விடைகளை முன் வைப்பதும் உண்டு.

இப்படிப் பலப்பலப் பொருண்மைகளைப் புதுத் திறனாய் வாளர்கள் தத்தம் விருப்பப்படியே கூறலாயினர். இலக்கியம் ஒரு புறமைப் பொருள் (Object) என்று கொண்டவர்கள், அது உணர்த்தும் பொருண்மையை மட்டும் தன்வயமானதாகக் (Subjective) கூறுகின்றனர். இது இவர்களிடையே காணப் பெறும் தலையாய முரண்பாடு. கால வளர்ச்சியில் இம் முரண்பாடு தவிர்க்க இயலாதது என்பதை இவர்கள் உணர்ந் திருக்க வாய்ப்பில்லை; உணரவுமில்லை. ஆனால் இவர்களைக் கடந்து இரண்டு தலைமுறைக்கு அப்பால் நிற்கின்ற நமக்கு வரலாறு காட்டும் பாடம் தெளிவாக இருப்பதால் அது முரண் பாடாகத் தோன்றுகிறது.

இவ்வாறு பலவாறாகக் கூறப்படும் பொருண்மைகளை யெல்லாம் ஒருங்கு சேர்த்துப் பார்க்குமிடத்து அவற்றை எல்லாம் இரண்டு வகைகளாக வகுத்து உணரலாம். ஒன்று, இலக்கிய வடிவமே பொருண்மை; (The form is meaning) அதாவது மனித அனுபவங்களை மொழிவாயிலாக வடிவப் படுத்திக் கவிஞன் அமைக்கிறானே அந்த மொழியமைப்பே பொருள்; இது தவிர தனித்த பொருண்மை என ஒன்று கவிதைக்கு இல்லை என்பது. வடிவவியவாளரும் புதுத் திறனாய் வாளர்களில் புருக்சும், ரான்சமும் இதை முன் மொழிந்து வலி யுறுத்தினர். இரண்டாவது, கவிதையின் மொழியமைப்பில் மனித உணர்வுகளே, அதாவது கவிஞன் பொதிந்து வைத்த அனுபவங்களே பாடற்பொருண்மை என்பது. இந்த இரு வகைகளில் முன்னது படைப்பின் வடிவம் மட்டுமே நோக்கியது; அதாவது படைப்பு தன்னியலானது என்னும் கொள்கையை அடியொற்றியது. பின்னது வாசகனால் உணரப்படும்-(நேராக உணர்த்தப்படுவதில்லை)-மனித அனுபவங்களையும் அவற்றிலி ருந்து தாமாகவே பெறப்படும் நீதிகளையும் குறிப்பிடுவதால், இது வாசகரை உள்ளிட்ட கோட்பாடாக அமைந்து விடுகிறது. இது இவர்களுடைய முன்னைய கோட்பாட்டுக்கு முரணான நிலை. பாதிப்பு மாயை என்று வாசகனை முன்னிறுத்துச் செய்யும் திறனாய்வை மறுத்தவர்கள், இப்போது வாசகனை-மறைமுகமாகவேனும்-வாசகனின் துய்ப்பை அடியாகக் கொண்டு பொருண்மையை விளக்க முற்பட்டமை இவர்களுடைய கோட்பாட்டின் அவல முரண்பாடாக அமைந்துவிட்டது.

## 4. கலை கலைக்காகவே

வடிவமைப்பே பொருண்மை என்னும் வாதத்தின் வறட்சி யையும், வாசகனுக்கு உணர்த்தப்பெறும் அனுபவங்கள், நீதிகள் என்னும் வாதத்தினால் விளையும் முரண்பாட்டையும் உணர்ந்த சில அறிஞர்கள் இந்த இக்கட்டிலிருந்து நீங்க ஒரு புதிய கொள்கையை உருவாக்கினர். அதாவது, கவிதை தன்னி யலானது; ஆகையால், அது தன்னியலாக நிலைபெறும் தன்மையே அதன் பொருண்மை; அது வேறு எந்தப் பொரு ளையும் யாருக்கும் தரும் கடப்பாடு உடையதன்று. எனவே இக்கவிதையின் பொருள் யாது? இதனால் உணர்த்தப் பெறும் உண்மை என்ன? என்றெல்லாம் கேட்கக் கூடாது. இலக்கியம் யாருக்காகவும் செய்யப்படவில்லை. இலக்கியம் இலக்கியமா வதற்காகவே செய்யப்பட்டது. எனவே அது எந்தப் பொரு ளையும் தரவேண்டிய தேவையில்லை. கவிதையின் பொருள்

கவிதையே என்னும் கூறுகள் அடங்கிய ஒரு புதிய வினோதமான பொருண்மைக் கோட்பாட்டை இவர்கள் முன் வைத்தனர்;

'A poem should not mean, but be'

என வரும் ராபர்ட் மெக்லீஷ் என்ற கவிஞரின் பாடலடியைத் தம்முடைய கொள்கைக் குரலாக ஏற்றுக் கொண்டனர். **கலை கலைக்காகவே** என்னும் முழக்கமும் இதனை அடியொற்றி எழுந்தது.

தம்முடைய கொள்கை விளக்கத்திற்கும், திறனாய்வுச் செயற்பாட்டிற்கும் இடையே ஏற்பட்டுவிட்ட இடைவெளியைக் குறைப்பதற்காகவும், இவ் இடைவெளியால் தோன்றிய முரண்பாட்டுச் சிக்கலைத் தீர்ப்பதற்காகவும் முன்னிறுத்திய ''கலை கலைக்காகவே'' என்னும் கோட்பாட்டின் வெறுமைத் தன்மையைப் (emptiness) புதுத் திறனாய்வுக் கோட்பாட்டாளர் சிலர் மெதுவாக உணரத் தலைப்பட்டனர். சற்று வயது முதிர்ந்து அனுபவம் பழுத்த கிளியந்த் புருக்சும், இளைய தலைமுறையினராகிய கென்னத்பர்க், ஜான் எல்லீஸ் போன்றோரும் இலக்கியம் தான் பிறந்ததும், வாழ்வதும் ஆகிய அரசியல், சமுதாயப் பண்பாட்டுச் சூழல்களோடு தொடர்புறுத்தப்பட்டு ஆராயப்படல் வரவேற்கத் தக்கதே என்றும், இப்புறச் சான்றுகளைத் தவறாகப் பயன்படுத்துவதால் சிலர் அவற்றை முற்றிலும் ஒதுக்கத் தலைப்பட்டனர் என்றும் கூறிக் 'கலை கலைக்காகவே' என்னும் கோட்பாட்டு முழக்கத்தைப் புறக்கணித்தனர். இலக்கிய நூல்களை வெறும் பிரச்சாரக் கருவியாகக் கொண்டு கொச்சைப்படுத்திய காலகட்டத்தில் இந்த முழக்கம் ஐரோப்பாவில் தோன்றியது. எல்லை மீறிய பிரச்சாரக் கருவியாகக் கலைகளைக் குறிப்பாக இலக்கியத்தைக் கையாளும் போக்கை எதிர்ப்பதற்காகவே இந்தக் குரல் எழுப்பப்பட்டது என்பதை இவர்கள் அறியாமலில்லை. எனவே எல்லாப் புதுத் திறனாய்வாளர்களும் இம்முழக்கத்தை ஏற்றுக் கொண்டனர் எனக் கருதலாகாது. சமூகவியற் கோட்பாடுகளுக்கு ஓரளவு ஆட்பட்ட கென்னத்பர்க், ஜான் எல்லீஸ், கிளியந்த் புருக்ஸ் போன்றோர் இதனை ஆதரிக்கவில்லை.

தமிழ் இலக்கிய மரபைப் பொறுத்தவரையில் தொல்காப்பியர் காலத்திலிருந்தே, 'கலை வாழ்க்கைக்காகவே' என்னும் கோட்பாடுதான் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. செவ்வியல் தன்மை வாய்ந்த சங்க இலக்கியத்தின் அகம், புறம் என்னும் இரு கூறுகளிலும் இக்கோட்பாடுதான் அடியூற்றாக நிலவி வந்துள்ளது. சங்கம் மருவிய காலத்துத் தோன்றிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் முதலாக இன்றுவரை தோன்றி

யுள்ள தமிழ் இலக்கியப் படைப்புகள் எல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுள் ஒன்றையோ, பலவற்றையோ உணர்த்துவதற்காகவே படைக்கப்பட்டுள்ளமையை நன்கு உணரலாம். சமய மறுப்பு, இறை மறுப்பு என்னும் கோட்பாடுகளுக்கு ஆட்பட்ட வாழ்வியல் பார்வையை (ideology) உட்கொண்டு எழுந்த தமிழ்ப் படைப்புகளும், மனித நேயத்தை முன்னிறுத்தி எழுந்தனவாதலின், அவையும், 'கலை வாழ்க்கைக்காகவே' என்னும் கோட்பாட்டை உடையனவாக அமைகின்றன.

''அறம், பொருள், இன்பம் வீடடைதல் நூற்பயனே', எனவும், (நன். 10)

''நாற்பொருள் பயக்கும் நடைநெறித்தாகி'' (தண்டி. 8)

எனவும் வரும் இலக்கண மரபும், பண்டைய உரையாசிரியர்களின் கருத்துகளும் மேற்கண்ட தமிழிலக்கிய மரபைப் போற்றுவனவாகவே அமைந்திருக்கக் காண்கிறோம்.

இனிப் பரதன், அபிநவ குப்தன், க்ஷேமேந்திரன், ஆனந்தவர்த்தனன், தண்டி போன்ற வடமொழித் திறனாய்வாளர்களும் வடமொழி இலக்கியங்களும், பின்னர் எழுந்த பிற வட இந்திய மொழி இலக்கியங்களும் ''சஹ்ருதயா'' என்னும் இலக்கியப் பயன் கோட்பாட்டை அடியொற்றி எழுந்தனவாதலின், வடமொழி பண்பாட்டிலும் ''கலை கலைக்காகவே'' என்னும் கோட்பாடு போற்றப் பெறவில்லை என்பதும், ''கலை வாழ்க்கைக்காகவே'' என்னும் கொள்கையே பின்பற்றப்பட்டு வருகிறது என்பதும் தெளிவாகின்றன. ''கலை கலைக்காகவே'' என்னும் கோட்பாடு இந்திய இலக்கிய மரபுக்கு முற்றிலும் புதியது; இந்திய வாழ்வியற் பார்வைக்கு உட்படாத ஒன்று. எனவேதான் மேலை இலக்கியப் படைப்பாலும், திறனாய்வாலும் தாக்கமுற்ற இந்தியப் படைப்பாளரும், திறனாய்வாளரும் கூட இக்கோட்பாட்டைப் போற்றாமலிருக்கக் காண்கிறோம்.

## முடிப்புரை

இதுகாறும் இவ்வியலில் சிந்தித்தவற்றால் புதுத்திறனாய்வுக் கோட்பாடுகள் பற்றிய சில தெளிவுகள் பிறக்கின்றன:

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இருந்த திறனாய்வாளரில் (கலை, இலக்கியம் உட்பட) சிலர் இலக்கியத்தை ஆன்மீகத் துறைக்கும், சிலர் சமுதாய அரசியல் நோக்கங்களுக்கும் உரிய

பிரச்சார ஏடாகக் கருதி அதன் இலக்கியத் தன்மையைக் கொச்சைப்படுத்தி வந்தனர். அந்நிலையில் இலக்கியத்தை முதலில் இலக்கியமாகப் பயிலும் தேவையைப் புதிய தலைமுறையினர் வற்புறுத்த விரும்பினர். படைப்புக்குப் புறம்பான செய்திகள் படைப்பின் உண்மைத் தன்மையை மறைக்கப் பயன்படுத்தப் பெறுவதை விரும்பாத இவர்கள், படைப்பே முக்கியம் (Text is the thing) என்னும் கருத்தைக் கோட்பாட்டுக் குரலாக எழுப்பினர். இதுவே பின்னர்ப் புதுத்திறனாய்வுக் கோட்பாடாக இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் மலர்ந்து மணம் வீசத்தொடங்கியது.

புதுத் திறனாய்வுக் கோட்பாட்டரங்கில் ஒலித்த பல குரல்களைக் கேட்டோம். அவைகள் தத்தம் கோட்பாடுகளை அரங்கேற்றின. அனுபவவியல் கருத்துகளும், வடிவவியல் கருத்துகளும், சிகாகோப் பள்ளி கருத்துகளும், ஆங்கிலேய-அமெரிக்கப் புதுத் திறனாய்வாளர் கருத்துகளும் எனப் பல குரல்கள் தத்தம் வாதங்களை நம் முன் வைத்தன. குரல்கள் பலவாயினும், பொதுமைப்பட்ட சில கோட்பாடுகள் அவை அனைத்திற்கும் அடியூற்றாக அமைந்திருப்பதை அறிகிறோம். அதன்படி,

1. இலக்கியப் படைப்பென்பது தன்னிறைவு பெற்ற தன்னியலான ஓர் உயிரியம்.

2. இலக்கியப் படைப்பென்பது செதுக்கிச் செப்பனிடப் பெற்ற மொழியின் ஒரு வடிவம்.

3. அது தன் வடிவ அமைதியாலேயே தன் பொருளை விளக்கும் தன்மையது.

4. தன் பொருண்மைக்குப் பிற புறத்துறுப்புகளாகிய ஆசிரியன், அவனுடைய வாழ்க்கை வரலாறு, அவன் காலச் சமுதாயச் சூழல், அதனை நுகரும் வாசகன் பெறும் பாதிப்பு போன்றவற்றின் துணையில்லாமலேயே தன்னை வாசனுக்கு விளக்கும் ஓர் உயிரியப் பொருள்.

என்பன இத்திறனாய்வின் கோட்பாடுகள் என அறிந்தோம்.

இக்கோட்பாடுகளின் சில கூறுகள் பற்றிய கருத்து வேறுபாடுகளைச் சிற்சில குரல்கள் ஒலித்தனவேனும், பொதுவாகப் புதுத்திறனாய்வுக் கோட்பாட்டுக் கால கட்டத்தில் இவையே இலக்கியக் கோட்பாடுகளாகக் கருதப்பட்டு வந்தன.

இக்கோட்பாடுகளில் அடங்கியுள்ள குறைகள் சிலவற்றையும் கண்டோம். மொழிக்கும் உலகப் பொருள்களுக்கும் இடையிலான

தொடர்பு பற்றிய அனுபவவழித் தத்துவக் கூற்றுகள் பொருத்த மற்றன ; படைப்பு தன்னியலானது-புறமைத் தன்மையுடையது-எனவே அறிவியல் அடிப்படையில் ஆராயத்தக்கது. என்னும் கோட்பாடு படைப்பின் பொருண்மையை நோக்குகிற போது பொருந்தவில்லை ; பொருண்மைக் கோட்பாடு பற்றி இவர் களிடையே எழுந்த கருத்து வேறுபாடுகள் பல ; அவையும் பொருத்தமற்றன ; இறுதியாகக் 'கலை கலைக்காகவே' என்னும் கோட்பாட்டுக் குரல் பிளவுபட்டு ஒலித்தது என்பன இதன் குறைகளாகப் பெறப்பட்டன.

எனினும், இலக்கியக் கோட்பாட்டு வரலாற்றிற்குப் புதுத் திறனாய்வு ஆற்றிய தொண்டினைக் குறைத்து மதிப்பிட இயலாது. குறிப்பாக, இலக்கியம் என்பது மானுட அனுபவத்தின் சாரமாக மொழி வாயிலாக வெளிப்படும் ஒரு சொல்லோவியம் ; இதனை அனுபவிக்க அதுவே போதும் ; இலக்கியம் என்பது ஒரு வரலாற்றுச் சாசனமன்று என்னும் கருத்தை வலியுறுத்தி,[14] இலக்கியத்தைப் **பற்றி** ஆராய் வதைவிட, **இலக்கியத்தையே** ஆராய்வதுதான் நம் தலையாய பணி என்று உலகிற்கு உணர்த்தியது புதுத் திறனாய்வுதான் என்பதை நாம் நன்றியுணர்வோடு நினைவுக்கூரக் கடமைப் பட்டுள்ளோம்.

அடுத்து, இலக்கியமாயினும், இயன்றவரை அனுமானங் களைத் தவிர்த்து, அறிவியல் அடிப்படையில், முற்சாய்வோ, பிற்சேர்க்கையோ இல்லாமல் அதனை ஆராயவேண்டும் என, இலக்கிய ஆய்வுக்கு அறிவியல் அடிப்படைகளைக் கொள்ள வேண்டும் என்று கூறியதுடன் செயற்படுத்தியும் காட்டியது புதுத் திறனாய்வுதான் என்பதையும் மறத்தலாகாது. இந்த இருவகை திறனாய்வுக் கோணங்களும் இன்றும் சிறுபான்மையாகவேனும் செயற்பட்டு வருதலின், இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய ஆய்விற்குப் புதுத்திறனாய்வு அளித்த நன்கொடைகளாக இவற்றை நாம் கருதலாம்.

---

14. Literature is not a social document, but a social monument.

# அமைப்பியல்வாதக் கோட்பாடுகள்

சென்ற இயலில் சிந்தித்த புதுத்திறனாய்வும் அதற்கு முன்னர்ப் பண்டைக் காலத்திலிருந்தே சிற்சில வேறுபாடு களுடன் வழக்கிலிருந்து வந்த பண்டைத் திறனாய்வும் (Traditional Criticism) தெளிவான வரையறையும் நோக்கமும் கொண்ட இரண்டு பெருந்திறனாய்வுப் பார்வைகள். இலக்கியம் என்னும் ஒரு கலைப்படைப்பைத் தங்களுடைய முதன்மை யாதாரமாகக் கொண்டு அறிவுறுத்துதல், மகிழ்வூட்டுதல் என்னும் இருவகைப் பணியை அது எவ்வாறு ஆற்றுகிறது என்று ஆராய்ந்து காண்பதை இப் பார்வைகள் தம்முடைய நோக்கமாகக் கொண்டிருந்தன. விவாத முறைமைக்காகத் தருக்கத்தையும், பொருள் விளக்கத்திற்காகத் தத்துவம், சமுதாயப் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் போன்ற வற்றையும் துணையாகப் பண்டைத் திறனாய்வு பயன்படுத்திய தாயினும், இலக்கியமும் மானுட வாழ்க்கையின் அனுபவமும் மட்டுமே அதனுடைய அடிப்படை ஆய்வுப் பொருள்களாக இருந்தன. அதாவது இலக்கியம், இலக்கியமல்லாதன என்னும் எல்லைகள் தெளிவாக இருந்தன. பிறதுறை அறிவு துணைப் பொருளாக மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்தது.

புதுத்திறனாய்வு தன் காலக் கட்டாயத்திற்கு ஏற்பத் தன் திறனாய்வுப் பார்வைக்குத் தத்துவத்தையும், மொழியியலை யும், அறிவியல் நெறிகளையும் அடிப்படையாகக் கொண்டு செயல்பட்டது. எனினும் இலக்கியம், இலக்கியமல்லாதன என்னும் எல்லைகளை வரையறுத்துக் கொண்டு செயல் பட்டது. அதனால்தான் ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் போன்ற புதுத்திறனாய்வாளர்கள் கவிதை உண்மை வேறு, அறிவியல் உண்மை வேறு என்னும் பாகுபாட்டைத் தெளிவுபடுத்திக் கூறினர். எனவே ஆய்வு நெறிகட்குப் பிற துறை முறைமை களை அடிப்படையாகக் கொண்டனரேனும், இலக்கியத்தை,

இலக்கியப் பொருண்மையை, இலக்கியப் பயனை இவர்கள் தனித்ததொரு துறையாகவே கருதிச் செயல்பட்டு வந்தனர்.

புதுத் திறனாய்வைத் தொடர்ந்து வந்த அமைப்பியல் வாதத் திறனாய்விலும், அதனைத் தொடர்ந்து வந்து தற்போது நடைமுறையில் இருக்கும் அமைப்பியல் மருவிய (Post - Structural) திறனாய்விலும் இலக்கியம், இலக்கிய மல்லாதன என்னும் எல்லைகள் சிறுகச் சிறுக மறைந்து வரலாயின. அமைப்பியல்வாதக் கோட்பாடு பல்துறை ஆய்வாகப் (multidisciplinary) பரிணமித்து நின்றதேனும் துறைகள் இன்னின்ன என்னும் வரையறைத் தெளிவாவது இருந்தது. ஆனால் அதன் பின்னர் வந்த அமைப்பியல் மருவிய கோட்பாடுகள் எல்லைகளையே இல்லையாக்கி, மானுட அறிவுத் துறைகளையெல்லாம் ஒருதுறை நீர்மைத் தாகக் கொண்டு தொழிற்பட்டு வருகின்றன. இன்றைய இத்தகைய ஆய்வு ''Post - disciplinary approach'' என்று அழைக்கப்படுகிறது.

அமைப்பியல்வாதக் கோட்பாடுகளைப் பற்றிச் சிந்திக்கும் முன்னர் இந்த வேறுபாட்டை உணர்ந்து கொள்வது அக்கோட்பாடுகளின் தோற்றத்தையும், பயன்பாட்டையும் தெளிவாக அறிந்துகொள்ள உதவும் என்னும் கருத்தால் இச்சிறிய தொடக்கவுரை இங்குத் தரப்படுகிறது.

### அமைப்பியல் வாதம் : தோற்றமும் வகைகளும்

அமைப்பியல் வாதம் என்னும் ஆய்வு அணுகுமுறை முதன் முதலாகப் பிரஞ்சு நாட்டில் தோன்றியது. எனவே இதனை முதலில் பிரெஞ்சு அமைப்பியல் வாதம் என்றே அழைக்க லாயினர். இவ்அணுகுமுறையை முதலில் பயன்படுத்தியவர் கிளாட் லீவை ஸ்ட்ராஸ் (Claude Levi-Strauss) என்னும் மானுடவியல் அறிஞர், மானுடவியல் துறைக்கு இவர் பயன் படுத்திய அமைப்பியல் வாத முறையையும், கோட்பாடுகளையும் பின்னர்த் தோடொரோவ் (Todorov), ஜெனெட் (Genette), பார்த்திஸ் (Barthes) என்னும் அறிஞர்கள் இலக்கிய ஆய்வுக்குப் பயன்படுத்தினர். இதுவே இலக்கிய அமைப்பியல்வாதம் (literary structuralism) எனப் பெயர் பெற்று இந்நூற்றாண்டின் அறுபது எழுபதுகளில் இலக்கியக் கோட்பாட்டாய்வையும், இலக்கியத் திறனாய்வையும் பெரிதும் பாதித்தது. தோற்றத் தால் பிரெஞ்சு நாட்டுக்கு உரியதாயினும், இதன் பரவலான ஆட்சிக்கும் இலக்கிய ஆராய்ச்சியுலகப் புகழுக்கும் அமெரிக்கா தான் காரணமாயிற்று.

மொழியியல். உளவியல், மானுடவியல், சமூகவியல் எனப் பல்வேறு துறைகளில் இந்த அமைப்பியல்வாத அணுகுமுறை பரவலாகப் பயன்படுத்தப் பெற்று வந்தது; இன்றும் ஓரளவு பயன்படுத்தப்பெற்று வருகிறது. எனினும் இலக்கியக் கோட்பாடுகளை வரையறுப்பதிலும், இலக்கியத் திறனாய்விலும் இவ் அணுகுமுறை எந்த அளவிற்குத் தன் செல்வாக்கை நிலைபெறச் செய்துள்ளது என்பதை மட்டும் நாம் இங்கே சற்று விளக்கமாகச் சிந்திக்கலாம்.

## அமைப்பியல் வாதம்

மானுட வாழ்க்கை இருவகை அமைப்புகளைக் கொண்ட ஒரு முழுப்பொருண்மை; புறத்தே தோன்றும் ஒவ்வொரு வகையான வாழ்க்கை நிலைக்கும் அடிப்படையான அக அமைப்பு ஒன்று உண்டு. புற அமைப்பின் செயற்பாடு, அக அமைப்பின் வெளிப்பாடுதானே தவிர தன்னிச்சையாக இயங்க வல்லதன்று; இப் புறவெளிப்பாடும் அவ்வப்போது மாறி இயங்கும் கால, தேச, நடைமுறைகளுக்கு ஏற்ப அக அமைப்பின் கூறுகளை மாற்றி அமைக்கும் இயல்பினது. இவ்வாறு அக அமைப்புக்கும் புறவெளிப்பாட்டிற்கும் இடையில் தோன்றும் வேறுபாடுகளின் தொடர்ச்சியே வரலாறாகப் பரிணமிக்கிறது. மானுடத்துறைகள் யாவும் இத்தகைய வரலாற்று வளர்ச்சியினை உடையனவே. பண்டைக்கால வரலாற்றை ஆராய்வதற்கும், உடன்கால நிகழ்ச்சிகளை ஆராய்வதற்கும் இத்தகைய அணுகுமுறை பயன்படுகிறது என்பது அமைப்பியல்வாதிகளின் அடிப்படைக் கோட்பாடு.

இக்கோட்பாட்டின் தன்மையைச் சில மானுட அறிவுத் துறைகளுடன் தொடர்புபடுத்திச் சிந்தித்தால் இதன் அடிப் படையைச் சற்றுத் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம் இவ்வகையில் மொழியின் அமைப்பினை ஆராய்ந்த பெர்டி னாண் டி சசூர் (கி.பி. 1857-1913) என்பாரின் கொள்கையைச் சற்று விரிவாகப் பார்க்கலாம். இவர்தம் கொள்கைப்படி, மானுடமொழி இருவகை வழக்குகளை உடையது. ஒன்று மொழியின் அக அமைப்பாகிய இலக்கண வடிவம்; மற்றொன்று அதன் புற வடிவமாகிய தொழிற்படு வழக்கு. புறத்தே வழங் கப்படும் தொழிற்படு வழக்குக்கு அடிப்படை இலக்கணவடிவமே; நுண்பொருளாக (கருத்து வடிவம்) உள்ள இலக்கண வடிவத் தின் அடிப்படையில்தான் செவிக்கும் கண்ணுக்கும் புலனாகின்ற புறவடிவமாகிய தொழிற்படு வழக்கு அமைகிறது. எனினும்

அக அமைப்பாகிய இலக்கண வடிவத்தை நேரே ஆராய இயலாது ; புறவடிவத்தைக் கொண்டுதான் அதனை ஆராய முடியும். அகவடிவம் அம்மொழி பேசும் எல்லா மக்கட்கும் பொதுவானது ; புறவடிவமோ தனிமனித வெளிப்பாடு ; இது பல்வேறு வகையாக வெளிப்படலாமாயினும் அகவடிவமாகிய இலக்கண அமைப்பிலிருந்து வேறுபடாத தன்மையுடையது என்று சசூர் விளக்கியுரைத்தார். அகவடிவமாகிய இலக்கண அமைப்பினை 'The langue' என்றும் புறவடிவமாகிய தொழிற்படு வழக்கை 'The Parole' என்றும் சசூர் அழைத்தார்.

இதனைச் சில எடுத்துக்காட்டுகளின் வழியாகத் தெளிவாக்கலாம்.

'இராமன் வில்லை முறித்தான்.'

என்னும் தமிழ்த் தொடர் ஒரு புறவடிவம். இது எழுவாய், செயப்படுபொருள், பயனிலை (SOV) என்னும் தொடரமைப்பிலக்கணத்தை அகவடிவமாய்க் கொண்டுள்ளது.

முருகன் தமிழைக் கற்பித்தான்.
இளங்கோ சிலப்பதிகாரத்தை இயற்றினார்.
கண்ணன் பழத்தைத் தின்றான்.
விமானத்தை நான்தான் ஓட்டுகிறேன்.

எனப் பலவாறாக வரும் தமிழ்த் தொடர்கள் எல்லாம் மேற்காட்டிய தொடரமைப்பிலக்கணத்தை (SOV) அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை என்பது வெளிப்படை. மேலே காட்டிய ஒவ்வொரு புறவடிவமும் (Parole) ஓர் அகவடிவின் (langue) வெவ்வேறு தொழிற்படு வழக்கேயன்றிப் பிறிதில்லை. அதாவது, ஓர் அகவடிவவைக் கொண்டு எண்ணிறந்த புறவடிவங்கள் தோன்றலாம் என்பது கருத்து.

மொழி வழங்குகின்ற காலம், ஒரு காலத்தேயும் அது வழங்கும் இடம், அதனை வழங்குவோரின் சமுதாய அந்தஸ்து அது வழங்கப்படும் புலம் (துறை) என்னும் பல்வேறு நிலைகளால் ஓர் அகவடிவினால் தோன்றும் புறவடிவங்களின் எண்ணிக்கை எண்ணிலி (infinity)யாக உயர்கிறது. எனினும், இவ் எண்ணிறந்த புறவடிவங்கள் எல்லாம் ஒரே அகவடிவின் புற வெளிப்பாடுகளே என்பது தெளிவாகிறது. அதாவது,

புறவடிவங்கள் எல்லாம் மொழியினப் பொதுமையாகிய அகவடிவத்தின் தனிமனித வெளிப்பாடுகள் என்பது கருத்து.[15]

மனித மனத்தின் இயல்புகளை ஆராய்ந்த சிக்மண்ட் பிராய்டு என்னும் உளவியல் அறிஞர், மனித மனம் அடிமனம் (Unconscious mind), அறிமனம் (Conscious mind) என்னும் இருவகை அமைப்புகளை உடையது; அடிமனம் கல்லாமல் பாகம் பட்டு இனப் பொதுமையாக இயங்குவது; அறிமனம் சமுதாயத் தால் உருவாக்கப்பட்டு ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு வகையாகத் தொழிற்படுவது; அடிமனத்தின் பொதுப்பண்புக் கேற்பவே அறிமனம் இயங்கும் தன்மையது; அடிமனத்தை நேராக ஆராய இயலாது; ஆகையால் அறிமனச் செயற்பாடு களின் அடிப்படையில் மட்டுமே இதனை ஆராய முடியும் எனப் பல்வேறு சோதனைகள் மூலமாக எடுத்துரைத்தார். எனவே உளவியல் துறையும் மனத்தின் அமைப்புகளைப் பாகுபாடு செய்து அவற்றின் வழியே மனிதனின் உளவியல் செயற்பாடு களை ஆராய்ந்தது.

மானுட வாழ்க்கையின் சமூகவியற் கூறுகளை ஆராய்ந்து அதற்கான அடிப்படைகளைக் கண்டறிந்த அறிஞர் காரல் மார்க்சும் இத்தகையதொரு இரட்டை அமைப்பு நிலையை மேற் கொண்டு சமுதாயத்தை ஆராய்ந்தார். அவருடைய கோட் பாட்டின்படி, மானுட சமுதாய வாழ்க்கை அடியமைப்பு (basic structure) மேலமைப்பு (super structure) என்னும் இரு வகை அமைப்புகளை உடையது; மேலமைப்புக்கு ஆதாரமாக நிற்பது அடியமைப்புதான்; அரசியல், சமுதாய வழக்குகள், கலைகள், இலக்கியம், பொருளாதார வாழ்க்கைப் படிநிலைகள் (வர்க்க அமைப்புகள்) என்னும் சமூகவியற் கூறுகள் எல்லாம் பொருளாதாரம் என்னும் அடியமைப்பை ஒட்டியே நிகழும் புறவமைப்பு வெளிப்பாடுகளே. பொருளாதாரம் என்னும் அடியமைப்பில் கால, தேச, நடைமுறை வேறுபாடுகளால் தோன்றும் மாறுதல்களுக்கேற்ப மேலமைப்புகளிலும் மாறுதல் கள் ஏற்படும். இந்த அடியமைப்பை மார்க்சு வாழ்வியல் பார்வை (ideology) என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். ஒரு சமுதாயத்தின் வாழ்வியல் பார்வை மாற, மாற அச் சமுதாயத்தின் மேலமைப்புகளாகிய அரசியலிலும், அதிகார அமைப்பிலும், வர்க்க அமைப்பிலும் கலை இலக்கியங்களிலும்

15. Individual expressions of the langue which is common to all the speakers of that language.

அம்மாற்றங்களின் சாயல் வெளிப்படும் என்பது அவர்கருத்து. இத்தகைய மாற்றங்களின் தொடர்ச்சியே அவ்வச் சமுதாயத்தின் வரலாறாக அமைகிறது. ஒரு சமுதாயத்தின் மேலமைப்புகளை ஆராய்ந்தால் அதன் அடிநாதமாகிய வாழ்வியற் பார்வையைக் கண்டு உணரமுடியும் என்று அவர் எடுத்துக் காட்டினார்.

இவ்வாறு மொழியியல், உளவியல், சமூகவியல் என்னும் துறைகள் இத்தகைய இரட்டை அமைப்புக் கோட்பாட்டை உருவாக்கிக் கொண்டு தத்தம் துறைகளை ஆராய்ந்தன. இந்த அடிப்படை ஆய்வுகள் ஏறக்குறைய ஒரே கால கட்டத்தில் (பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியுமாகிய ஓர் ஐம்பதாண்டுக் காலம்) தனித்தனியே நிகழ்ந்து வந்தன.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தே தோன்றி வளர்ந்த புதுத்துறைகளுள் மானுடவியல் (Anthropology) துறையும் ஒன்று. தன் தோற்றத்திற்கு உயிரியல் துறையையும் (life sciences) தன் வளர்ச்சிக்குச் சமூகவியல் துறையையும் (sociology) பற்றாகக் கொண்டு எழுந்த மானுடவியல் துறை அறிஞருள் பிரான்சு நாட்டு மானுடவியலாளரான கிளாட் லீவை ஸ்டராஸ் (Cluade-Levi-Strauss) என்பவரும் ஒருவர். இவர் பல்வேறு மானுடச் சமுதாயங்களின் பழங்கால மரபுகளை ஆராய்வதில் மிகவும் ஆர்வம் கொண்டவர். அவ்வகையில் மானுடச் சமுதாயங்கள் மேற்கொண்டொழுகிய பழக்க வழக்கங்கள், சடங்குகள், உணவு முறைகள், நம்பிக்கைகள் அவர்களிடையே வழக்கிலிருந்த தொன்மங்கள் (Myths) என்பன பற்றி ஆராய முற்பட்டார். இவருக்குச் சற்று முற்பட்ட காலத்தே இத்துறையில் ஆராய்ந்து பல்வேறு மானுட இனங்களின் ஒழுகலாறுகளைத் திரட்டித் தொகுத்த பேரறிஞர்களான ஜேம்ஸ் பிரேஜர் (James Frazer), மிஸ் வெஸ்டன்(Miss-Weston) விளாடிமிர் ப்ராப் (Vladamir Propp) போன்ற மானுடவியலாளர் களின் தரவுகளை லீவை ஸ்ட்ராஸ் ஆராயப்புகுமிடத்துத் தக்க தோர் அணுகுமுறையைத் தேடிய வண்ணமிருந்தார். அந் நிலையில் சசூரின் மொழியமைப்புக் கோட்பாடுகள் அவருக்குப் புதுவழியைக் காட்டுவனவாக அமைந்தன.

மொழியமைப்பில், புறவடிவங்களைக் (the parole) கொண்டு அவற்றின் உயிர்ப்பாக விளங்கிய அகவடிவத்தைக் (the langue) கண்டுணரும் சசூரின் அணுகுமுறை அவரை ஈர்த்தது. அதனைப் பயன்படுத்தித் தம் துறையின் தரவுகளாகிய தொன்மம், சடங்குகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகிய புறப்

பரிமாணங்களை (external structure) ஆய்வுப் பொருளாகக் கொண்டு, அவற்றிற்கடிப்படையாக விளங்கும் அணுப்பரிமாணங் களைக்(nucleus structure) கண்டறிந்தார். இவ்வாறு புறவடிவைக் கொண்டு அகவடிவைக் கண்டுணரும் ஆய்வுமுறைக்குச் சசூரின் **மொழியமைப்புக்கோட்பாடு** பயன்பட்டதால் அவர் தம் ஆய்வணுகு முறைக்கு அமைப்பியல் வாத அணுகுமுறை (Structuralist approach) என்று பெயரிட்டு அழைத்தார். அதுமுதற்கொண்டு அமைப்பியல் வாதம் (Structuralism) என்னும் ஆய்வணுகுமுறை பல்துறை ஆய்வாளரிடையே பெரிதும் பரவிப் பயன்படலாயிற்று. ஐரோப்பாவிலிருந்து அமெரிக்காவிற்குச் சென்று பரவியதும், இந்நூற்றாண்டின் அறுபது எழுபதுகளில் மிகப் பரவலானதொரு ஆய்வுமுறையாக இது எல்லாத் துறைகளிலும் பெரும் புகழ் பெற்று விளங்கலாயிற்று.

இந்நிலையில், சசூரின் மற்றொரு கோட்பாடும் நம் சிந்தனைக்கு உரியதாகிறது. மானுடப் பேச்சொலிகள் பொருள் உணர்த்தும் முறை குறித்தும் சசூர் ஒரு கோட்பாட்டை உரு வாக்கினார். பொருள் குறிப்பீட்டு முறை (theory of signification) என்னும் அவரது கோட்பாட்டின்படி,

அ. பேச்சொலிகள் (ஒலியன்கள்) நேரடியாகப் பொருள் களைச் சுட்டுவனவல்ல.

ஆ. தம்மிடையிலான வேறுபாட்டால் ஒலியன்கள்பொருள் வேறுபாட்டை உணர்த்துகின்றன.

இ. ஒலியன்களின் கூட்டாகிய சொல்லுக்கும்(Sign) அது குறிக்கும் பொருளுக்கும் அல்லது கருத்துக்கும் எத்தகைய நேரடித் தொடர்புமில்லை.

ஈ. அதாவது, மொழிக் குறிகள் (linguistic signs) இடு குறியளவாய்ப் பொருளுணர்த்தும் தன்மையின (arbitrary relationship). இவ் இடுகுறித்தன்மை மரபு வழிப்பட்டது (Conventional) என்பது கருத்து.

இக்கோட்பாடுகளின் பரந்துபட்ட செல்வாக்கை உணர்ந்து கொள்ள வேண்டுமாயின், இவற்றைச் சற்றுத் தெளிவுபடுத்திக் கொள்வது நல்லது. அதாவது,

கல் — கள்

என்னும் சொற்களில் உள்ள லகர, ளகரங்களாகிய ஒலியன்கள் தம் வேறுபாட்டால், ''கல்—கள் என்னும் சொற்களால் உணர்த்

தப்படும் பொருள்கள் தம்முள் வேறுபட்டன'' என்று குறிக் கின்றன. மொழியியலார் இத்தன்மையை வேற்று நிலை வழக்கு (Contrastive distribution) என்பர். இவ் ஒலியன்கள் தாமே பொருள் குறிக்காவிடினும் பொருள் வேற்றுமைக்குக் காரணமா கின்றன என்பது இங்கே குறிப்பிடத் தக்கது.

அடுத்துக் கல், கள் என்னும் சொற்களுக்கும் அவை உணர்த் தும் உலகத்துப் பொருள்களுக்கும் எத்தகைய நேரடித் தொடர் பும் இல்லை. இந்த மொழிக் குறிகள் (signs) இரண்டும் இடுகுறி யளவாய், மரபினடியில் இருவேறு பொருள்களை உணர்த்து கின்றன என்னும் பொருள் குறிப்பீட்டுக் கோட்பாடும் இங்கே உணர்ந்து கொள்ளத் தக்கது.

சொற்கள் இடுகுறித் தன்மையால் பொருள்களைச் சுட்டு கின்றன என்றும் இவ் இடுகுறித்தன்மை மரபாகப் பின்பற்றப் பட்டு வருகிறது என்றும் தமிழ் இலக்கண மரபு கருதி வந்துள் ளது என்னும் செய்தியை இங்கே இணைத்துப் பார்க்கலாம்.

மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா

(தொல். 877)

என்னும் தொல்காப்பியர் கூற்று இதனை வலியுறுத்துகிறது. சொற்கள் பொருளுணர்த்தும் பாங்கினை ஆசிரியர் தாம் உணர்வ ரேனும் நம்மனோர்க்கு உணர இயலாது என்று உரையாசிரியர் கள் இந் நூற்பாவுக்குப் பொருள் காண்கின்றனர். அதாவது, மொழிப்பொருட் காரணம் உண்டு: நுணுகி ஆராய்ந்தாலும் நமக்கு அது விளங்காது என்னும் கருத்துப்பட உரைகள் செல் கின்றன. இவ்வாறு பொருள் கூறினால், தொல்காப்பியர்க்கு உணர்த்தும் திறன் போதாது என்னும் குறைபாடு உண்டாகும்.

பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின் (875)

என்று சற்று முன்னர்க் கூறிய தொல்காப்பியர், தம்முடைய உணர்த்த இயலாமை புலப்படுமாறு சூத்திரம் செய்வாரா என்பது சிந்திக்கத் தக்கதாக அமைகிறது.

எனவே, சொல்லுக்கும் பொருளுக்கும் இடையே அமைந்த இயைபுக்கான காரணத்தை எவ்வளவுதான் ஆராய்ந்தாலும் விளங்கித் தோன்றாது'' என்று பொருள் கொள்வது பொருத்த மாகப்படுகிறது.

இனி நன்னூலார், மரபு என்றால் என்ன என்று விளக்கு மிடத்து,

எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே (388)

என்று கூறுகிறார். மரபு என்பது பலவகை மரபுகளைக் குறிக்கு மாயினும், இங்கே சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்புக்கான காரணத்தை விளக்கும் சொற்-பொருள் குறியீட்டு மரபினைத்தான் பவணந்தியார் விளக்குகிறார். அதாவது, இரண்டிற்கும் இடையிலான தொடர்பு மரபு மட்டுமே (Convention) என்பது நன்னூலார் கருத்தாகக் காணப்படுகிறது.

எனவே இடுகுறித் தன்மையால் பொருளைச் சுட்டுதல், மரபு அடிப்படையில் இடுகுறித்தன்மை வழக்காக அமைதல் என்னும் தமிழிலக்கணக் கருத்துகளும் சசூரின் மேலே சுட்டிய கருத்துகளும் ஒரே தன்மையினவாக இருத்தலைக் காண்கிறோம்.

சசூரின் மேற்காட்டிய இருவகை மொழிக் கோட்பாடு களையும் லீவை ஸ்ட்ராஸ் தம் துறை ஆய்விற்குப் பயன் படுத்திக் கொண்டார். அதாவது அக அமைப்பு, புற அமைப்பு என்னும் இரட்டை அமைப்புக் கோட்பாட்டையும், சொற்கள் நேரடியாய்ப் பொருள் உணர்த்துவனவல்ல, தம்மிடையுள்ள வேறுபட்டால் பொருள் உணர்த்துவன என்னும் கோட்பாட் டையும் பயன்படுத்தித் தொன்மம், சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவை வெறும் புறவடிவங்கள்; இவற்றிற்கு அடிப் படையான அனுமான வடிவங்கள் உண்டு; அவற்றின் வெளிப் பரிமாணமே இவைஎன்றும், இவை தத்தம் அளவில் யாதொரு சிறப்புப் பொருட்குறிப்பும் (Significance) இல்லாதன; தமக்குள் இருக்கும் வேறுபாட்டால் பொருட்குறிப்புப் பெறுவன (Signify by difference) என்றும் ஆராய்ந்து நிறுவினார்.

இவ்வாறு மொழிகள் பொருண்மை சுட்டும் பாங்கினை ஆராய்ந்த சசூரின் மொழிக் கோட்பாடுகளே அமைப்பியல் வாதம் தோன்றி நிலைபெறக் காரணமாயின. ஒவ்வொரு துறை யும் இந்த அமைப்பியல்வாதக் கோட்பாடுகளைத் தத்தம் துறைப் பொருளை ஆராய்வதற்குப் பயன்படுத்திக் கொள்ளு மிடத்துத் தம்தம் துறைக்கேற்பச் சற்று மாற்றியும் புதுக்கியும் அழைத்துக் கொண்டன. அதன் விளைவாக அமைப்பியல் வாதம் என்னும் கோட்பாடு பல்வேறு பரிமாணங்களைப் பெறலா யிற்று. அமைப்பியல் வாதம் என்றதும், எந்த அமைப்பியல் வாதம்? பிரெஞ்சுக் கோட்பாடா? பிராக் (Prague) கோட்

பாடா? அமெரிக்க அமைப்பியல் வாதமா? என்னும் வினாக்கள் அறிஞரிடையே எழுகின்றன. இவ்வினாக்கள் அமைப்பியல் வாதத்தின் பன்முக வளர்ச்சியையும் பன்முகத் திரிபையும் நமக்கு உணர்த்துகின்றன.

பன்முகப்பட்ட இக்கோட்பாடுகள் முழுவதையும் விளக்குதல் என்பது, இலக்கிய ஆய்வுக்கு நேரடியாகத் தேவைப்படும் ஒன்றன்று. எனவே பிற கிளைப் பிரிவுகளை விடுத்து, இலக்கிய ஆய்வோடு தொடர்புடைய ''இலக்கிய அமைப்பியல்வாதம்'' குறித்து மட்டும் சற்று விளக்கமாகச் சிந்திக்கலாம்.

இலக்கிய அமைப்பியல்வாதம் குறித்துச் சிந்திப்பதற்கு முன்னர்ப் புதுத்திறனாய்வுக் கோட்பாடுகளின் அடிப்படைகளை மீண்டும் சுருக்கமாக நினைவுபடுத்திக் கொள்ளுதல் நல்லது.

அ. இலக்கியப் படைப்பு தனிமனிதனால் உருவாக்கப் படுகிறது; அவனது தனியாளுமையினால் விளைவது.

ஆ. உருவான பின்னர்த் தன்னிறைவு பெற்ற தன்னியலான ஒரு பொருளாகப் படைப்பு விளங்குகிறது.

இ. எனவே இப்படைப்பினை அறிவியல் முறைகளின் அடிப்படையில் ஆராய வேண்டும்.

ஈ. படைப்பினை ஆராய்ந்து உணர்ந்து கொள்ளப் புறக் கூறுகள் எவையும் தேவைப்படா.

உ. படைப்பின் மொழி வடிவமே அதன் பொருளை உணர்த்தும் தன்மையது; வடிவமே அதன் பொருள்.

ஊ. இலக்கிய 'உண்மை' (பொருண்மை) வேறு; அறிவியல் 'உண்மை' வேறு.

எ. படைப்பின் பயன் முருகியல் இன்பம் விளைவித்து அதன் வழியாகவே நீதிகளை உணர்த்துவது.

ஆகிய கருத்துகள் புதுத்திறனாய்வின் கோட்பாட்டுக் கூறுகள். இக்கோட்பாடுகளின் குறைகளாக முன்னர்க் குறிப்பிட்டவற்றை யும் இங்கு நினைவு கூர்தல் தேவையாகிறது. அதாவது,

அ. மனித மனம் தன்னுரிமை உடையது; எனவே படைப்பு அவனுடைய தனிவெளிப்பாடு.

ஆ. படைப்புக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு இலக்கிய ஆய்வுக்கு மிகவும் வேண்டப்படுவதன்று.

இ. ஒவ்வொரு படைப்புக்கும் தனித்ததொரு பொருண்மை உண்டு. ஆனால் அறிவியல் உண்மை வேறு; இலக்கிய உண்மை வேறு;

ஈ. படைப்பு அது பயக்கும் முருகியல் இன்பத்தின் அடிப் படையில் மதிப்பீடு செய்யப்பெறும்.

என்னும் புதுத்திறனாய்வாளர்களின் கருத்துகள் ஆய்வுக் குறைபாடு உடையன என்று பின்வந்த அமைப்பியல்வாதிகள் கருதினர். அனுபவவழித் தத்துவத்தையும் (existentialism) அமெரிக்கப் புதுத்திறனாய்வாளர்கள் தமக்குரிய அடிப்படை யாகக் கொண்டமையால், இத்தகைய கோட்பாட்டினை உருவாக்கிக் கொண்டனர்.

இலக்கிய ஆய்வில் தோன்றிய இத்தகைய குறைபாடுகளை நீக்க வேண்டும் என்று கருதிய அறிஞர்கள் **இலக்கிய அமைப்பியல் வாதம்** என்னும் புதியதொரு கோட்பாட்டை உருவாக்கினர். மானுடவியல், சமூகவியல் போன்ற துறைகளுக்குப் பயன்பட்ட சசூரின் கோட்பாடுகளே இவர்களுக்கும் பயன்பட்டன. மொழி யோடு ஓரளவே தொடர்புடைய பிற துறைகள் சசூரைப் பின் பற்றக் கண்ட இலக்கியவாதிகள், முழுக்க முழுக்க மொழி யாலேயே படைக்கப் பெறும் இலக்கியத்திற்கும் அவருடைய கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டனர்.

சசூரின் 'the langue' 'the parole' என்னும் மொழியின் இரட்டையமைப்புக் கோட்பாட்டையும் வேற்றுநிலை வழக்கால் பொருள்களை உணர்த்தும் பொருள் குறிப்பீட்டுக் கோட்பாட் டையும் இவர்கள் பயன்படுத்தினர்.

ஒவ்வொரு மனிதனின் பேச்சும் அல்லது எழுத்தும் அம் மொழியின் தனிமனித வெளிப்பாடு (idiolect). இவ்வெளிப்பாடு, மொழியின் புறவடிவம் அல்லது தொழிற்படு வழக்கு (the parole) எனப்படுகிறது. பல்லாயிரக்கணக்கான மக்கள் பயன்படுத்தும் இத்தகைய புறவடிவங்களுக்கு எல்லாம் அடிப்படையாக அம் மொழியின் அகவடிவமாகிய இலக்கண வடிவமே (the langue) அமைகிறது. மொழியாராய்ச்சியில் ஈடுபட்ட அமைப்பு மொழி யியல் என்னும் துறை, தனிமனித வெளிப்பாடுகளாகிய புறவடி வங்களைத் தரவுகளாகக் கொண்டு ஒரு மொழியின் அகவடிவ மாகிய இலக்கண வடிவத்தை ஆராய்ந்து அறிந்து, பின்னர்

இலக்கண வடிவமாகிய அகவடிவிற்கும் தனிமனித வழக்கு களுக்கும் உண்டான தொடர்புகளையும் வேறுபாடுகளையும் கண்டறிந்து ஒரு மொழியின் தொழிற்படு வழக்கைப் (புற வடிவத்தை) பலவாகப் பாகுபடுத்தி ஆராய்ந்தது; வேறுபாடுகள் கண்டவிடத்து அவற்றிற்கான காரணங்களையும் விளக்கியது. இவ்வாறு அமைப்பு மொழியியல் ஒரு மொழியின் இலக்கணத்தை அறிவியல் அடிப்படையில் அமைத்துக் காட்டியது. புறவடிவத் தின் சாரமாக அகவடிவம் அமைந்திருப்பதையும், அகவடிவத்தின் தனிமனித வெளிப்பாடாகப் புறவடிவம் அமைந்திருப்பதையும் இவர்கள் விளக்கிக் காட்டினார்கள். எனினும் இவர்களுடைய ஆய்வுக்குத் தரவாக அமைந்தது புறவடிவமே தவிர அகவடிவம் அன்று. அகவடிவம் (the langue) எவ்வாறு உருவாயிற்றுஎன்றோ, யாரால் உருவாக்கப் பெற்றது என்றோ, அது உள்படுபொருளா இல் பொருளா என்றோ அமைப்பு மொழியியல் ஆராயவில்லை; இத்தகைய ஆய்வில் கருத்துச் செலுத்தவுமில்லை என்பது நினைவில் கொள்ளத் தக்கது. மொழியியல் துறையில் இவர்களுக்குப் பின்னர் வந்த நோவாம் சோம்ஸ்கி (Noam chomsky) என்னும் அறிஞர்தான் மொழியின் அகவடிவமாகிய இலக்கண வடிவத்தை ஆராய்வதில் கருத்துச் செலுத்தினார், செலுத்தியும் வருகிறார் என்பதையும் நினைவிற் கொள்வது நல்லது.

மொழியியல் ஆய்வுகள் இவ்வாறு அறிவியல் அடிப்படையில் நிகழ்த்தப்பட்டு வந்ததைக் கண்ட இலக்கியத் திறனாய் வாளர்கள் இலக்கியத்தையும் அறிவியல் அடிப்படையில் ஆராய முனைந்தனர். இந்த முயற்சியில் முதலில் அடியெடுத்து வைத்தவர்கள்தாம் புதுத் திறனாய்வாளர்கள். இவர்கள் இலக்கியப் படைப்புகளை, அதாவது தனிமனித இலக்கிய வழக்குகளைத் (literary idiolects) தரவாகக் கொண்டு இலக்கியப் படைப்பினை அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்தனர்; அதாவது இலக்கியப் புறவடிவங்களை (literary parole) ஆராய்வதில் ஈடு பட்டனர். அறிவியல் நெறிகளைத் தம் ஆய்வுக்கு உட்படுத்தின ரேனும், புதுத் திறனாய்வாளர்கள் அறிவியல் கண்ணோட்டம் (scientific perspective) உடையவர்களாகச் செயற்படவில்லை.

இங்கே, 'அறிவியல் கண்ணோட்டம்' என்பது குறித்து இடைப் பிறவரலாக, சிறிதளவேனும் விளங்கிக் கொள்வது தேவையாகிறது, நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐம் பெரும் பூதங்களையும் இவற்றின் கலப்பினாலும் மயக்கத்தாலும் தோன்றிய இப் பிரபஞ்சத்தின் பொருள்களையும் ஆராய்வது அறிவியலின் பணியாகும். இந்த ஆராய்ச்சியினை அறிவியல்

இருவகைகளில் நிகழ்த்துகிறது. முதலாவது இப்பூதங்களையும், பொருள்களையும் பகுத்தும் தொகுத்தும், 'இன்னது இன்ன தன்மைத்து' என்னும் வாய்பாட்டில் விளக்கிக் காட்டுவது. 'இன்ன தன்மைத்து' என்று காட்டுமிடத்து இவற்றின் இருப்பு நிலை, இயக்க நிலை (static and dynamic essentials) ஆகிய இருவகைப் பண்புகளையும் விவரித்துக் காட்டும் (descriptive) போக்கில் அமையும்.

இரண்டாவது இவற்றின் இருப்பு நிலைக்கும் இயக்க நிலைக்கும் அடிப்படையாக விளங்கும் தத்துவங்களைக் கோட் பாடுகளாக வடித்துக் காட்டுவது. இத்தகைய தத்துவங்கள் அல்லது கோட்பாடுகள் இப்பொருள்களின் இருப்பு நிலைக்கும் இயக்க நிலைக்கும் மூல காரணமாக விளங்கும் பொதுவிதிகளாக அமையும். பொதுவிதிகளைக் (General Law) கண்டறிவதுதான் அறிவியலின் இரண்டாவதும் இன்றியமையாததுமான பார்வை யாகும். அறிவியலின் இவ் இருவகைச் செயற்பாடுகளுள் முன்னது பருப்பொருளாகவும், நுண்பொருளாகவும் உள்ள தரவுகளை ஆராய்ந்து விளக்குவது; பின்னது இத்தரவுகளின் நிகழ்வுக்கு அடிப்படைக் காரணங்களைக் கண்டறிந்து விதிகளாக வரையறுத்துக் காட்டுவது. அறிவியலின் இவ் இருவகை அணுகு முறைகள் ''texonomic approach and theoretical approach'' என்று அழைக்கப்படுகின்றன. முதல் வகை ஆய்வுக்கு டார்வினின் கூர்தலறக் கோட்பாட்டையும், இரண்டாவது வகை ஆய்வுக்கு ஆர்க்கிமிடீசின் தத்துவம், நியூட்டனின் இயக்க விதிகள் போன்றவற்றையும் சான்றுகளாகக் கூறலாம்.

நார்த்ராப் ப்ரை (Northrop Frye) என்னும் மானுடவியல் அறிஞர்தான் முதன் முதலில் இத்தகைய அறிவியல் அடிப் படையிலான அமைப்பியல்வாத இலக்கியத் திறனாய்வை அமெரிக்காவில் தொடங்கி வைத்தார். ஜனாதன் கல்லர் (Jonathan Culler) தோடொரோவ், ஜெனெட், பார்த்திஸ் போன்ற ஐரோப்பிய அறிஞர்களின் அமைப்பியல்வாதக் கோட்பாடுகளும் இலக்கிய அமைப்பியல்வாதத் திறனாய்வுக்கு வழிவகுத்தன. இவ் அறிஞர்களிடையேயும் மொழி, இலக்கியப் பொருண்மை என்பன குறித்துச் சிறுசிறு கருத்து வேறுபாடுகள் நிலவியபோதிலும், இலக்கிய அமைப்பியல்வாதம் என்னும் பொதுக் கருதுகோளைப் பற்றி இவர்கள் ஒருமித்த கருத்துடைய வர்களாகவே விளங்குகின்றனர்.

புதுத் திறனாய்வாளர்கள் தனி மனிதப் படைப்புகளை ஆராய்வதில் ஆர்வம் காட்டினர் என முன்னர்க் கண்டோம்.

இவர்களுக்குப் பின்னர் இலக்கிய ஆய்வில் ஈடுபட்டோர் பெரும்பாலும் இலக்கியமல்லாத பிற துறை அறிஞர்கள். பெரும்பாலும் அறிவியல் துறைகளைச் சார்ந்தவர்கள். எனவே இவர்கள் அறிவியல் பார்வையில் இலக்கியப் படைப்பு களை ஆராய வந்தவிடத்துப் பொதுவிதிகளைத் தேடுவதில் ஈடுபட்டனர். அதாவது, தனிமனிதப் படைப்புகளுக்கு எல்லாம் அடிப்படையாக உள்ள பொதுவிதிகள் யாவை என்று ஆராய்ந்தனர். சசூரின் அகவடிவம், புறவடிவம் என்னும் அமைப்பியல்வாத மொழிக் கோட்பாட்டைப் பயன்படுத்தித் தனிமனிதனின் எழுத்துப் பரிமாணங்களாக விளங்கும் படைப்பு களுக்குரிய அகவடிவத்தைக் காண முனைந்தனர். மொழியின் பல்வேறு தொழிற்படு வழக்குகளுக்கு அடிப்படையான இலக்கண வடிவத்தை மொழியியலார் கண்டறிந்ததுபோல, இவர்களும் இலக்கியத்திற்குரிய இலக்கண வடிவைக் (grammar of literature i.e., the langue of literary expressions) காணும் முயற்சியில் ஈடுபட்டனர். அதன்படி ஒவ்வோர் இலக்கிய வகைமைக்கும் அடிப்படையாக ஓர் இலக்கண வடிவம் உண்டு என்றும், அத்தகைய பொதுவடிவின் தனிப் பரிமாணங்களே தனிமனிதப் படைப்புகள் என்றும் கண்டறிந் தனர். இவ் அகவடிவத்தைக் **கவிதையியல்** (Poetics) என்னும் பெயரால் இவர்கள் அழைத்தனர். இதுவே பின்னர் அமைப்பு வாதக் கவிதையியல் (structuralist poetics) என்று அழைக்கப் படலாயிற்று. இதனைச் சற்று விளக்கமாகக் கண்போம்.

சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் என்பன பல்வேறு தனிமனிதர் களால் உருவாக்கப் பெற்ற இலக்கியப் படைப்புகள். இவற்றைத் தனித்தனியே ஆராய்ந்து அவற்றின் சிறப்புகளை விவரிப்பது ஒருவகை ஆய்வு. இனி இத் தனிப்படைப்புகள் உருவாவதற்குரிய கொள்கைச் சட்டகம் எது என்று ஆராய்ந்து கண்டு, அந்த அடிப்படை சட்டகத்திற்கும் ஒவ்வொரு தனி மனிதப் படைப்புக்கும் உள்ள தொடர்புகளை ஆராய்தல் மற்றொரு வகை. இங்கே சட்டகம் என்பது மேலே குறிப் பிட்ட எல்லா நூல்களுக்கும் பொதுவானவையாகக் காணப் படும் வடிவக் கூறுகள், பாடு பொருட்கூறுகள், இலக்கிய வெளிப்பாட்டு உத்திகள் என்பவற்றின் தொகுப்பமைப்பைக் குறிக்கும். இத் தொகுப்பமைப்பு அருவமானது; மொழியினப் பொதுமையுடையது; தனிமனிதப் படைப்புகளுக்கு அடிப் படையாக, அதாவது தனியிலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையான இலக்கணமாக அமைவது; இத்தகையதொரு

கொள்கைச் சட்டகத்தை அமைப்பியல்வாதிகள் 'கவிதையியல்' என்னும் பெயரால் அழைக்கின்றனர்.[16]

அறிவியல் கண்ணோட்டத்தில் பார்க்குமிடத்து, இக் ''கவிதையியல்'' என்பது ஒரு பொது விதியாக (general science of literature) அமைகிறது. இப் பொதுவிதியின் அமைப்புக் கூறுகளைக் கொண்டு, தனிப் படைப்புகளை ஆராயலாம். எனினும் தனிப்பட்ட படைப்புகள் இப் பொது விதியின் வெறும் படிகள் அல்ல (not mere copies or replicas); பொதுவிதிகளை உட்கொண்டு உருவாகும் தனிப்படைப்புகள். பொதுவான நடனவிதிகளுக்கு உட்பட்டாலும், நடனக் கலைஞர்களின் தனிநடனங்கள் வேறுபட்டு அமைகின்றன; குறிப்பிட்ட தாள இராகங்களுக்கு உட்பட்டு இயற்றப் பட்டாலும் இசைப் பாடல்கள் (சாகித்தியங்கள்) தம்முள் வேறுபட்ட தனிச்சிறப்புகளைக் கொண்டனவாக விளங்கு கின்றன. 'காம்போதி இராகத்தின் ஆரோகண, அவரோகண சுரங்கள் ஒன்றாகவே இருப்பினும், இரண்டுபேர் பாடுமிடத்து அவ் இராக வெளிப்பாடு பலவகையாக இருத்தலைக் காண் கிறோம். இதுபோலவே குறிப்பிட்ட காப்பிய இலக்கணங் களுக்கு உட்பட்டு இயற்றப்பட்டனவாயினும், மேலே எடுத்துக் காட்டிய தமிழ்க் காப்பியங்கள் தத்தம் வழியில் இயன்று தத்தமக்குரிய தனிச் சிறப்புகளுடன் விளங்குவதுபோல, ஒரே கவிதையியலுக்கு உட்பட்டுத் தோன்றும் இலக்கிய வெளிப் பாடுகள் தத்தம் கலைத் திறனால் தனிச்சிறப்புடன் விளங்கும் தன்மையுடையன என்பது இலக்கிய அமைப்பியல் வாதத்தின் கோட்பாடாகும்.

இலக்கிய அமைப்பியல்வாதிகள் ஆராய்ந்து காண விரும்பும் 'கவிதையியல்' என்பது, 'இலக்கிய இயல்' (Literary System) 'இலக்கியப் பொது அறிவியல்' (general Science of Literature) 'இலக்கியத்தின் இலக்கணம்' (Grammar of Literature) என்றெல்லாம் பலபடப் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. இனி, இலக்கிய வாசகர்கள் நோக்கில், 'வாசகர் வழிகாட்டி', 'வாசகர் கையேடு' (manual of reading) என்றும் பின் தலைமுறை அமைப்பியல்வாதிகளால் இக்கவிதையியல் அழைக் கப்படுகிறது.

---

16. Tzvetam Todorov, ''Definition of Poetics,'' **Twentieth Century Literary Theory** ed. K. M. Newton, (Newyork : St, Martin's Press, 1988) P. 133,

தனிப்பட்ட இலக்கியப் படைப்புகளுக்கு அடிப்படையாகவும் உயிர்ப்பாகவும் அமைந்திருக்கும் கவிதையியல் ஓர் அருவ அமைப்பு. இது தன்னுள் உளவியல், சமூகவியல், இலக்கியவியல் மற்றும் பண்பாடு சார்ந்த கூறுகளையெல்லாம் அடக்கி நிற்கும் தன்மையது. எனினும் இலக்கிய அமைப்பியல் வாதிகள் இலக்கியவியல் தவிர்ந்த பிற துறைக் கூறுகளை ஆராய்வதில் ஆர்வம் காட்டுவதில்லை. ஒரு படைப்பு இலக்கியச் செவ்வி (Literariness) உடையதாய் அமைவதற்குத் தேவையான அடிப்படைப் பொதுக்கூறுகளை மட்டுமே ஆராய்வதில் ஆர்வம் காட்டுகின்றனர். எனவே அமைப்பியல்வாதக் கவிதையியல் என்பது ஓர் அருவப் பொருளான கொள்கைச் சட்டத்தைக் குறிக்கிறது என்றும் இச்சட்டக அமைப்பு பிறதுறைக் கூறுகளோடு தொடர்புடையதாயினும் தனக்குரிய இலக்கியச் செவ்வியை மட்டுமே கருத்தில் கொள்ளும் இயல்பினது என்றும் அறிகிறோம்.[17]

மொழியினால் இயலுவது இலக்கியம். எனவே மொழியோடு தொடர்புடைய மொழியியல், உளவியல், மானுடவியல், சமூகவியல் துறைகளும் இலக்கியத்தை அமைப்பியல்வாத நோக்கில் ஆராய்கின்றன. அந்நிலையில் இத்துறைகள் இலக்கியப் பொதுவிதிகளின் தொகுப்பாகிய கவிதையியலைத் தத்தம் துறைக்கூறுகளுடன் இயைபுபடுத்தி ஆராயுமிடத்துப் பல்வேறு வகையான இலக்கிய ஆய்வுகள் தோற்றம் பெறுகின்றன. உளவியல் திறனாய்வு, மார்க்சியத் திறனாய்வு, மொழியியல் திறனாய்வு, மானுடவியல் திறனாய்வு என்பன இவ்வடிப்படையில் செயல்பட்டு வரும் பல்வேறு அமைப்பியல்வாதத் திறனாய்வுகளாகக் காணப்படுகின்றன.

இத்தகைய இலக்கிய அமைப்பியல் வாதத்தின் அடிப்படைக் கருத்துக்களைச் சுருக்கமாகக் காண்போம்:

*(1)* **தனி மனிதப் படைப்புகள்** அடியூற்றாக உள்ள பொது விதிச் சட்டகமாகிய கவிதையியலின் அமைப்புகள் அனுமதிக்கும் வகையில் இயற்றப்படுகின்றன. ஒலியன்களை இலக்கியச் செவ்விக்குத் துணையாகுமாறு அமைத்தல்; சொல்லாட்சி, தொடர் அமைப்பு, கிளத்தல் முறைகள். உத்திகள், இலக்கிய வகைமைகள் இவை எல்லாவற்றையும் இலக்கியப் படுத்தும்போது உட்கொள்ளப்படும் வாழ்வியல் பார்வை ஆகிய பல அமைப்புகள் அல்லது விதியொழுங்குகளின் ((Systems) அடிப்படையில் தனி மனிதப் படைப்புகள் இயற்றப் படுகின்றன.

---

17. ibid P. 134.

(2) **தனி மனித இலக்கியப் படைப்புகள்** இப் பல்வேறு அமைப்புகளைப் பயன்படுத்தும் பாங்கினால் தமக்கெனத்தனித்த பொருளையும் சுட்டுகின்றன. அதாவது, இவ் அமைப்பு வேறு பாடுகளே பொருள் சுட்டும் (Significance) ஆற்றலுடையன. ஒலியன்கள் வேற்றுநிலை வழக்கால் பொருள் சுட்டுகின்றன என்னும் சசூரின் மொழியியல் கோட்பாட்டை அடியொற்றிக் கவிதையியலாகிய பொதுவிதிகளின் அமைப்புக்கும் தனிமனிதப் படைப்பின் அமைப்புக்கும் இடையிலான வேறுபாடுதான் ஓர் இலக்கியப்படைப்பின் பொருள் என்று சில அமைப்பியல்வாதிகள் கூறுகின்றனர். இவ் அமைப்பிலுள்ள கூறுகள் தனித்தனியே பொருள் தருவனவல்ல; ஒலிநயம், சொல்லாட்சி, தொடரமைப்புகள், அணிகள் போன்றவை கவிதையியலாகிய விதியொழுங்குக்கு ஏற்ப அமையும்போது மட்டுமே பொருள்தரும் இயல்பின என்பதும் இவர்களுடைய கருத்து.

அமைப்பியல் வாதிகள் கருதுகோளாக முன்னிறுத்தும் கவிதையியல் என்பது தனிப்பட்ட பாடல் அல்லது நூல்களுக்குச் சொற்பொருளோ விளக்கமோ தரும் உரைவகைகளுள் ஒன்றன்று, குறிப்புரையுமன்று; விருத்தியுரையுமன்று. தன்னடிப்படையில் எழும் பாடல்கள் அல்லது நூல்கள் எந்தெந்தச் சூழல்களில் தோன்றுகின்றன; என்னென்ன வகைகளில் பொருள்தரும் இயல்பின; ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகையைச் சார்ந்த பாடல் அல்லது நூல் எவ்வெவ்வாறெல்லாம் பொருள் கொள்ள இடமளிக்கும்; பல்வேறு சூழல்களில் பல்வேறு பொருள் தருவதாக எவ்வாறு ஒரு பாடல் அல்லது ஒரு நூல் இயற்றப்படலாம் என்றெல்லாம் விளக்கக் கூடியதாக இக்கவிதையியல் அமையும். எனவே இவர்கள் கருதும் கவிதையியல் என்பது பொருண்மையியல் நூலன்று; மாறாக ஓரிலக்கியப் படைப்பு பொருள்தரும் சூழல்களையும், பல்வேறு வகையாகவும் பொருள்கொள்ள இடம்தரும் படைப்பு உத்திகளையும் உள்ளடக்கி நிற்கும் ஓர் இலக்கண அமைப்பு என்று இதனை உணர்ந்து கொள்ள வேண்டும். மேலும் இங்கே பொருள், பொருள் என்று கூறுவதெல்லாம் மேலே குறிப்பிட்டவாறு சொற்பொருளோ, திரண்ட கருத்துரையோ அன்று; நம் மரபில் கூறினால் திணைப் பொருளையும், துறைப் பொருளையுமே இவர்கள் பொருள் என்று கூறுகின்றனர். வாய்பாட்டுப் பொருளாக உள்ள இப்பொருளை இவர்கள் "empty meaning" என்னும் தொடரால் குறிக்கின்றனர்.[18]

---

18, Jonathan Culler. **Structuralist Poetics** (London; Routledge and kegan Paul, 1975), P. 119.

(3) **இனி ஓர் அமைப்புக்கு உட்பட்டு** இயற்றப்பெறும் ஓர் இலக்கியப் படைப்பை மதிப்பீடு செய்யலாகாது என்பது அமைபியல் வாதத்தின் மற்றொரு கொள்கையாகக் காணப்படுகிறது, ஏனெனில் பொதுவிதிகட்கு இணங்கப்படைக்கப்படும் ஓரிலக்கியம் அமைப்பியல்பால் பொருள் தருகிறது. இப்பொருள் அமைப்பியல்பால் தானே உண்டாவது. இவ்வாறு உண்டாகும் படைப்பின் பொருளை மதிப்பீடு செய்யுமிடத்துத் தனிமனிதக் கூறுகள் இடையிட்டுத் திரித்துணர வாய்ப்பு ஏற்படுமாகலின் மதிப்பீடுகள் தேவையற்றன. மேலும் மதிப்பீடுகள் நிலையானவை அல்ல; தரவுகளின் அடிப்படையில் அமைவனவும் அல்ல; மதிப்பீடுகள் விருப்பு வெறுப்பு என்னும் அகவயப்பட்ட பண்புகளால் உருப்பெறுபவை. எனவே புறவயப்பட்ட ஒரு பொருளை அகவயமாக மதிப்பிடுதல் வேண்டாதது; அறிவியல் தன்மைக்கு ஒவ்வாதது என்பதும் இவர்களுடைய கருத்தாகும்.[19]

(4) **அமைப்பியல் வாதத்தின்** மற்றொரு இன்றியமையாத கோட்பாடு மனிதமனம் (mind or self) பற்றியது. மனித மனம் தன்வயமானது (subjective); தனித்துவமுடையது (an entity) தன்னறிவுடையது (self knowing) என்னும் அனுபவ வழித் தத்துவத்திற்கு அமைப்பியல் வாதத்தில் இடமில்லை. இவ்வாதத்தின்படி, மனித மனம் என்பது சமுதாய அமைப்பாலும் விதியொழுங்குகளினாலும் உருவாகிறது. புதியதாகப் பிறக்கும் ஒவ்வொரு மனிதனும் இவ் அமைப்புக்கும் ஒழுங்கிற்கும் ஆட்படுத்தப்படுகிறான். எனவே தனித்துவமும், தன்னறிவுடைமையும் மனித மனத்துக்கு இல்லை என்பது இவ்வாதத்தின் உட்கிடக்கையாகக் காண்கிறோம்.[20]

---

19. Northop Frye **Anatomy of criticism** PP. 18, 72.

20. Structuralism's significance lies at the Level of the Concept of human Subjectivity, of self... Individual subjectivity as commonly understood a consicous, personally motivated. self knowledgeable, individual, a self as entity, in contact with a reality that can be uncovered, revealed in the process of mentally discovering it is rejected. Replacing it is a concept of the self or more exactly of subjectivity, as constituted by systems, structures, in which each newborn human is immersed. (Art Berman P. 131)

மேலை இலக்கியக் கோட்பாட்டயர்ச்சியிலிருந்து சற்று ஒதுங்கிச் சிந்தனை இளைப்பாறலாகச் சிலவற்றை இங்கே காணலாம். அமைப்பியல்வாதக் கோட்பாடுகள் பற்றி இதுவரை மேலே கூறியவை கொச்சைப்படுத்தப்படவில்லை என்றாலும் கூட, மிகமிகச் சுருக்கமாகக் கூறப்பட்டன என்பதில் ஐயமில்லை. இலக்கிய அமைப்பியல்வாதம் என்னும் பெயரில் இந்தப் பேரறிஞர்கள் எல்லாம் பலவாறாகக் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள் என்றும், இலக்கியத்தை விட்டு விட்டு வேறு எங்கெங்கோ நம்மையெல்லாம் இழுத்து அலைக்கிறார்கள் என்றும் கருதுகின்ற ஒருவகையான சலிப்புணர்வு மேலைநாட்டு இலக்கிய ஆய்வாளர்களிடமே அண்மையில் தோன்றியுள்ளது என்பதைக் காணும்போது, இவை நமக்கும் குழப்பமாகவும், ஒன்றாக்கி ஒன்றிழைக்கும் முயற்சியாகவும் தோன்றுவது இயல்பே. எனினும் நம்முடைய இந்தியத் திறனாய்வு மரபினை, குறிப்பாகத் தமிழிலக்கியக் கோட்பாட்டு மரபினைச் சற்றுத் திரும்பி நோக்கினால் இத்தகைய குழப்பம் குறையும்.

நம்முடைய தொல்காப்பியப் பொருளதிகாரம் என்பது என்ன? எழுத்தும் சொல்லும் கூறிமுடித்த ஆசிரியர் பொருளைப் பற்றிப் பேசுவதால் பொருளதிகாரம் என்று பெயர் பெற்றது என்பது அதிகாரப் பெயர்க் காரணம். ஆனால் என்ன பொருளைப் பற்றிப் பேசுகிறது? உறுதிப் பொருள்களுள் ஒன்றான பொருளைப் பற்றி பேசவில்லை. சொற்கள் தரும் பொருளைப் பற்றியும் பேசவில்லை; சொற்றொடர்கள் உண்டாக்கும் மொழிப் பொருளைப் பற்றியும் பேசவில்லை. பின்னர் வேறு எதைப் பற்றிப் பேசுகிறது?

இலக்கியம் பற்றிப் பேசுகிறது; இலக்கியப் பாகுபாட்டைப் பற்றிப் பேசுகிறது. அகம், புறம் என்னும் இலக்கிய வகைமை பற்றிப் பேசுகிறது. அகப்பொருள் இலக்கியத்தின் திணைப் பகுப்பு, துறைப் பகுப்பு, அகப்பொருள் மாந்தரின் பண்புகள் அவர்களது ஒழுகலாறுகள் நிகழ்தற்குரிய நிகழ்ச்சிக் களன்கள், கூற்றுகள் நிகழ்த்துதற்குரிய சூழல்கள், எந்தெந்தச் சூழலில் யார் யார், யார் யாரிடம் என்ன பேசலாம், பேசக்கூடாது என்னும் கூற்று வரையறைகள் ஆகியன இலக்கணங்களாக - இலக்கிய மரபுகளாக முறைப்படுத்திக் கூறப்படுகின்றன. இவ்வாறே புறப்பொருள் மரபுகளும் பேசப்படுகின்றன. அகநானூறு, குறுந்தொகை, கலித்தொகை போன்ற இலக்கியங்

களைப் பற்றிப் பேசவில்லை; ஆனால் அவை தோன்றுதற்குரிய அடிப்படைகளைக் கூறுகின்றது. அவ்விலக்கியங்களுக்குரிய சொற்பொருள் கூறுவனவாக அகத்திணைப் பகுதிகள் அமைய வில்லை. ஆனால் அவ் இலக்கியங்களுக்கு எவ்வாறு பொருள் காண வேண்டும் என்று விளக்கும் பொருள்கோள் முறைகளைக் கூறுகின்றது. அகத்திணை இலக்கணங்களைக் கொண்டு எத்தனை அகப்பொருட் பாடல்கள் / நூல்கள் தோன்றலாம்? விடை எண்ணிலி (infinity). சான்று, சங்க அகப்பொருள் பாடல்களும் பின்னர்ப் போந்த பல்லாயிரக்கணக்கான அகப் பாடல்களும்தான். அகப்பொருள் என்னும் தமிழ் இலக்கிய வகையின் கவிதையியல்தான் தொல்காப்பியம் காட்டும் அகத்திணை மரபுகள். சசூர் கருதும் 'the langue' போன்றது தான் தொல்காப்பியம். அவர் கருதும் 'the parole' போன்றவை தான் சங்ககால அகப்பொருள் பாடல் தொகுதிகள். புறப் பொருள் தொடர்பான இலக்கியங்களுக்கும் இது பொருந்தும்.

இத்தகையதொரு இலக்கிய பொது விதிச் சட்டகத்தை ஆராய்ந்து உருவாக்கும் முயற்சியைத்தான் இலக்கிய அமைப்பியல்வாதிகள் மேற்கொண்டிருக்கின்றனர். மேலை நாட்டு இலக்கிய மரபில் தொல்காப்பியப் பொருளதிகாரம் போன்றதோர் கவிதையியல் இதுவரை தோன்றியுள்ளதாகத் தெரியவில்லை. கிரேக்க மேதை அரிஸ்டாடிலின் கவிதை யியல் வேறு; அமைப்பியல் வாதிகள் கருதும் கவிதையியல் வேறு. மேலே குறிப்பிட்ட அமைப்பியல் வாதக் கவிதையியல் கோட்பாடுகளில் பெரும்பாலானவை நம் பொருளதிகாரத்துள் பொருந்திக் கிடப்பதை எளிதின் உணரலாம். தொல்காப்பியப் பொருளதிகாரத்தைக் கொண்டு இலக்கிய அமைப்பியல்வாதிகள் விவாதிக்கும் ஒரு முக்கியமான கோட்பாட்டை மிக எளிதில் விளங்கிக் கொள்ளலாம். சான்றாக:

மரபு வழிபட்ட இலக்கியப் பொது விதியமைப்பாகிய கவிதை யியலுக்கு உட்பட்டு இயற்றப்படும் தனிமனித இலக்கியப் படைப்புகளை ஆராய்வதற்கு, அதாவது அவற்றின் துறைப் பொருண்மைகளை உணர்ந்து கொள்வதற்கு அக் கவிஞரைப் பற்றிய வரலாறு தேவைப்படாது; இலக்கண வடிவமே துறைப் பொருண்மையை நல்கும் இயல்புடையது. எத்தனைக் கவிஞர்கள் ஒரு துறையைப் பற்றி அல்லது ஓர் இலக்கிய வகைமையைப் பாடினாலும் அப்பொருண்மையில் குறிப்பிடத் தக்க மாற்றம் எதுவும் இருக்காது என்பது இலக்கிய அமைப்பியல் வாதத்தின் கோட்பாடுகளுள் ஒன்று. 'வரைவு கடாதல்' என்னும்

ஒரு துறைப்பொருண்மை பற்றி எத்துணைக் கவிஞர்கள் பாடினாலும், பொருண்மையில் மாற்றம் நிகழாது என்பதும், அக் கவிஞர்களின் பெயரையே அறியவில்லையாயினும் அப்பாடற் பொருண்மையை உணர்ந்து கொள்வதில் சிக்கல் ஏதும் தோன்றாது என்பதும் பொருளதிகாரம் பயின்றவர்க்கு வெள்ளிடைமலை.

பாடல் தோற்றத்திற்குத் துணையாகப் பயன்படும் உலகியல் பார்வை, கற்பனைப் பாங்கு, நாடக உத்தி முதலிய இலக்கிய உத்திகளும் இக்கவிதையியலின் கட்டுக் கோப்புக்கு உட்பட்டனவாதலின், தனிப்பட்ட கவிஞரின் தனியாளுமை பொருண்மை விளக்கத்திற்குத் தேவைப்படாது என்னும் இவர்களுடைய கோட்பாட்டிற்குத் தெளிவான விளக்கச் சான்றாக நம்முடைய பொருளதிகாரம் அமைந்திருக்கக் காண்கிறோம். உவமை, உருவகம், இறைச்சி, வருணனை போன்ற உத்திகளைப் பயன் படுத்துவதில் கவிஞரின் தனியாளுமையும் சுதந்திரமும் வெளிப் படுமேனும் துறைப் பொருண்மைக்கு அல்லது வாய்பாட்டுப் பொருண்மைக்கு (empty meaning or structural meaning) அவை வேண்டப்படுவனவல்ல; இத்தகைய தனிச்சிறப்புகள் தனிப்பட்ட நூல்களைத் திறனாய்வு செய்யுமிடத்து வெளிப் படும். அமைப்பியல்வாதிகள் தனிவெளிப்பாடுகளில் ஆர்வம் செலுத்துவதில்லை; அவற்றிற்கடிப்படையான பொது விதிகளே அவர்களுடைய ஆய்வுப் பொருளாக அமைகின்றன என்று முன்னரே கண்டோம். இவ்வாறு படைப்பாளியின் தனியாளுமை இங்குப் புறகணிக்கப்படுகிறது.

இனி, இத்தகைய கவிதையியலுக்குப் பொருள் காணும் வாசகர்களின் தனியாளுமைக்கேற்பப் பல்வேறு பொருள்களை ஒரு படைப்பு தரவல்லது என்பதையும் அமைப்பியல்வாதிகள் ஏற்றுக் கொள்வதில்லை. மரபுச் சட்டகமே பொருட்குறிப்பை உணர்த்தும் இயல்பினதாகையால் தனிப்பட்ட வாசகர்கள் இத் தகைய படைப்புகளில் பல்வேறு பொருண்மைகளைக் காண வாய்ப்பில்லை. காலமும் களனும் கடந்து நிற்கும் பிறிதொரு சூழலுக்கு உரிய வாசகர்கள் கூடப் பழமையாகிப்போன இலக் கியப் படைப்புகளுக்குப் பொருள்காணுமிடத்துத் துறைப் பொருண்மையை உணர்ந்து கொள்வதில் இடர்ப்பட வேண்டிய தேவை இல்லை. எனவே வாசகர்களுக்கேற்பப் படைப்புகள் பொருள் வேறுபடும் என்னும் கருத்தை அமைப்பியல் வாதிகள் ஏற்றுக் கொள்வதில்லை.

நம்முடைய சங்க இலக்கியப் பாடல்களுக்குக் காலந்தோறும் எழுந்து வந்துள்ள உரைகளை நோக்கினால் இக்கருத்து எளிதில்

புலனாகும். உரைகள் படைப்புக்குப் பல நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றியவையாயினும் பாடல்களின் துறைப் பொருண்மையை உணர்த்துவதில் அவை இடர்ப்படுவதில்லை. உரைவேறுபாடுகளாகக் காணப்பெறுவனவெல்லாம் பாடபேதம் குறித்தனவாகவோ பொருளதிகார நூற்பாக்களுக்கு ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளாகவோ இருக்கக் காணலாம். பொருளதிகாரச் சட்டகம் இல்லாமல் அப்பாடல்களுக்குப் பொருள் காண இயலாது என்பது தெளிவு. எனவே பொருள்காணலுக்கு வாசகரின் தனியாளுமை தேவைப்படாது என்னும் அமைப்பியல் வாதக்கருத்து நம் சங்க இலக்கியத்தைத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தோடு பொருத்திப்பார்க்குமிடத்து எளிதில் உணர்ந்து கொள்ளத் தக்கதாக உள்ளது.

இவ்வாறு படைப்பாளி, வாசகன் என்னும் இருகூற்றுத் தனியாளுமைகளையும் புறக்கணிக்கும் வகையில் அமைந்துள்ள இலக்கிய அமைப்பியல்வாதத்தை மேலை நாட்டு அறிஞர் குழாம் இன்னும் ஒருமித்த கருத்தாக ஏற்றுக்கொள்ளவில்லை. இந்த வாதம் எல்லாவகையான இலக்கியப் படைப்புகளுக்கும் பொருந்துமா என்பது இன்னும் தெளிவுபடவில்லையாயினும், இலக்கிய வகைமைச் (genre) சட்டகங்களைக் கொண்ட கவிதையியல் அமைப்புக் கோட்பாடு நம் பொருளதிகாரத்திற்குப் பின்னர் வந்த பாட்டியல்களுக்கும் அவற்றின் அடிப்படையில் எழுந்துள்ள இலக்கியங்களுக்கும் நன்கு பொருந்திவரக் காண்கிறோம். இனித் தொடர்ந்து இலக்கியக் கோட்பாட்டு வரலாற்றை நோக்குவோம்.

## புதுத்திறனாய்வும் இலக்கிய அமைப்பியல் வாதமும்

புதுத்திறனாய்வுக் கோட்பாடுகளுக்கும் அமைப்பியல் வாதக் கோட்பாடுகளுக்கும் இடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை இனிக் காணலாம்.

### ஒற்றுமைகள்

1. இலக்கியப் படைப்பு ஒரு புறமைப் பொருள்.
2. எனவே இவக்கியப் படைப்புகளை ஆராய்வதற்கு அறிவியல் முறைகளைப் பின்பற்ற வேண்டும்.
3. இலக்கியப் படைப்புகளை ஆராய்வதற்குப் படைப்பைத் தவிர்த்த பிற புறத்துறைகள் தேவைப்படா.

4. படைப்பு எழுந்த சமுதாயச் சூழல், சமுதாயத்திற்கும் படைப்புக்கும் உள்ள தொடர்பு ஆகியன இலக்கிய ஆய்வுக்குத் தேவைப்படாதன.

மேலே காட்டப் பெற்ற கருத்துகளில் புதுத்திறனாய்வும் இலக்கிய அமைப்பியல் வாதமும் ஒன்றுபடுகின்றன. எனினும் இக் கருத்துகளைச் செயற்படுத்துகையில் இவை தம்முள் வேறுபடவும் செய்கின்றன.

**வேற்றுமைகள்**

1. புதுத்திறனாய்வு பொதுவாக இலக்கிய ஆய்வு என்று குறிப்பிட்டாலும், கவிதை, நாடகம் என்னும் இருவகை இலக்கியங்களை மட்டுமே இது பெரும்பாலும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டது. அமைப்பியல் வாதமோ, செய்யுள் வடிவ இலக்கியம், உரைநடை இலக்கியம் ஆகிய எல்லா வகை இலக்கியங்களையும் தன் ஆய்வுக்கு உட்படுத்துகிறது. இந்நிலையில் அமைப்பியல் வாதிகளின் கவிதையியல் (Poetics) என்பது இலக்கிய இயல் என்னும் பொதுப் பொருளில் கையாளப்படுகிறது என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். எனவே புதுத் திறனாய்வாளர்களை விட அமைப்பியல் வாதிகளின் இலக்கியப் பார்வை பரந்துபட்டது என்பதும் இலக்கியத் தன்மை உடைய எழுத்துகளெல்லாம் அவர்கள் பார்வையில் இலக்கியங்களே என்பதும் தெளிவாகின்றன.

2. அறிவியல் அடிப்படையில் இலக்கியங்களை ஆராய வேண்டும் என்பதில் இவ் இருகோட்பாடுகளும் ஒன்றுபடுகின்றன. ஆயினும் செயற்பாட்டில் வேறுபடுகின்றன. அதாவது சசூர், மொழிக்கு இரண்டு வடிவங்கள் உண்டு என்று கூறித் தனிமனித வழக்கைப் புறவடிவம் (the parole) என்றும், மொழியின் இலக்கணக் கூறுகள் அடங்கிய அமைப்பை அகவடிவம் (the langue) என்றும் பெயரிட்டு அழைத்தார். மொழியியல் அறிஞர்கள் இந்த இரட்டையமைப்பு அடிப்படையில் தம் ஆய்வைச் செய்தனர். அவர்களுள் அமைப்பு மொழியியலார் (Structural linguists) மொழியின் புறவடிவத்தை ஆராய்வதில் மிகுதியும் ஆர்வம் காட்டினர். அவர்களுக்குப் பின்னர் வந்த சோம்ஸ்கி போன்ற மொழியியல் அறிஞர்கள் மொழியின் அகவடிவமாகிய இலக்கணக் கட்டுக்கோப்பு விதிகளையும், இலக்கண வடிவத்திற்கும் தொழிற்படு வழக்கிற்கும் இடையில் உள்ள தொடர்புகளையும் ஆராய்வதில் மிகுதியும் ஈடுபட்டனர்.

ஏறக்குறைய இதே போன்ற நிலை இலக்கியக் கோட்பாட்டு ஆய்விலும் காணப்படுகிறது.

புதுத் திறனாய்வு தனிப் படைப்புகளை ஆராய்வதைப் பணியாகக் கொண்டது. எழுத்தாளனிடமிருந்து உருப்பெற்று ஒரு படைப்பாக வெளிவந்ததும் அந்தப் படைப்பை மட்டுமே ஆராய்வது புதுத் திறனாய்வின் நோக்கம். இதனை இலக்கியப் பொது விதிகளின் தொழிற்படு வழக்கு (functional form of the literary parole) என்று கூறலாம். அமைப்பியல் வாதிகள் தனி மனிதப் படைப்புகளை ஆராய்வதில் ஆர்வம் காட்டவில்லை. மாறாக, இப்படைப்புகளுக்கு அடிப்படையாக விளங்கும் பொது விதிகளடங்கிய ஒரு சட்டகத்தை இலக்கியத்திற்கு அடிப்படையான இலக்கணப் பொதுவடிவை, அருவ நிலையிலான ஓர் இலக்கிய விதியொழுங்கை (a System of Literature) ஆராய்வதைத் தம் நோக்கமாகக் கொண்டனர். எனவே புதுத் திறனாய்வைவிட அமைப்பியல்வாதம்தான் அறிவியல் கோணத்தில் இலக்கிய ஆய்வை மேற்கொண்டது என்று கூறலாம்.

3. ஓரிலக்கியப் படைப்பு எழுத்தாளனின் தனியாளுமையின் விளைவாக உருவாகிறது என்று புதுத் திறனாய்வாளர்கள் நம்பினர். ஒரு படைப்பின் பொருண்மைச் சிறப்பிற்கு அதன் ஆசிரியனே காரணம் என்பது இவர்களுடைய கோட்பாடு. இலக்கியப் படைப்பாக்கத்தில் இத்தகைய தனியாளுமையை அமைப்பியல்வாதம் ஏற்றுக் கொள்ளவில்லை. கவிதையியலின் பொதுவிதிச் சட்டகத்திற்கு உட்பட்டே படைப்பு நிகழ்தலின், எழுத்தாளன் செயலூக்கி (catalytic agent) போன்ற ஒரு கருவி அல்லது வாயில்தானே (medium) தவிர வேறில்லை என்பது அமைப்பியல்வாதக் கோட்பாடு.

4. ஒரு படைப்பு தன் மொழிவடிவால் பொருள் உணர்த்துகிறது; கவிஞனின் மொழி வடிவமே பொருளைச் சுட்டும் இயல்புடையது என்பது புதுத் திறனாய்வாளர்களின் கோட்பாடு. ஒரு படைப்பு தான் எழுவதற்கு அடிப்படையாக இருக்கும் கவிதையியலின் அமைப்பினால் பொருளுணர்த்தும் தன்மையது என்பது அமைப்பியல்வாதக் கோட்பாடு. சுருங்கக் கூறின் புறவடிவமாகிய மொழி வடிவம் பொருள் உணர்த்தும் என்று புதுத் திறனாய்வு கருதுகிறது; படைப்புக்கு ஆதாரமாக

விளங்கும் அக அமைப்பே பொருளைச் சுட்டுகிறது என்று அமைப்பியல்வாதம் கூறுகிறது என இவற்றை வேறுபடுத்திக் காணலாம்.

5. மனித மனம் பற்றிய கருத்தில் இரு கோட்பாடுகளும் எதிர் எதிரான பார்வைகளைக் கொண்டுள்ளன. மனம் என்பது தன்னியலானது; தானே தோன்றியது; பொருள்களைத் தானே அறியும் ஆற்றலுடையது; தானியங்கித் தன்மையுடைய ஒரு தனித்துவப் பொருள் என்பது புதுத் திறனாய்வாளரின் கோட்பாடு. மனம் தானே உருவானதன்று; சமுதாய அமைப்பாலும், சமுதாய விதியொழுங்குகளாலும் உருவாகிறது. தன்னியலான தனித்துவப் பொருளன்று; தானேயறியும் ஆற்றல் உடையது மன்று என்பது அமைப்பியல்வாதக் கோட்பாடு. எதிரிடையாகக் காணப்பெறும் இவ்வேறுபாட்டிற்குக் காரணம் இவர்கள் மேற் கொண்ட தத்துவப் பார்வைகளே என்னும் செய்தி முன்னரே விளக்கப் பெற்றது.

6. இலக்கியப் படைப்பு ஒரு தனி மனித ஆளுமையின் வெளிப் பாடு என்று கருதியமையாலும், அது முருகியலின்பம் பயந்து அதன் வழியாக நீதிகளை உணர்த்துதலாகிய இலக்கியப் பயனை உடையது என்பதைக் கோட்பாடாகக் கொண்டமையாலும், இலக்கியப் படைப்புகள் அவற்றின் அடிப்படையில் மதிப்பீடு செய்யத்தக்கன என்று புதுத்திறனாய்வு கருதியது. இலக்கியப் படைப்பு முயற்சியில் படைப்பாளியை வெறும் வாயிலாகக் கருதுவதாலும் கவிதையியல் அமைப்பின்படி தனிமனிதப் படைப்புகள் அமைந்திருப்பதை விளக்குவதோடு அமைதியடைவ தாலும், மதிப்பீடுகள் மதிப்பிடுவோனின் விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் செய்யப்படுவதாலும் அமைப்பியல் வாதம் இலக்கிய மதிப்பீடு செய்வதை ஆதரிக்கவில்லை. ஓரிரு அமைப்பியல்வாதிகள் தனிப்படைப்புகளை ஆராய்ந்தாலும், அமைப்பியல்வாதம் இலக்கியப் பொது மரபுகளின் தொகுப் பாகிய கவிதை இயலை (Universal poetics) ஆராய்ந்தறிவதில் அடிப்படைக் கவனம் செலுத்துவதால், அமைப்பியல்வாதக் கோட்பாட்டில் மதிப்பீடு செய்யும் வாய்ப்பே நேர்வதில்லை.

7. உருவம், உள்ளடக்கம், அதாவது வடிவம், பொருண்மை என்னும் இரட்டை நிலைக் கோட்பாட்டை உடையது புதுத்திறனாய்வு. மொழி பொருளைச் சுட்டும் என்று இவர்கள் கருதுவதால் மொழிவேறு, பொருள் வேறு என்னும் கொள்கையுடையவர்களாகப் புதுத் திறனாய்வாளர்கள்

காணப்படுகின்றனர். இந்த இரட்டைநிலைக் கோட்பாட்டை அமைப்பியல் வாதிகள் ஏற்றுக்கொள்வதில்லை. அவர்களைப் பொறுத்தவரையில் கட்டமைப்பே உள்ளடக்கம்; உள்ளடக்கமே கட்டமைப்பு; கட்டமைப்பு சிதையின் உள்ளடக்கமும் சிதையும் என்று கருதுகின்றனர். இவ் இரு கொள்கைகளையும் முறையே இறையியல் சாராத துவைதம், அத்வைதம் என்று கருதலாம்.

பலாப்பழம் என்பது உறுதியான மேலமைப்பால் பொதிந்து வைக்கப்பட்டுள்ள சுளைகளை உடையது; மேலமைப்பைப் பிரித்துப் பார்த்தால் சுளைகள் காணப்படுகின்றன. பலாப்பழம் என்ற ஒரே சொல்லால் குறிக்கப்படினும் தோலும் சுளையும் ஆகிய இரண்டும் வெவ்வேறாகப் பிரித்துணரத் தக்கனவாக உள்ளன. புதுத் திறனாய்வாளரின் துவைதக் கோட்பாட்டிற்கு எடுத்துக் காட்டாகப் பலாப்பழத்தைச் சுட்டலாம். இனிக் கரும்பு என்னும் சொல்லை எடுத்துக் கொண்டால், அதனால் சுட்டப்படும் பொருளைக் கரும்பு வேறு, சாறு வேறு என்று பிரிக்க இயலாது; கரும்பென்பதே சாற்றைத்தான் குறிக்கும். சாற்றின் வடிவமே கரும்பு; சாறே கரும்பு. வடிவத்தை அழித் தால் சாறும் அழியும். எனவே அமைப்பியல் வாதிகளின் அத்வைதக் கோட்பாட்டிற்குக் கரும்பை உதாரணமாகக் காட்டலாம்.[21]

இவ்வாறு சில நிலைகளில் ஒத்தும் பல நிலைகளில் வேறு பட்டும் நிற்கும் இவ் இருவகைக் கோட்பாடுகளில் புதுத் திறனாய்வுக் கோட்பாடு பெரும்பாலும் இந்த நூற்றாண்டின் அறுபது எழுபதுகளில் செல்வாக்கு இழக்கத் தொடங்கியது. இக் கால கட்டத்திற்குச் சற்று முன்னர் ஐரோப்பாவிலும் இதே கால கட்டத்தில் அமெரிக்காவிலும் அமைப்பியல்வாதக் ாகேட் பாடுகள் அறிமுகப்படுத்தப் பெற்றுப் பெருஞ் செல்வாக் கடைந்தன. இக்கோட்பாடு ஐரோப்பாவில் தோன்றியதற்கும் அமெரிக்காவில் வரவேற்கப்பட்டுப் பெருவழக்காகப் பரவியதற்கு மான கால இடைவெளியில் (சுமார் இருபதாண்டுகள்) ஐரோப் பாவில் புதிய சிந்தனைகள் வளரலாயின. இவற்றின் பயனாக அமைப்பியல் வாதக் கோட்பாடுகளின் குறைகளாகப் பலவற்றை

---

21. இந்த இரு எடுத்துக்காட்டுகளும் நேர்ப் பொருத்தம் (direct correspondence) உடையனவல்ல, ஒருபுடை யொப்புமை கருதிப் பொருள் விளக்கத்திற்கு ஓரள வேனும் துணை செய்யும் என்பதால் இங்கே காட்டப் பட்டன.

அறிஞர்கள் ஆராய்ந்து கூறினர். அத்தகைய கருத்துகள் ஓரளவு அமெரிக்காவில் அறிமுகமாகியிருந்த போதிலும் அமைப்பியல் வாதத்தின் செல்வாக்கு அமெரிக்காவில் தொடர்ந்து நிலவி வரு கிறது.

அமைப்பியல் வாதக் கோட்பாடுகள் இந்நூற்றாண்டின் அறுபது எழுபதுகளில் மிகவும் செல்வாக்குடையதொரு இலக் கியக் கோட்பாடாக அமெரிக்காவில் ஏற்கப் பெற்று இலக்கியத் திறனாய்வுலகில் நடைமுறையில் இருந்து வந்தது; இன்றளவும் பெருவாரியாகச் செயல்பட்டு வருகிறது என்றும் கூறலாம். எனினும், ஏறக்குறைய இதே காலகட்டத்தில் இக்கோட்பாட் டின் குறைகள் பலவற்றை ஐரோப்பிய அறிஞர்கள் எடுத்துக் கூறி வந்தனர். அமைப்பியல் வாதக் கோட்பாடுகளின்மேல் எழுந்தமையாலும், அமைப்பியல்வாத காலத்திலேயே தோன்றி யமையாலும் தமக்கெனத் தனிப் பெயர்பெறும் அளவிற்குப் புதியதொரு கோட்பாடாக அமையாமையாலும். இந்த புதுக் கோட்பாடுகள் அமைப்பியல் மருவிய கோட்பாடுகள் அல்லது மீயமைப்பியல்வாதக் கோட்பாடுகள் (Post-Structuralism) என்று அழைக்கப்படுகின்றன. இவற்றின் அடிப்படைக் கருத்து களை மிகச் சுருக்கமாக இனிக் காணலாம்.

# மீயமைப்பியல்வாதக் கோட்பாடுகள்

அமைப்பியல்வாதக் கோட்பாடுகளில் அமைந்துள்ள சில பொருத்தமற்ற கூறுகளைச் சுட்டிக் காட்டுவனவாக எழுந்த கோட்பாடுகளை அமைப்பியல் மருவிய கோட்பாடுகள் அல்லது மீயமைப்பியல் வாதக் கோட்பாடுகள் என்றழைக்கலாம். மானுட **மொழி** மனித **மனம்** என்னும் இரண்டைப் பற்றி அமைப்பியல் வாதிகள் கொண்ட கருத்துகளே இத்தகைய பொருத்தமற்ற அம்சங்களாகக் காட்டப்படுகின்றன. இக்குறை பாடுகளைப் பல அறிஞர்கள் பல்வேறு கோணங்களிலிருந்து எடுத்துக் காட்டுகின்றனர். இவர்களுள் மிக இன்றியமையாத வர்களாகத் தெரிதா, பார்த், லக்கான், கிறித்தவா, ஃபூக்கோ ஆகியோரைக் குறிப்பிடலாம். எனினும் இச் சொற்பொழிவின் குறுகிய கால, இடப் பரிமாணங்களின் காரணமாகத் தெரிதா, லக்கான், கிறித்தவா என்னும் மூவரின் சிந்தனைகளைப் பற்றி மட்டும் மிகச் சுருக்கமாகக் காணலாம்.

## அமைப்பு மொழியியலின் குறைகள்

முதலில் மொழி குறித்து அமைப்பியல்வாதிகள் கூறுவதில் காணப்படும் பொருத்தமின்மைகளை ஆராயலாம். பெர்டினான் டி சசூர் மொழியை ஆராய வந்தவிடத்துக் காலப்பொருண் மையை ஒதுக்கி விட்டார். அதாவது, வரலாறு நெடுக மொழி எவ்வாறு வளர்ந்து வந்தது அல்லது மாறுபட்டு வழங்கி வந்தது என்பதை ஆராயும் வரலாற்று முறை (diachronic method) ஆய்வுக்கு முக்கியத்துவம் தரவில்லை. ஒரு குறிப்பிட்ட காலத் தில் மொழி வழங்கும் தன்மையை ஆராயும் உடன்கால முறையை (synchronic method) மேற்கொண்டார். அதாவது ஒரு குறிப்பிட்ட காலத்தில் வழங்கிய மொழியின் இலக்கண வடிவமாகிய அக அமைப்பை (The langue) ஆராய்வதில் மட்டும் ஈடுபட்டார். வரலாற்று முறை இந்த ஆய்விற்குப் பயன்படாது அல்லது தேவையற்றது என்று சசூர் கருதினார்.

இனிப் பொருட் குறிப்பீட்டு முறையினைப் பற்றி விளக்கு மிடத்து மொழிக் குறிகள் தம்மளவில் பொருள் செய்வனவல்ல; விலக்கல் முறைமையால் (exclusion or division) பொருள் செய்வன. மொழிக் குறிகட்கும் அவை குறிப்பிடும் பொருள் களுக்கும் நேரடித் தொடர்பில்லை என்று கூறினாலும், மொழிக் குறிகளின் பொருள் சுட்டும் இடுகுறித்தன்மை மரபு காரணமாக நிலை பேறுடையது என்று கருதினார். அதாவது கல், கள் என்னும் குறிகள் விலக்கல் முறைமையால் பொருள் சுட்டினும், அவை எப்போதும் கல்-ஒரு திடப்பொருள், கள்-ஒரு திரவப் பொருள் என்பதற்கான இடுகுறிகளாகவே இருக்கும் என்று கருதினார். அதாவது இவை குறிகள் (signs); இவை அவற்றால் சுட்டப் பெறும் பொருள்கள் (referents) என்னும் நிலையில் மாறாமல் இருப்பன என்று கருதினார். காலப் பொருண்மையைச் சசூர் ஒதுக்கிவிட்டதால் இக் குறைபாடு நேர்ந்து விட்டது.

சசூரின் மற்றொரு கருத்தும் பொருத்த மற்றதாகக் காட்டப் படுகிறது. வேற்றுநிலை வழக்கால் ஒலியன்கள் பொருள் சுட்டு வதோடு **விலக்கல் முறை**யாலும் குறிகள் பொருள் சுட்டுகின்றன என்கிறார். உதாரணமாகக் கல் என்பது ‘கள்’ என்பதிலிருந்து மட்டும் வேறுபடவில்லை அதாவது ‘கள்’ இல்லாதனவெல்லாம் ‘கல்’ஐக் குறிப்பதில்லை. தற்பொருண்மையற்றதாகலின் ‘கல்’ என்னும் குறி எதைக் குறிக்கிறது என்று நேராகக் கூறமுடியாது எதிர்மறையாக மட்டுமே குறிக்கும். எனவே ‘கல்’லாவது ‘பல்’ இல்லை, ‘மல்’ இல்லை; ‘அல், இல்லை என்று தொடர்ந்து கூறி, இவையெல்லாம் இல்லாதது ‘கல்’ என்று உணரவேண்டும் என்கிறார். இது ஒரு வகையான சுழற்சிவாதக் குறிப்பீட்டு முறையைச் சுட்டுகிறது. (Circular theory of Signification)

‘படி’ என்னும் மொழிக்குறி தமிழில் பல பொருள் ஒரு சொல்லாகப் பயன்படுகிறது. ஓர் அளவு கருவி, ஏறிச் செல்ல உதவும் ஒரு கட்டட அமைப்பு, நூலின் பிரதி, வளர்ச்சி நிலையில் ஒரு கட்டம், செலவீட்டுத் தொகை (Allowance), தன்மை, முறைமை எனப் பெயராகவும், வாசி, பயில் (Study) அடங்கு என விலக்கல் முறைமையால் (Division or exclusion) மட்டும் பொருள் சுட்டுவதில்லை. இக்குறி இவ்வாறு பல படப் பொரு ளுணர்த்துவது எவ்வாறு என்னும் வினாவிற்குச் சசூரின் கோட் பாட்டில் விடைகாண வழியில்லை. இத்தகையகுறிகள், Complex and polysemous Signs என்று கூறினாலும், அவை எப்படி அத் தன்மையடைந்தன என்பதை விளக்க அதில் இடமில்லை; விளக்க

முனைந்தாலும் அக்குறி என்ன அடைவில் (Order) இப் பொருள்களைக் குறிக்கலாயின என்று கூற இயலாது; அதாவது இப் பல் பொருள்களில் எது முதலில் சுட்டப்பட்டது, அதன்பின்னர் எது சுட்டப்பட்டது என்று துல்லியமாகக் காண இயலாது. இனி ஒரே காலத்தே இவ் எல்லாப் பொருளையும் இக்குறியீடு புல வேறுபாட்டால் (Registral difference) சுட்டி நின்றது என்னும் வாதமும் மொழி வரலாற்றில் ஏற்புடையதாகத் தோன்ற வில்லை.

மேலும் மொழியாய்வில் ஒலி வடிவம், வரிவடிவம் என்னும் இருவகை வடிவங்களில் ஒலிவடிவமே முதன்மையானது, அடிப் படையானது என்னும் கருத்தில் பேச்சுமொழிக்கு மொழியியலார் முதன்மை அளித்தனர்; ஒலியின் அடையாளமாக, வடிவமாகச் செயற்படும் எழுத்து வடிவை இரண்டாம் நிலையில் வைக்கத் தக்கதாகக் கருதினர்.

இதுவரை கண்ட அமைப்பியல்வாதக் குறைபாடுகள் குறித்து மீயமைப்பியல்வாதிகள், குறிப்பாகத் தெரிதா கூறும் செய்தி களைக் காண்போம்.

ழாக் தெரிதா (Jacques Derrida) என்னும் பிரஞ்சு நாட்டுத் தத்துவ அறிஞர் ஐரோப்பிய தத்துவ வரலாற்றை ஆராய்ந்தவிடத்து அதில் இருவகைக் குறைபாடுகள் இருப்ப தாகக் கண்டறிந்தார். அமைப்பியல்வாத அனுதாபியான தெரிதா, அம்முறையில் அடங்கியிருந்த சில குறைபாடுகள் அமைப்பியல் வாதத்தின் தனிக்குறைகள் அல்ல என்றும், அவை ஐரோப்பிய தத்துவங்களில் தொடர்ந்து நிலவி வந்த குறைபாடு களே என்றும் அவற்றை யுட்கொண்டெழுந்த அமைப்பியல் மொழியியலிலும், அமைப்பியல்வாத அணுகுமுறைகளிலும் அக் குறைகள் தொடர்ந்து நிலைபெற்றன என்றும் கருதினார். குறிப்பாக **'ஒலிமுதல்வாதம்'**, **'மூலப்பொருள்வாதம்'** என்னும் இரண்டு ஐரோப்பியத் தத்துவக் கோட்பாடுகளைக் குறையுடை யன எனத் தெரிதா காட்டுகிறார். இந்த இருவகைக் குறை பாடுகள் அமைப்பியல் வாதத்திலும் நிலைபெற்று விட்டதாக அவர் கருதுகிறார். இவற்றுள் முதலாவதான ஒலிமுதல் வாதத் தைச் சற்று ஆழ்ந்து சிந்திக்கலாம்.

**ஒலிமுதல் வாதம் (Phonocentricism)**
**வரிவடிவம்**

ஒலிமுதல் வாதம் என்னும் கோட்பாடு தத்துவவாதிகளால் பழங்காலம் தொட்டே முன்மொழியப்பட்டு வந்துள்ளமையைத்

தெரிதா பல எடுத்துக் காட்டுகளின் மூலம் விளக்குகிறார். ஒலி களின் நேர்வடிவாகிய பேச்சு முதன்மையானது; அடிப்படை யானது. பேசும் மனிதனுக்கு மிகவும் நெருக்கமானது; எனவே பொருட் குறிப்பீட்டில் அதிகமான மெய்ம்மையுடையது என்றெல்லாம் தத்துவவாதிகள் கருதினர். எழுத்து வடிவம் பேச்சுக்கு அடுத்த இரண்டாம் நிலையினதாகவும் பேசுவோனின் கருத்தை முழுவதுமாக வெளிப்படுத்தாததாகவும், எனவே மெய்ம்மையிலிருந்து விலகியதாகவும் அவர்களால் கருதப்பட்டு வந்தது.

பிளேட்டோ முதல் ரூசோ வரையிலான ஐரோப்பிய தத்துவ அறிஞர்களும், சசூர், லீவை ஸ்ட்ராஸ் போன்ற அமைப்பியல் வாதிகளும் இத்தகைய ஒலிமுதல் வாதக் கோட்பாட்டின் அடிப் படையில் தம் கருத்துகளைக் கூறி வந்தனர் என்பதை எழுத்தியல் (Of Grammatology) 'எழுத்தும் வேறுபாடும்' (Writing and Difference) பயனிலை ஒட்டின் பிற்சேர்க்கை: மொழியியலுக்கு முந்திய தத்துவம் (The Supplement of Copula-Philosophy before Linguistics) என்னும் தம் நூல்களில் தெரிதா குறிப் பிட்டுக் காட்டுகிறார்.

மொழிக்கு மிகவும் அடிப்படையாக இருப்பதும், பேச்சுக்கு முன்னரே எழுத்தாக இருப்பதும் வடிவமே (Writing) என்பது தெரிதாவின் கோட்பாடு.[22] மொழிமுதற் காரணமாம் அணுத் திரள் ஒலி எழுத்து என்னும் கருத்தை மரபாக உடைய நமக்கும், அமைப்பு மொழியியல் பார்வையுடைய ஐரோப்பிய அறிஞர்க்கும் தெரிதாவின் கருத்து குழப்பம் விளைவிப்பதாக உள்ளது உண்மையே. அமைப்பு மொழியியல் உண்மைகளை அறியாத வரும் அல்லர் தெரிதா. எனவே அவர் கருத்தை மேலும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

தெரிதாவைப் பற்றி ஒரு இன்றியமையாத குறிப்பை நாம் நினைவில் கொள்வது நல்லது. ஆங்கிலம் போன்ற பிற ஐரோப் பிய மொழிகளை அறிந்தவராயினும், தெரிதா தம்முடைய கட்டுரைகள், நூல்கள், சொற்பொழிவுகள் போன்றவற்றைப்

---

22. Christopher Norris, **Deconstruction: Theory and Practice** (London; Metheun, 1982) P. 28.

பிரஞ்சு மொழியில் மட்டுமே எழுதியும் பேசியும் வருபவர்[23]. அதிலும் மரபுக் கலைச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தா மல், தம் சிந்தனைக்கேற்ற கலைச் சொற்களைத் தாமே உரு வாக்கிக் கொண்டு அவற்றையே தம் ஆய்வுகளில் பயன்படுத்து வது இவருடைய சிறப்புக் கூறாகக் காணப்படுகிறது. இவ்வாறு தெரிதா தாமே உருவாக்கிக் கொண்ட அல்லது புதுப் பொருளில் பயன்படுத்திய கலைச் சொற்களுள் ஒன்றுதான் 'Writing' என்பது.

தெரிதாவின் கருத்துப்படி எழுத்து (Writing) என்னும் சொல் 'எழுதப்படுவது', 'பொறிக்கப்படுவது' என்று எல்லோ ருக்கும் அறிமுகமான வரிவடிவக் கருத்தைக் குறிக்கவில்லை; மொழி வழக்கிற்கு மிகவும் இன்றியமையாதது என்று சசூர் கருதுகின்ற வேற்றுநிலை வழக்கால் பொருள் சுட்டும் பண்புடன் தொடர்புடையது எழுத்து என்று தெரிதா கருதுகிறார். அதா வது, எல்லா வகையான செய்திப் பரிமாற்றங்களிலும் அடங்கி யிருக்கின்ற அம்சமான ஊசல் தன்மையினை (Freeplay or Element of Undecidability) அல்லது சுட்டலாகாத தன்மையினை எழுத்து (Writing) என்னும் சொல்லால் தெரிதா குறிப்பிடுகிறார். மொழி வழக்கை நெறிப்படுத்தும் 'ஊசற் பொருண்மை' அல்லது 'தடுமாற்றம்' என்னும் பொருளில் தெரிதா, இச் சொல்லைப் பயன்படுத்துகிறார். இந்த நோக்கில் பார்த்தால் பேச்சு மொழி பொதுமைப் படுத்தப்பெற்ற எழுத்தியல் வடிவத்திற்கு உட்பட்ட தென்பதும் அதற்குப் பிற்பட்டது என்பதும் தெளிவாகும்.[24]

---

23. அண்மையில் டோக்கியோவில் ஆங்கில மொழிவாயி லாக நடைபெற்ற உலகளாவிய கருத்தரங்கு ஒன்றில் தெரிதா ஆங்கிலத்தில் கட்டுரைச் சொற்பொழிவை நிகழ்த்த இயலாதென்றும் பிரஞ்சு மொழியில் மட்டுமே நிகழ்த்தும் வழக்கமுடையேன் என்றும் கூறிக் கருத் தரங்கில் கலந்து கொள்ளாமலே சென்று விட்டார் என்று கூறப்படுகிறது.

24. Writing is in fact the precondition of language and must be conceived as prior to speech. This involves showing, to begin with, that the concept of writing cannot be reduced to its normal (i.e. graphic or inscriptional) sense. As Derrida deploys it, the term is closely related to that element of signifying difference which Saussure thought essential to the

இக்கருத்தின்படி தெரிதாவின் எழுத்தியல் வடிவக் கோட்பாடு மொழிக்கும் கருத்துக்கும் உள்ளதாக நாம் கருதும் தொடர்பைத் தகர்த்தெறியக் காணலாம்.

கூறியது கூறலாக அமையினும் ஒரு செய்தியை நாம் மீண்டும் நினைவு கூர வேண்டியுள்ளது. அதாவது நாம் வழக்கமாகக் கருதும் வரிவடிவம் (writing) பேச்சு வடிவத்தை விட முதன்மை யானது என்றோ மொழிக்கு அடிப்படையானது என்றோ தெரிதா எங்கும் வற்புறுத்திக் கூறவில்லை. அதற்கு மாறாக, வழக்கமான மொழியின் வரிவடிவம் பேச்சு வடிவத்தை விடச் சிறந்தது அன்று என்னும் சசூரின் கருத்தைத் தெரிதா ஆதரிக் கிறார்.[25] பேச்சு / எழுத்து என்னும் இரட்டை எதிர்மைகளைப் (binary oppositions) பயன்படுத்தி ஒன்றினும் ஒன்று உயர்ந்தது அல்லது அடிப்படையானது என்று வாதிடுவதில் உள்ள பயனின்மையைச் சுட்டிக் காட்டுவதே தெரிதாவின் நோக்கமாக அமைகிறது.

இவ் விவாதத்தில் ஒரு நெருடல் உள்ளதுபோல் தோன்று கிறது. பிளேட்டோ முதல் சசூர், லீவை ஸ்ட்ராஸ் போன்றவர் கள் வரையுள்ள அறிஞர்கள் எழுத்து வடிவினும் பேச்சு வடிவமே முதன்மையானது என்று கூறும்போது வழக்கமான வரிவடி வத்தைத் தான் கருதுகின்றனர் என்பது தெளிவு. தெரிதாவோ

---

workings of language. Writing for Derrida is the freeplay or element of undecidability within every system of communication...Writing is the endless displacement of meaning which both governs language and places it for ever beyond the reach of a stable, self authenticating knowledge. In this sense Oral language already belongs to a 'generalized writing...

—Christopher Norris pp. 28-29.

25. Thus Derrida is emphatically **not** trying to prove that 'writing' in its normal restricted sense is some how more basic than speech. On the Centrary he agrees with Saussure that linguistics had better not yield uncritically to the 'prestige' that w.itten texts have traditionally enjoyed in western culture — Christopher Norris, P. 31.

வழக்கமான வரிவடிவை 'writing' என்று கருதவில்லை எனவும், ஊசற் பொருண்மை, தடுமாற்றம், உறுதியாகச் சுட்டலாகாத் தன்மை என்னும் மொழியின் பொருட் குறிப்பீட்டு முறையைத் தான் எழுத்தியல் வடிவம் என்று கருதுகிறார் எனவும் மேலே கண்டோம். அவ்வாறாயின் இதில் முரண்பாடு எங்கே உள்ளது? தெரிதாவின் பொருளில் பிளேட்டோ போன்றவர்கள் கூற வில்லை; பிளேட்டோ முதலானவர்கள் கருதும் வரிவடிவத்தைத் தெரிதா 'writing' என்று கருதவில்லை. பிளேட்டோ போன்ற வர்கள் குறைகூறிய வரிவடிவம் பேச்சு வடிவைவிட முந்தியது அல்லது அடிப்படையானது என்றும் தெரிதா கூறவில்லை. எனவே, எழுத்தியல் வடிவம் என்றொரு புதிய கருத்தாக்கத்தைத் தெரிதா தந்திருக்கிறார்; அதன் துணையால் மொழியின் பொருட் குறிப்பீட்டு முறையைச் சசூரைக் காட்டிலும் தெளி வாக விளக்க முடிகிறது என்னும் தெளிவைத்தான் நாம் பெறு கிறோமே தவிர வழக்கமான இரட்டை எதிர்மைகளாகிய எழுத்து/பேச்சு என்பனவற்றின் வரையறைகளில் மாற்றம் எதுவும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை.

இனி, ஐரோப்பிய தத்துவ விவாதத்தை அடிப்படையாகக் கொள்ளும்போது தெரிதா வழக்கமான வரிவடிவத்தைப் பற்றிய தம் கருத்துகளை வெளியிடுகிறார். சாக்ரடீஸ், பிளேட்டோ போன்றவர்களின் 'ஒலி முதல் வாதக் கொள்கையின்படி,[26] எண் ணங்கள் அல்லது கருத்துகள், அதாவது மொழிக்குறிகள் குறிப் பிடும் பொருள்கள் (meanings), மொழியின் தோற்றத்திற்கு முற்பட்டவை; மொழியின் ஒலி வடிவமாகிய பேச்சு அக்கருத்து களை மற்றவர்க்கு அறிவிக்கிறது. இப்பேச்சினைப் பிற்காலத் தோர் வரிவடிவத்திற்கு மாற்றி எழுதியபோது, பேச்சில் (voice) இருந்த நெருக்கமும், உண்மையின் பரிமாணமும் குறைந்துபேச்சு வடிவத்தைக் கொச்சைப்படுத்திவிட்டது; எழுத்து வடிவம் இவ் வாறு மூலப் பொருளைக் கொச்சைப் படுத்தித் திரித்துக் காட்டிப்

---

26. The notion of a meaning is some how anterior to the signs that serve to convey it. This applies even to Sassure's cardinal distlnction between 'Signifier' and 'Signified', thə terms of which ... remain caught up in a version of Platonic dualism...structuralism and semiotics remain part of this tradition so long as they preserve the Saussurian bar between 'signifer and signified, 'sensible token' and 'intelligible concept' —Christopher Norris pp. 66-67.

பல்வேறு தவறான பொருள்களைக் கற்பிக்குமாறு செய்வதால், அது ஒரு அபாயகரமான பிற்சேர்க்கை என்று கருதப்பட்டது.[27] இத்தவறான கருத்து ஐரோப்பிய தத்துவ வரலாற்றில் நெடுகப் பரவி நிலைத்து விட்டது. இதன் செல்வாக்கால் சசூரின் மொழிக் கோட்பாடும், அமைப்பியல்வாதமும் பாதிக்கப்பட்டுள்ளன என்று தெரிதா கூறுகிறார்.

வரிவடிவம் ஒரு பிற்சேர்க்கை என்னும் கருத்தின் மீதான விவாதத்தை, "Supplement of Copula" என்னும் தம்முடைய கட்டுரையில் தெரிதா விரிவாகச் சிந்திக்கிறார். இச்சிந்தனையின் விளைவாகத் தெரிதா கூறுவனவற்றைப் பின்வருமாறு விளக்கலாம்.

பிற்சேர்க்கை என்பது காலத்தால் பிந்தியது[28] என்னும் கருத்தைத் தெரிதா ஏற்றுக் கொள்கிறார். எனினும் பின்னர்த் தோன்றியனவெல்லாம் சிறப்பில்லாதன, முக்கியத்துவம் அற்றன, திரிபுடையன என்னும் கருத்தைத் தெரிதா ஆதரிக்க வில்லை. முன்னால் வந்தவை (கூறப்பட்டவை) முழுமையுடைய தாயின், பிற்சேர்க்கையே தேவைப்படாதல்லவா? எப்போது பிற்சேர்க்கை என்னும் ஒரு கூறை இணைக்கிறோமோ,

---

27. Writing is the dangerous supplement which lures Language away from its authentic origin in speech and self-presence. To commit one's thoughts to writing is to yield them up to the public domain, to risk being misconstrued by all the promiscuous wile of interpretation writing Is the 'death' that lies in wait for living thought, the subtle agent of corruption whose workings infect the very sources of truth... Chirstoper Norris, P. 63.

28. பிற்சேர்க்கைகள் என்பன இடத்தாலும் பிந்தியதாக இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை என்பது தெரிதாவின் உட்கிடக்கை. நூலுக்கு எழுதப்படும் பாயிரம், முன்னுரை போன்றவை இடத்தால் முந்தியன; ஆனால் காலத்தால் பிந்தியன. ஒரு செடியின் வேர்களும் கிளைகளும் காலத்தால் பிந்தியன: ஆனால் இடத்தால் முந்தியும் பிந்தியும் இருப்பன எனினும் இப் பிற்சேர்க்கைகள் இல்லாமல் நூலோ, செடியோ தம் முழுமையை அடைய மாட்டா என்பது வெளிப்படை.

அப்போதே அதற்கு முன்னர் இருப்பன பின்னர் வந்தனவற்றின் துணையில்லாமல் நிலைபெற மாட்டா என்பதும் முழுமைபெறா என்பதும் தெளிவாகின்றன. எனவே எழுத்து வடிவம் பேச்சு வடிவத்திற்குப் பின்னர் வந்ததேயாயினும் மொழியின் இயக்கத் திற்கு இதுவும் இன்றியமையாதது, முழுமையைத் தருவது என்னும் கருத்து உறுதிப்படுகிறது.

பிற்சேர்க்கைகள் என்பன ஒருவகை குறை நிறைப்பிகள் இந்தக் குறைநிறைப்பும் தன்மை (Supplementarity) அவற்றின் இன்றியமையாமையை வெளிப்படுத்துகிறது. தோன்றும் பொருள் எதுவும் தன் இருப்பால் மட்டுமே முழுமைத் தன் மையை அடைவதில்லை; மாறாக இட்டு நிறைக்கப்படுவதால் தான் முழுமை பெறுகிறது. இதன் அடிப்படையில் பார்க்கு மிடத்து, எழுத்து வடிவமாகிய வரிவடிவம் பேச்சு மொழியின் வெறும் பிற்சேர்க்கையன்று; அதற்கு இன்றியமையாததாக நிற்கும் குறைநிறைப்பி என்று உணர வேண்டும். எனவே பேச்சு. வடிவமும் வரிவடிவமும் எதிர்மைகள் அல்ல; ஒன்றையொன்று அவாவி நிற்கும் ஒரு முழுமையின் கூறுகள் என்று கருத வேண்டும் என்னும் கருத்துடையவராகத் தெரிதா காணப் படுகிறார்.

இதுவரை வரிவடிவம் பற்றிய அமைப்பியல்வாதக் கருத்தை யும், அதனைத் தெரிதா மறுத்துரைப்பதையும் கண்டோம் இனிப் பொருட் குறிப்பீட்டு முறையில் பொருள்களுக்கும் குறி களுக்கும் உள்ள தொடர்பு பற்றிய தெரிதாவின் கருத்துகளைக் காணலாம்.

## பொருட் குறிப்பீட்டு முறை

மொழியென்பது பல்துறை விதியொழுங்குகளினால் (systems) அமையப் பெற்ற ஒரு தன்னிறைவான நிலையான கட்டுக்கோப்பு என்று அமைப்பு மொழியியலார் கருதினர்.[29] எனவே குறிகளுக்கும் அவற்றால் சுட்டப்பெறும் பொருள் களுக்கும் நிலையான தொடர்புண்டு என்று கருதினர். அதாவது ஒரு மொழிக் குறிக்கும் அது சுட்டும் பொருளுக்கும் இடையிலான காரணம் இடுகுறித் தன்மை வாய்ந்ததாயினும், ஒரு குறிப்பிட்ட குறி ஒரு குறிப்பிட்ட பொருளைச் சுட்டுவது என்னும் குறிப் பீட்டுத் தன்மை நிலையானது என்பது சசூரின் கருத்து. இந்த நிலைபேற்றுத் தன்மை இரு வகைகளில் செயல்படுகிறது என்று அவர் கருதினார்.

முதலாவதாக, நாற்றம் என்னும் சொல் ‘மணம்’ என்னும் பொருளைச் சுட்டுகிறது. இங்கே குறி (sign) பொருள் (referent) ஆகிய இரண்டிற்கும் இடையிலான பொருட்காரணம் இடுகுறித் தன்மையால் ஆனது. எனினும் நாற்றம் என்னும் சொல் மணம் என்னும் பொருளைச் சுட்டும் மரபு நிலையானது என்று கருதப்பட்டது. இரண்டாவது நாற்றம் என்னும் குறி எப்போதும் குறியாகவே (sign) இருக்கும்; அது பொருளாவதில்லை (referent) என்று கொண்டதால், இது மற்றொரு நிலைபேற்றுத் தன்மையாகக் கருதப்படுகிறது.

குறி (Sign), பொருள் (Referent) என்னும் சசூரின் சொற்களுக்குப் பதிலாகக் **குறிப்பான்** (Signifier), **குறிபடு பொருள்** (Signified) என்னும் குறியீடுகளை மீயமைப்பியல் வாதம் பயன்படுத்துகிறது. இந்தக் குறியீடுகளைக் கையாண்டு மேலே சுட்டிய இருவகை நிலைபேறுகளும் பொய்யானவை என்று தெரிதா காட்டுகிறார். அவர் கருத்துப்படி, ஒரு குறிப்பான் ஒரு குறிபடுபொருளையே தொடர்ந்து குறிப்பிடுவதில்லை; வேறொரு குறிபடு பொருளையும் அது சுட்டுகிறது. காட்டாக ‘நாற்றம்’ என்ற குறிப்பான் ‘மணம்’ என்னும் குறிபடுபொருளை விலக்கி விட்டு அதற்கு எதிரான ‘மணமற்றது’ அல்லது ‘தீய நாற்றம்’ என்னும் மற்றொன்றைக் குறிக்கிறது. இனி முந்தியதை விலக்காமலேயே பிந்தியதைச் சேர்த்தும் குறிப்பிடுகிறது என்பதைச் ‘சுவையொளி ஊறோசை நாற்றம்’ என்னும் தொடரில் வரும் ‘நாற்றம்’ என்னும் குறிப்பானைக் கொண்டு உணரலாம். எனவே குறிப்பானுக்கும் குறிபடு பொருளுக்கும் உள்ள தொடர்பு நிலையானது என்னும் கருத்து பொருந்தவில்லை என்பது வெளிப்படை.

1. கோவலன் மனைவி **கண்ணகி.**
2. இவள் பெரிய **கண்ணகியா?**

---

29. (a) Saussure's idea that language forms a closed and stable system...Terry Eagleton, P. 127.

(b) For Derrida, linguistics and structuralism rely on idealist presuppositions which are never questioned and which are reflected in their conception of the sign as a closure...the impossibility of separating the order of the signified from the order of the signifier in the functioning of the sign—Josue V. Harari p. 29.

இத்தொடர்களுள் முதல் தொடரில் கண்ணகி என்னும் குறிப்பான் ஒரு குறிப்பிட்ட பெண்ணைக் குறிபடுபொருளாகக் கொண்டுள்ளது. இரண்டாவதில் இக் குறிபடு பொருளே ஒரு குறிப்பானாகிப் பெண்மையின் ஒரு பண்பைக் குறிபடு பொருளாகக் கொண்டுள்ளது. இந்த எடுத்துக் காட்டுகளை நோக்கினால், குறிப்பானாகத் தொழிற்படும் ஒன்றே குறிபடு பொருளாகவும், குறிபடு பொருளாக உள்ள ஒன்றே குறிப்பானாகவும் தொழிற்படக் காண்கிறோம். இத்தகைய குறிப் பீட்டுத் தடுமாற்றம் அல்லது குறிப்பீட்டு ஊசலாட்டமே (Free Play of Signification) மொழியின் இயற்கையாகக் காணக் கிடக்கிறது. பொருட் குறிப்பீட்டு முறையின் தீர்மானிக்க வியலாத நிலைபேற்றுத் தன்மையே மொழியின் அடிப்படைப் பண்பாகக் காணக் கிடக்கிறது என்பது தெரிதாவின் கருத்து[30].

மேலும் மேலே காட்டிய 'படி' என்னும் தமிழ்ச் சொல்லை எடுத்துக் கொண்டால், ஒரு குறிப்பான் பல குறிபடுபொருள் களைக் குறிப்பதைக் காண்கிறோம். இந்தக் குறிப்பான் முன்னும் பின்னும் செல்லுகின்ற தொடர்களின் ஊசலாட்டத்தால் இவ்வாறு பலவற்றைக் குறிக்கும் இயல்புடையதாக அமைந்திருப் பதையும் காண்கிறோம்; ஒரு குறிப்பானுக்கும் ஒரு குறிபடு பொருளுக்கும் இடையிலுள்ள இடுகுறியியையபுதானும் நிலை

---

30. சொற்கள் இடுகுறித் தன்மையால் பொருளைக் குறிக் கும் என்பது ஒரு பொதுவுண்மையாயினும், அச்சொற்கள் தாமும் நேரே பொருண்மையைக் குறிப்பிடாத விடத்து மற்றொரு சொல்லைக் குறிக்க நேர்கிறது. பேசு வோன் குறித்த பொருளைக் கேட்போன் நேரிடையாக அறியாதவரையில் செய்திப் பரிமாற்றம் முழுக்க குறிப் பான்களாலேயே (சொற்கள்) நடைபெறும்; அந்நிலை யில் அறுதியிட்டுப் பொருளைக் குறிக்க குறிப்பான்கள் துணை செய்யா-வரம்பற்ற சொற்சுழற்சியில் தான் முடியும் என்னும் மீயமைப்பியல்வாதக் கருத்து,

பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம் பின்றே (தொல்: 874)

என்னும் தொல்காப்பியர் கருத்தோடு ஒன்றுபட்டு நிற்பதைக் காணலாம்,

பேறுடையதாக இருக்குமானால் இத்தகைய குறிப்பீட்டு நிலை சாத்தியமாக வழியில்லை. எனவே, மொழியின் ஊசலாட்டப் பண்பான தடுமாறு குறிப்பீட்டு வழக்கினால்தான் இவ்வாறு குறிப்பான்கள் மாறி மாறிப் பொருள் வழங்கும் நிலை ஏற்படு கிறது என்பது தெளிவாகிறது.

மொழியாராய்ச்சியில் சசூர் காலப் பொருண்மையைப் புறக் கணித்த காரணத்தால்தான் இத்தகைய குறைபாடு அவருடைய கொள்கையின் ஒரு கூறாக அமைந்து விட்டது[31]. மொழியின் சொற்களஞ்சியமும் சில வழக்காறுகளும் காலந்தொறும் மாறும் இயல்புடையன என்பதைச் சசூர் அறியாதவர் அல்லர்; எனினும் மொழிவழக்கின் அடிப்படையான குறியீட்டு முறைமையில் (basic system of signification) நிலைபேறானதொரு உள்ளார்ந்த பிணைப்பு இருப்பதாக அவர் கருதி விட்டார். தத்துவ ஆய்வில் ஆர்வமுடையவராயினும், மொழியின் இயல்பை உள்ளவாறு உணராமல்-மொழிக்கும் உலகத்துப் பொருட்களுக்கும் இடையில் உள்ள தொடர்பினைத் தெளிவாக அறிந்து கொள்ளாமல் எந்த ஆய்விலும் ஈடுபட இயலாது என்பதை உணர்ந்த தெரிதா மொழியின் அடிப்படை ஆய்வை மேற்கொண்டார். அதன் விளைவால், அவர் பார்வையில்பட்ட மொழித் தொடர்பான கருத்துகளை இதுவரையில் கண்டோம்.

## மூலப்பொருள் வாதம் (Logocentricism)

உலகத்துப் பொருள்கள் அல்லது நிகழ்ச்சிகள் தத்தமக்குள் பல்வேறு ஒழுங்கமைவுகளை உடையனவாய் அருவம், உருவம் என்னும் இருவகை அமைப்புகளால் கட்டுண்டு வெளிப்படு கின்றன அல்லது தொழிற்படுகின்றன என்னும் ஆய்வுப் பார்வை 'அமைப்பியல் வாதம்' என்று பெயர் பெற்றது என்பதை முந்தைய இயலிற் கண்டோம்.

அருவம் உருவம் என்னும் இரட்டையமைப்பு முறை. ஆய்வாளர்களால் கற்பித்துக் கொள்ளப்பெற்ற ஒரு வெறும் ஆய்வு முறை அன்று; மாறாக உலகம், உலகத்துப் பொருள்கள், வாழ்க்கை நிகழ்ச்சிகள் என்பன எவ்வாறு இயங்கு கின்றன என்று கண்டறிய மேற்கொண்ட ஓர் உலகப் பார்வை

31. Language is a temporal process:--language is a much less stable affair than the classical structuralists had considered. Terry eagleton, pp. 128-129.

(World View) என்று உணர்ந்து கொள்வது நல்லது. அதாவது ஒரு குறிப்பிட்ட தத்துவப் பார்வையை அடிப்படையாகக் கொண்டது என்பது கருத்து. இவ்வாறு ஏதேனும் ஒரு தத்துவப் பார்வையைப் பெறாமல் அல்லது உட்கொள்ளாமல் எந்த ஆழமான ஆய்வும் நடைபெறுவதில்லை; நடைபெறவும் இயலாது.[32]

இலக்கிய அமைப்பியல்வாதம் குறித்துச் சென்ற இயலில் விவாதித்தபோது, வெளிப்படத் தோன்றும் இலக்கியப் படைப்புகளுக்கெல்லாம் அடிப்படையான ஓர் இலக்கண அமைப்பு உண்டு என்றும் அவ் அமைப்பினைக் 'கவிதையியல்' என்னும் சொல்லால் குறித்தனர் என்றும் கண்டோம். அருவ நிலையில் அமைந்துள்ள இந்த இலக்கணக் கட்டமைப்பு, உருவ நிலையில் வெளிப்படும் தனிமனிதப் படைப்புகளின் பொது ஆன்மாவாக, ஓர் இலக்கிய ஆன்மாவாக இயங்குகிறது என்றும், தனிமனிதப் படைப்புகளின் உருவாக்கத்தையும் இலக்கியப் பொருண்மையையும் இந்த அக அமைப்பு நெறிப்படுத்துகிறது என்றும் மேலே கண்டோம். இப்படியே மானுடவியலும், உளவியலும், சமூகவியலும் தத்தம் துறைப் பொருண்மைக்கேற்ப, இரண்டிரண்டு கட்டமைப்புகளை உடையன என்று கொண்டு ஆராய்கின்றன என்பதும் மேலே குறிப்பிடப்பட்டது.

இவ்வாறு புறத்தே காணப்படும் ஒவ்வொரு நிகழ்வுக்கும் விதியொழுங்குகட்கு உட்பட்ட ஓர் அக அமைப்பு உண்டென்று கருதும் கோட்பாட்டைத் தெரிதா மறுகிறார். உலகத்துப் பொருள்களின் புறவுலக நிகழ்ச்சிக்கு அடிப்படையாக ஒரு மூலம்

---

32. (a) As Derrida put sit "in every proposition or in every System of semiotic research.........meta-physical presuppositions co exist with critical motife"

Position (1981, P. 36) quoted in Norris P. 48

(b) Pure literary theory is an academic myth—Terry Eagleton, P. 195

(c) Whether the practitioner knows it or not the application of any critical method presumes an epistemological choice—Art Berman, P. 115

இருக்க வேண்டும்; அம்மூலமே புறவுலக நிகழ்ச்சிகளை ஒழுங்காக இயங்க வைக்கிறது என்னும் ஒருவகைத் தத்துவக் கோட்பாட்டின் அடிப்படையில் இக்கருத்து உருவாயிற்று என்று கூறும் தெரிதா இக்கோட்பாட்டை **'மூலப்பொருள் வாதம்'** என்று அழைக்கிறார். ஐரோப்பிய தத்துவ உலகில் கிரேக்க காலம் தொட்டு இக் கோட்பாடு இருந்து வருவதைத் தெரிதா சுட்டிக் காட்டுகிறார். பிளேட்டோவின் 'மூலக் கருத்துக் (Theory of Ideas) கோட்பாடுதான் இத் தத்துவப் பார்வையின் தொடக்கம். உலகில் பருப்பொருளாகத் தோற்றமளிக்கும் ஒவ்வொரு பொருளுக்கும் மூலமாக ஓர் அருவ வடிவம் உண்டு. அதனுடைய பரு வடிவத் தோற்றம்தான் உலகத்துக் காணப்படும் பொருள் என்பது பிளேட்டோவின் கருத்து. பிளேட்டோவின் பிற கருத்துகளை மறுத்துரைக்கும் அரிஸ்டாடில் முதலான பிற ஐரோப்பிய தத்துவவாதிகள் எல்லாம், பிளேட்டோவின் மூலக் கருத்துக் கோட்பாட்டை மறுக்கவில்லை. அறிவியல் அடிப்படையில் ஆய்வு நிகழ்த்திய அமைப்பியல் வாதமும் இக்கருத்தை மறுக்காமல் ஏற்றுக் கொண்டது. அதனால்தான் மொழியியலும் மொழிக்கு அகவடிவம், புறவடிவம் என்ற இரட்டையமைப்பை உருவாக்கிக் கொண்டது.

இவ்வாறு பொருள்களுக்கு அருவ நிலையிலான, மிகவும் ஒழுங்கமைவுள்ள ஓர் அக அமைப்பு இருக்கிறது என்னும் கருத்தைத் தெரிதா மறுக்கிறார். இப்படியொரு அடியமைப்பு மூலம்-இருக்கிறது என்பது ஒரு கருதுகோளே தவிர (Hypothesis) உண்மையன்று என்பது தெரிதாவின் வாதம்.

உலகில் நிகழும் நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றுக்கும் காரணமாகிய ஆதாரம் ஒன்று இருக்க வேண்டும் என்பதைத் தெரிதா ஏற்றுக் கொள்ளவில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் உரிய காரணத்தைத் தோண்டி ஆராய்ந்து கொண்டே சென்றால் முடிவில் ஆதாரம் ஒன்றும் இல்லை என்றே காண வேண்டி வரும். பொருள்களின் தோற்றத்திற்கும், நிகழ்ச்சிகளுக்கும் காரணம் இருந்தே தீரவேண்டும் என்பது நமது விருப்பக் கொள்கையே தவிர உண்மையன்று; இந்தக் 'காரணத் தேடல்' உண்மை மூலத்தைத் தராது; மூலத்தின் சாயலைத்தான் காட்டும். சாயலே இல்லாத தனிமூலத்தை (absolute origin) மனிதன் எவ்வளவு தான் ஆராய்ந்தாலும் காணமுடியாது, ஏனெனில் தனிமூலம் என்பது ஓர் இல்பொருள். இத்தகைய தேடல் ஓர் ஆதார மாயையே தவிரப் பிறிதில்லை. எனவே பொருள்களுக்கோ, படைப்புகளுக்கோ, பிற புற அமைப்புகளுக்கோ ஓர் ஆதாரம்,

ஒரு மூலம், ஒரு மையம், மேலும் ஆராய வேண்டாத, எச்சமில்லாத தெளிவான ஓர் உண்மை என்பது இல்லவே இல்லை; அப்படியே இருப்பதாகக் கருதிக் கொண்டாலும் மனிதனின் இன்றைய அறிவு நிலையில் அதைக் காணமுடியாது. ஏனெனில் தான் ஆராயும் உலகினுள் ஓர் உறுப்பாக இருந்து கொண்டே, மனிதன் அதனை முழுவதுமாக ஆராய முடியாது என்பது தெரிதாவின் கருத்து.

மனித இனத்தின் இந்த இயலாமையைச் சற்று ஆழ்ந்து நோக்குவது பயனுடையது. மனிதனின் ஆய்வுக்கு அடிப்படை அவனுடைய சிந்தனை. இந்தச் சிந்தனை என்பது மொழியின் செயற்பாட்டால் விளைவது; மொழியின்றிச் சிந்தனை இல்லை[33] சிந்தனையின் மறுபெயர்தான் மனம்; மனம் என்பது மொழிதான் மொழி வாயிலாகத்தான் உலகத்துப் பொருள்களை அறிகிறோம். எனினும் மொழி எவ்வாறு பொருண்மை சுட்டுகிறது என்பதைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. எவ்வளவு ஆழ்ந்து நோக்கினாலும் மொழிப் பொருண்மையும் குறிப்பீட்டு முறைமையும் சுழற்சித் தன்மையுடையனவாக உள்ளனவேயன்றி ஆதிமுதல் காரணத்தை அறிய அதனால் இயலவில்லை. சுருங்கக் கூறின், மொழியாக உள்ள மனத்தால் மொழியின் மூலத்தை ஆராய முடியாது; அதாவது மொழியே மொழியை ஆராய முடியாது; மனிதனுக்கு - மனத்திற்கு - மொழியன்றி வேறு விழியுமில்லை எனவே முழுமுதற் காரணம் என்று கருதுகின்ற மூலப்பொருளை அறிய வேறு வழியுமில்லை.

இத்தகைய சிந்தனையோட்டம் தான் தெரிதாவின் புகழ் மிக்க திறனாய்வுப் பார்வையாக போற்றப்படுகிறது. இந்தப் பார்வையை அவர் ''deconstructive reading'' என்று அழைத்தார், பொருள்களை மிக நுணுக்கமாக ஆராயும் ஒருவகைத் தத்துவப் பார்வை இது. தத்துவவாதிகளின் நோக்கில் இதனைச் 'சூன்ய வாதம்' (Skepticism) என்று அழைக்கலாம். இது முடிவு நோக்கிய பெயர். ஆனால் தெரிதாவின் புகழுக்கு அவர் கண்ட முடிவுகளைவிட அவருடைய ஆய்வு அணுகுமுறையே பெரிதும் காரணமாக அமைந்துவிட்டது.

---

33. மனம் சிந்திக்கிறது; சிந்தித்தவற்றைக் கருத்துகளாக மொழியால் வெளிப்படுத்துகிறது என்ற அனுபவ வழித் தத்துவம் ஏற்கனவே மறுக்கப்பட்டதை இங்கே நினைவு கூர்தல் வேண்டும்.

அவர் முடிபுகளை எல்லோரும் ஏற்றுக் கொள்வதில்லை. மேலும் அவர் காட்டும் முடிபுகளை அவர்க்கு முன்னரே நீட்சே (Nietzsche), ஹைடெக்கர் (Heidegger) போன்றோரும் ஆராய்ந்து கூறியுள்ளனர். நம் நாட்டிலும் நாகார்ஜுனாவின் 'சூன்யதா' வாதம், இவர்கள் எல்லோரையும் விட முந்தியது. எனவே ஆய்வு முறைமையே, அவருடைய நுண்ணாய்வுத் தன்மையே (Very very close reading) தனித்த பாராட்டுக்கு உரியதாகிறது; அவர்க்குப் புகழ் சேர்ப்பதும் அதுதான்.

'உண்டு' எனவும் 'இன்னது' எனவும் முன்னைய ஆய்வுகள் கண்டவற்றையெல்லாம் தம்முடைய ஆய்வு முறையின் மூலமாக 'இல்லை' என்றும், 'பிறிது' என்றும் தெளிவாகக் காட்டி மறுக்கின்ற காரணத்தால், இதுவரை பெற்றுநின்ற முடிபுகள் எல்லாம் அழிகின்ற காரணத்தால் இவருடைய ஆய்வணுகுமுறை ''deconstruction'' என்று அழைக்கப்படுகிறது. முடிபுகளைக் காட்டிலும் முறைமையே தெரிதாவின் தனித் தன்மையாகக் காணப்படினும், அழித்தல் / மறுத்தல் என்னும் முடிபு நோக்கிய பெயரால் அவருடைய ஆய்வுமுறை சுட்டப்படுவது சிந்தனைக்குரியதாகிறது. எனவே 'தகர்ப் பழிப்புத் திறனாய்வு 'கட்டழிப்புத் திறனாய்வு', 'கட்டவிழிப்புத் திறனாய்வு' என்றெல்லாம் வழங்கும் மொழி பெயர்ப்புகளைப் பயன்படுத்தாமல், அது இயங்கும் முறைமை நோக்கி உவம வாயிலாக, ''உள்ளியியல் அணுகுமுறை'' என்று நாம் அதனை அழைக்கலாம்.

அதாவது உள்ளி (வெங்காயம்) நல்ல கட்டமைப்புள்ளதொரு இயற்கைப் பொருள். இந்தக் கட்டமைப்பே உள்ளியா, அல்லது அதனுள்ளே வேறு ஒரு பொருள் உண்டா என்று ஒவ்வொரு மேலீடாக உரித்துக் கொண்டே சென்றால் இறுதியில் ஒன்றுமில்லாமல் முடியும். உரித்துக் கழிக்கப்பட்ட மேலீடுகளைத் தவிர உள்ளே தனியே ஒன்றும் இல்லை. கட்டமைப்பும் (Structure) அதுவே; கட்டமைப்பின் உள்ளடக்கமும் அதுவே; புற அமைப்பும் அதுவே; அக அமைப்பும் அதுவே: அதாவது புறத்தே தெரியும் உள்ளி என்னும் ஓர் அமைப்பிற்கு அடிப்படையான, தனியான உள் அமைப்பு என்று ஒன்றும் இல்லை என்பது கருத்து.

மனம் என்பதும், சிந்தனை என்பதும் ஆகிய ஒரு பொருட் பன்மொழிகளும் இவ்வாறானவைதாம். உள்ளம், உள்ளுதல், உள்ளி என்பனவும் இத்தன்மையால் பெயர் பெற்றனவோ? அறி

யோம். மொழியையே மனமாக உடைய நாம் அதன் மூலத்தையே ஆராய்தல் எவ்வாறு?

மூலப்பொருள் வாதத்தை மறுக்கும் தெரிதாவின் கருத்துப்படி பார்த்தால், இலக்கிய அமைப்பியல் வாதிகள் கருதும் 'கவிதையியல்' என்னும் அருவச் சட்டகம் எது? அது எப்போது உண்டாயிற்று? யார் உண்டாக்கினார்கள்? அத்தகையதொரு சட்டத்தை உருவாக்கும் கூறுகள் எவை? அந்தக் கூறுகள் எங்கிருந்து தோன்றின? என்பன போன்ற வினாக்கள் நம் முன் எழுகின்றன. சசூரின் அக அமைப்பாகிய இலக்கண வடிவமும் இத்தகைய வினாக்களுக்கு உட்படுத்தப்படுகிறது. படவே, அப்படியொரு அருவ அமைப்பு என்பது உள்பொருளன்று, இல்பொருளே என்கிறார் தெரிதா. எனவே சசூரின் கோட்பாடுகளின் அடிப்படையில், அமைத்துக் கொண்ட கருதுகோளாகிய கவிதையியலும் உள்பொருளன்று, இல்பொருளே அல்லது வெறும் கருத்துப் பொருளே; புறத்தே தோன்றிய வெளிப்பாடுகளை ஆராய்ந்து, அவற்றின் நிகழ்ச்சிகளுக்கான காரணகாரியங்களைக் கற்பித்துக் கொள்ளும் ஒரு சிந்தனையே தவிரப் பிறிதில்லை என்பது தெரிதாவின் வாதம்.

இந்த வாதத்தை மறுப்பதற்கான சான்றாதாரங்கள் ஐரோப்பிய மரபில் இல்லை. ஏனெனில் அமைப்பியலார் கருதுவது போன்றதொரு 'கவிதையியல்' அங்குத் தோன்றவில்லை. அரிஸ்டாடிலின் 'கவிதையியலோ' எனின், அது இதனின்றும் வேறுபட்டது. காப்பியம், நாடகம், தன்னுணர்ச்சிப் பாடல்கள் போன்ற இலக்கிய வகைகளை வரையறுத்துக் கொண்டு அவற்றின் அடிப்படையில் அவர்காலப் படைப்புகளை ஆராயும் ஒருவகைத் திறனாய்வு நூலாகவே அரிஸ்டாடிலின் நூல் விளங்குகிறது. எனவே அமைப்பியல் சார்ந்த 'கவிதையியல்' என்னும் அருவ வடிவை அல்லது அக வடிவை அங்கே காணமுடியவில்லை.

தமிழில் இத்தகைய 'கவிதையியல்' அமைந்துள்ளது என்றும் அதுதான் தொல்காப்பியப் பொருளதிகாரம் என்றும் முன்னர்க் கூறப்பட்டன. தெரிதாவின் வாதத்தின்படி பொருளதிகாரத்தை அணுகினாலும் அதே விடைதான் பெறப்படுகிறது. அதாவது தமிழில் தோன்றிய அகம், புறம் என்னும் இருவகை இலக்கியங்களாகிய படைப்புகளுக்கு அடிப்படைச் சட்டகமாகப் பொருளதிகாரம் விளங்குகிறது என்பதில் ஐயமில்லை. ஆனால் அந்தப் பொருளதிகாரச் சட்டகத்திற்கு மூலம் எது

என்னும் வினாவை எழுப்பினால் என்ன விடை கிடைக்கும் தொல்காப்பியர் தாமே இந்தச் சட்டகத்தை உண்டாக்கியதாக எங்கும் கூறவில்லை. அவருக்கு முன்னரே இது பற்றிய நூல்கள் இருந்தன என்பதற்கும் அவர்கள் கருத்துகளையும் தொல்காப்பியர் இணைத்தே கூறுகிறார் என்பதற்கும் நூலுள் ளேயே சான்றுகள் காணக்கிடக்கின்றன. அதாவது, தொல் காப்பியப் பொருளதிகாரம் முதனூலன்று: வழிநூலே என்பது கருத்து. ஏனெனில் அகம், புறம் என்னும் இலக்கிய மரபுகளைத் தொல்காப்பியர் புதியனவாகப் படைத்துக் காட்டவில்லை. எனவே தொல்காப்பியத்திற்கு மூலம் எது எனத் தெரியவில்லை. இனி ஒரு சாரார் கருதுவதுபோல் 'அகத்தியம்' தொல்காப்பியத் திற்கு முதனூல் என்று கூறினால், அகத்தியத்திற்கு எது முதனூல் என்னும் வினா உடனே எழுவது இயல்பு. அவ்வினா விற்கு விடை இல்லை என்பதை நாம் அறிவோம். எனவே 'கவிதையியல்' என்னும் கோட்பாட்டுச் சட்டகத்திற்கு, இலக் கியப் படைப்புகளுக்கான ஓர் அகக் கட்டமைப்புக்கு மூலம் ஒன்று உள்ளது என்னும் கருத்து மறுக்கப்படுகிறது. இலக்கிய அமைப்பியல்வாதக் கருத்துகளைத் தெரிதா தனியே விதந்து எங்கும் மறுத்துரைக்கவில்லை. 'மூலப்பொருள் வாதம்' என்னும் ஐரோப்பிய தத்துவத்தை மறுப்பதே தெரிதாவின் உட்கோள். அந்நிலையில், அமைப்பியல் வாதிகளின் கட்டமைப்பு, மையம் மூலம் என்னும் கருதுகோள்களை மறுக்கவே, அதன்வழி இலக்கிய அமைப்பியல்வாதக் கருத்துகளும் மறுக்கப்படுகின்றன என்பது தான் இங்கே விளக்கப்படுகிறது.

சசூரின் அகவடிவம் மறுக்கப்படவே, இலக்கிய அமைப்பிய லின் 'கவிதையியல்' இருப்பும் மறுக்கப்படுகிறது. இதைப் போன்றே வேறு சில அமைப்பியல் குறைபாடுகளும் அறிஞர் களால் சுட்டிக் காட்டப்படுகின்றன. அவற்றுள் ஒன்று, காலத் தைப் பற்றிக் கவலைப்படாமை. சசூர் தம் மொழிக் கோட் பாட்டில் காலத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாததும்' அதனால் விளந்த குறைபாடுகளும் மேலே விளக்கப்பட்டன. இதுபோலவே கவிதையியலாளரும் இலக்கியத்தின் அகச்சட்டகம் காலத்தின் மாற்றங்கட்கு உட்பட்டது என்பதைக் தம் கருத்தில் கொள்ளவில்லை. கவிதையியல் அமைப்பே படைப்பின் உரு வாக்கத்திற்குத் துணை நிற்கிறது என்றாலும், கவிதையியல் என்பது மொழியோடு நேரடித் தொடர்புடையதாகையால், மொழியென்பது உடன்காலப் பண்பாட்டோடும் கால மாறுதல் களோடும் தொடர்புடையதாகையால் காலத்தின் செல்வாக்கு

கவிதையியலை மாற்றச் செய்யும் என்னும் உண்மையை அவர்கள் புறக்கணித்துவிட்டனர்.

இப் புறக்கணிப்பு அமைப்பியல் வாதத்தின் இருவேறு குறைகளுக்கு இடமளித்துவிட்டது. அதாவது, மனித மனம் தான் தோன்றியன்று: சமுதாயத்தால் உருவாக்கப்படுவது என்பதைக் கொள்கையாக ஏற்றுக் கொண்ட அமைப்பியலார், காலத்திற்கேற்பச் சமுதாயம் மாறுதலடைவதையும், அதற்கேற்ப மனித மனம் உருவாக்கம் பெறுவதையும் கணக்கிற் கொள்ளாமல் விட்டுவிட்டனர். அதனால், படைக்கின்ற படைப்பாளியின் மனமும், படைப்பை ஏற்றுக் கொள்ளுகின்ற வாசகனின் மனமும் கால அடைவில் மாறுதல் அடைவதைக் கவனிக்காமல் அல்லது அம்மாற்றத்தை ஒருபொருட்டாக எண்ணாமல் விட்டுவிட்டனர். எனவே படைப்புகள் அடிச்சட்டக அமைப்பின் தன்மையால் தாமே பொருள்தரும் என்ற தவறான முடிவுக்கு வந்தனர்.

ஏனெனில், அமைப்பியலார் தாம் கருதும் கவிதையியல் கூறுகளான இலக்கிய வகைமை, இலக்கிய உத்திகள், இலக்கியப் பொருண்மை என்பனவற்றை அவர்கள் புறமைப் பொருளாகக் (objective entities) கருதிவிட்டனர். மொழியின் கூறுகளாக, மொழியால் வெளிப்படுத்தப்பெறும் இக்கூறுகள் வாசகனின் சூழலுக்கேற்பப் பொருள்படுவன என்னும் வாசகக் கோட்பாட்டுச் (Theories of reading) சூழலை இவர்கள் அறவே ஒதுக்கி விட்டனர். அதனால் இலக்கியப் பயனும் புறக்கணிக்கப்பட்டது; விளைவாக இலக்கிய மதிப்பீடும் இவர்களுடைய கோட்பாட்டு எல்லைக்குள் இடம்பெறவில்லை.

மனித மனத்தின் தனித்தன்மையை அல்லது சூழலுக்கேற்ப வேறுபடும் மனப்பாங்கினைப் புறக்கணித்த காரணத்தால் இவர்தம் இலக்கியக் கோட்பாடுகள் பெரும் எதிர்ப்புகளுக்கு உள்ளாயின. மீயமைப்பியல்வாதிகள் படைப்பாளியின் ஆளுமையைப் பற்றி மிகுதியாகக் கவலைப்படவில்லையாயினும்[34] வாசகர்களின் இன்றியமையாமையை மிகுதியாக வற்புறுத்துகின்றனர்.

34. See: 1. Michel Foucault, ''What is an Author?'' **Textual Strategies,** ed. Harari, PP. 141-160
2. Roland Barthes, ''The Death of the Author'' **Twentieth century literary theory** ed. K. M. Newton, PP.154-158

வாசகர்களின் சமுதாய அந்தஸ்து வாசகர்களின் பால்வேறுபாடு என்னும் கூறுகள் இலக்கிய நுகர்வு, இலக்கிய மதிப்பீடு என்னும் அம்சங்களைப் பெரிதும் பாதிக்கின்றன என்பதை இவர்கள் வற்புறுத்திக் கூறுகின்றனர். தெரிதா எடுத்துக் காட்டிய மொழியின் ஊசற் பொருண்மை, தடுமாற்றத் தன்மை என்பனவும் பக்தினின் அவாய்நிலை (dialogism), லக்கானின் உளப்பகுப் பாய்வுக் கோட்பாடுகள், கிறித்தவாவின் பெண்ணியச் சிந்தனைகள் ஆகியனவெல்லாம் தனித்தனியே ஆனால் ஒருமுகமாகப் (Converging of the divergencies) பாயவே, அமைப்பியல் கோட்பாடுகளின் குறைபாடுகள் ஒவ்வொன்றாக வெளிப்படலாயின. இலக்கிய அமைப்பியல் வாதமும் இத்தகைய குறைபாடுகளுள் சிலவற்றிற்கு உட்பட்டதாதலின் அதன் பொருத்தமின்மைகளும் சிறுகச் சிறுக வெளிப்படலாயின.

# உளப்பகுப்பாய்வும் இலக்கியக் கோட்பாடுகளும்

மானுடச் சமுதாய அமைப்பு, அரசியல், சமய, பொருளாதார நடைமுறைகள், காலந்தொறும் தோன்றி வழங்கும் தத்துவக் கோட்பாடுகள் ஆகியவற்றால் இலக்கியக்கோட்பாடுகள் தாக்கமுற்றுச் செயற்படுவதை முன்னைய இயல்களில் ஒருவாறு கண்டோம். இவற்றைப் போலவே மனிதனின் மனத்தைக் குறித்து எழுந்துள்ள உளவியல் கோட்பாடுகளும் இலக்கிய ஆய்வைப் பாதித்து வருகின்ற முறைமையை இவ்வியலில் சுருக்கமாகக் காண்போம்.

மனித மனம் பற்றிய சிந்தனைகள் பல நூற்றாண்டுகளாகவே பிளேட்டோ முதலான அறிஞர்களால் விவாதிக்கப்பட்டு வந்திருப்பினும், அறிவியல் அடிப்படையில் ஆராயக்கூடிய ஒரு துறையாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்தான் உளவியல் ஆய்வு நிலை பெறலாயிற்று. இவ்வகையில் குறிப்பிடத்தக்க தொண்டாற்றிய அறிஞர் ஆஸ்திரிய நாட்டு வியன்னாவைச் சேர்ந்த சிக்மண்ட் பிராய்டு (Sigmund Freud) என்பவராவர். மனத்தின் இயல்பு, பாகுபாடு, செயற்பாடு என்னும் நிலைகளில் அதனை ஆராய்ந்து உளவியலாய்வுக்கு அறிவியல் அந்தஸ்து அளித்தவர் இவர்தான். உளப் பகுப்பாய்வியல் (Psychoanalysis) என்று அழைக்கப்படும் இவரது ஆய்வு முறைகள் இலக்கியப்படைப்புகளை ஆராயப் பயன்படும் பாங்கினை இவரே சில எடுத்துக்காட்டுகளின் மூலம் விளக்கியுள்ளார்.

இவரைத் தொடர்ந்து பலர் இலக்கிய விளக்கத்திற்கும், இலக்கிய ஆராய்ச்சிக்கும் இவருடைய கொள்கைகளையும், நெறிமுறைகளையும் பயன்படுத்தி வருகின்றனர். இத்தகைய ஆய்வு உளப்பகுப்பாய்வியல் திறனாய்வு (Psychoanalytical criticism) என்று வழங்கப்படுகிறது. இவரையடுத்துக் கார்ல்யூங் (Carl jung) என்னும் சுவிட்ஜர்லாந்து அறிஞர், ழாக் லக்கான் (Jacques Lacan) என்னும் பிரஞ்சு அறிஞர் ஆகிய இருவரும்

உளப்பகுப்பாய்வியல் துறையில் மேலும் சில ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளனர். இவ்விருவருடைய ஆய்வுகளும் கூட இக்கால இலக்கியக் கோட்பாடுகளைப் பெரிதும் நெறிப்படுத்தியுள்ளன; நெறிப்படுத்தி வருகின்றன.

இம்மூன்று உளவியல் அறிஞர்களுள் பிராய்டும், யூங்கும் மனித மனத்தின் செயற்பாடுகளுக்கு அடிமனம் எவ்வாறு காரண மாகிறது என்பதையும், கலை இலக்கியப் படைப்புகளில் அடி மனத்தின் பங்கு என்ன என்பதையும் விளக்கியுள்ளனர். இதன் அடிப்படையில் இலக்கியப் படைப்புகளில் இடம்பெறும் அடிக் கருத்து, பாத்திரப்படைப்பு, படைப்புகளில் கையாளப்பெறும் குறியீடுகள் போன்றவற்றை ஆராயும் இலக்கிய ஆய்வுகள் இந்த நூற்றாண்டின் நாற்பதுகளுக்குப் பின்னர் வெளிவரலாயின. **அறிமனம்** (conscious mind) **அடிமனம்** (unconscious mind) என்னும் அமைப்புகளின் அடிப்படையில், இவ்வமைப்புகளுக்கு இடையே உள்ள தொடர்பு, சார்பு என்னும் கோணங்களில் ஆராயப்படும் உளப்பகுப்பு ஆய்வுகள் அமைப்பியல்வாதக் கோட்பாடுகளுக்கு உட்பட்டன. ஆதலின் இவ்வகையில் செய்யப் படும் இலக்கிய ஆய்வுகளும் அமைப்பியல்வாதக் கோட்பாடு களுக்குள் அடங்குவனவாகும். எனினும் உளவியல் ஆய்வுகள் என்னும் பொருள் தொடர்பும், வரலாற்றுத் தொடர்ச்சியும் கருதி இவை இங்கே மீயமைப்பியல் கோட்பாடுகளின் கீழ் சேர்த்துக் கூறப்படுகின்றன.

ழாக் லக்கானின் உளவியல் கோட்பாடுகளும் உளப்பகுப் பாய்வியல் துறையைச் சார்ந்தனவாயினும், இவை மீயமைப் பியல் கோட்பாடுகளுடன் பெரிதும் தொடர்புடையன. முன்னைய இருவராலும் நன்கு தெளிவு படுத்தப்பெற்ற **அடிமனம், அறிமனம்** என்னும் பாகுபாட்டில் லக்கான் அதிக ஆர்வம் கொள்ளவில்லை. மாறாக, அடிமனம் எவ்வாறு தொழிற்படுகிறது. இந்த அடிமனச் செயற்பாட்டிற்கும் மொழிக்கும் என்ன தொடர்பு என்பது குறித்து ஆய்வதையே லக்கான் தம் முக்கிய நோக்கமாகக் கொண்டார். இவருடைய உளவியல்சார் மொழிக் கோட்பாடும் இலக்கிய ஆய்வுக்கு ஒரு புதிய பரிமாணத்தைத் தந்துள்ளமையாலும், தெரிதாவின் மொழிக்கோட்பாட்டுடன் இவருடைய கோட்பாடு தொடர் புடையதாகையாலும் இவர் ஒரு மீயமைப்பியல்வாதியாகக் கருதப்படுகிறார். முந்தைய உளப்பகுப்பாய்வுக் கோட் பாடுகளைத் தெளிவுபடுத்தாமல் லக்கானின் கோட்பாடுகளை அறிமுகப்படுத்துவது பெரும்பயன் தராது என்னும் கருத்தால்

மேற்சுட்டிய இருவரைப் பற்றியும் ஓரளவு விளக்கிய பின்னர் மீயமைப்பியல் சார்ந்த லக்கானின் உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## பிராய்டின் உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள்

மானுடக் குழந்தை தன்னையும் தான் பிறந்துள்ள புற உலகையும் இன்னவென அநுபவபூர்வமாகவும், அறிவுபூர்வமாகவும் அறிந்துகொள்ளும்வரை தன் உடலுள் அமைந்திருக்கும் பசி, கோபம், பயம், உடைமை, இயற்கை உபாதை போன்ற இயல்பூக்கங்களால் (instincts) செயல்படுகிறது. இந்த இயல்பூக்கங்களின் தேவை நிறைவேறுவதால் உண்டாகும் மகிழ்ச்சியையே குழந்தை பெரிதும் விரும்புகிறது, இதற்குத் தடையாகும் எதனையும் குழந்தை விரும்புவதில்லை; இவை நிறைவேறாதபொழுது அழுகிறது. குழந்தையின் இத்தகைய மனநிலையை இயல்பூக்கநெறி அல்லது இன்பநெறி (pleasure principle) என்று பிராய்டு குறிப்பிடுகிறார். பெற்றோர், சமுதாயம் போன்ற புறஉலக இடையீடு இல்லாதவரை குழந்தை தன் உடலுக்குகந்த. இயல்பூக்கங்களுக்குப் பொருந்திய செயல்களை மட்டுமே விரும்புகிறது. தன்னைத் தவிரப் பிற உயிர்கள் அல்லது பொருள்களைப் பற்றிய அறிவு பெறாத இந்தப் பருவத்தில் ஏற்படும் ஒரே உணர்வு தன் இயல்பூக்க திருப்தி மட்டுமே என அவர் குறிப்பிடுகிறார். இங்கே, ''ஒரு தேவை—அதன் நிறைவேற்றம்'' என்ற அளவில் குழந்தையின் செயற்பாடு முடிவடைகிறது. தேவையின் தகுதியோ தகுதியின்மையோ இவற்றை நிறைவேற்றுவதற்கு மேற்கொள்ளப் பெறும் நெறிமுறைகளோ குழந்தையின் செயற்பாட்டுக்குக் கருத வேண்டாதன; இதன் இன்பநெறி தன்னிச்சையானது, கட்டுப்பாட்டை விரும்பாதது என்பன இப்பருவத்தின் குழந்தை இயல்புகள். இந்நிலையில் பிற உயிர்களுக்கும் மனிதக் குழந்தைக்கும் இடையே பெரிய வேறுபாடு எதுவும் இல்லை என்றாகிறது.[35]

---

35. எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும் (தொல்.பொருள். பொருளியல்-27)

என்னும் தொல்காப்பியரின் கருத்து உயிர்கட்கு இன்பம் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணத்தை விளக்கும் பிராய்டின் கருத்தோடு ஒன்றி நிற்கக் காண்கிறோம். இருவரும் வெவ்வேறு சூழ்நிலைகளில் இக்

மானுடக் குழந்தை கையற்ற நிலையில் பிறந்து சிலகாலம் வரை கையற்ற நிலையிலேயே வளர்கிறது. அதாவது பிறர் உதவியின்றித் தன் தேவைகளைக் கூட நிறைவேற்றிக் கொள்ள இயலாத நிலையில் குழந்தை வளர்கிறது. தாய் தந்தை, குடும்பம் என்னும் புற மானுட உதவியின்றிக் குழந்தை வளர இயலாது. எனவேதான் ''நாமெல்லோரும் ஒரு வகையில்

---

கருத்தை வெளிப்படுத்தியிருப்பினும் உயிர்களின் அடிப்படை இயற்கையை (primary nature) இருவரும் ஒரே தன்மையில் விளக்கியிருப்பது சிந்திக்கத்தக்கது. இயல்பூக்க நெறியில் ஒழுகும் குழந்தைக்கு இன்பம் எவ்வாறு தோன்றுகிறது என்று பிராய்டு விளக்கு கிறார். இயல்பூக்க நெறியிலிருந்து மாறிச் சமுதாயம் ஏற்றுக்கொள்ளும் வாழ்க்கை நெறிக்கு (reality principle) உட்பட்டு வளர்ந்து நிற்கும் தலைவனுக்கு இன்பம் எவ்வாறு நிறைவடைகிறது என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

> ''தன் விருப்பத்தோடு இயைந்து வரும் வினை நிகழ்ச்சியே இன்பம் தருவது; இவ்வியற்கை எல்லாஉயிர்க்கும் பொது.''

என்பது மேலே காட்டிய தொல்காப்பிய நூற்பா நுவலும் கருத்து. தலைவன் விழைவிற்கிணங்கச் செயற்படும் பரத்தையிடத்தும் அவனுக்கு இன்பம் தோன்றும்; தன் விழைவிற்கிணங்கச் செயற்படாத விடத்து மனைவியின் பாலாயினும் அவனுக்கு இன்பம் தோன்றாது என்னும் இளம் பூரணரின் விளக்கம், இன்பம் தோன்றுவதற்குக் காரணம் இன்பத்திற்கு உரிய பொருளன்று; தான் விரும்பியவாறு தன் விழைவு நிறைவேறலே என்னும் கருத்தை உட் கொண்டது.தம் பண்பாட்டு மரபிற்கேற்பத் தலைவன் மேற்சார்த்தி உரைகாரர் விளக்கம் கூறினாராயினும், தலைவன், தலைவி என்னும் இரு பாலாருக்கும் இது பொருந்தும். உலகக் கட்டுப்பாடுகளைக் கடக்கும் அல்லது புறக்கணிக்கும் விழைவு நிறைவேற்றமே (satisfaction of the instinctual urges or drives) இங்குக் கருதப்படும் உளவியற்கோட்பாடு என்பது தான் இங்கு அறியத்தக்கது.

குறைப்பிரசவங்களே'' என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[36] இந்தக் கையற்ற நிலையிலிருந்து விடுபட்டு வளரும்போது, குழந்தை வாழ்க்கை நெறிக் (reality principle) கோட்பாடுகளுக்கு உள்ளாகிறது. இக்கோட்பாடுகள் பெரும்பாலும் குழந்தையின் இயல்பூக்க நெறிக்கு எதிரானவை. தாயோடு தன்னை எல்லா நிலைகளிலும் பிணைத்துக் கொள்ள விரும்புதல். தாயுடன் கொள்ளும் அன்பிற்குப் போட்டியாகத் தந்தையைக் கருதுதல் போன்ற ஆண் குழந்தையின் விழைவுகளும், தந்தையோடு தன்னை எல்லாநிலைகளிலும் பிணைத்துக் கொள்ள விரும்புதல், தந்தை மீது கொள்ளும் அன்பிற்குப் போட்டியாகத் தாயைக் கருதுதல் போன்ற பெண் குழந்தையின் விழைவுகளும் தடை செய்யப்படுகின்றன. காரணம் இவை நடைமுறைக்கு, யதார்த்த வாழ்க்கை நெறிக்கு ஒவ்வாதன. எனவே குழந்தைப் பருவத்திலேயே இவை ஒடுக்கப் படுகின்றன. இத்தகைய ஒவ்வாப் பாலியல் விழைவுகளை ஈடிபஸ் வேணவா (Oedipus complex) என்று பிராய்டு குறிப்பிடுகிறார். சமுதாய இனப் பெருக்க நெறிகட்கு ஒவ்வாதன வாதலின் இவ்விழைவுகள் சமுதாய மேலாண்மையால் ஒடுக்கப்படுகின்றன. தன் தந்தையை இம்மேலாண்மையின் பிரதிநிதியாக ஆண் குழந்தை கருதுகிறது.

பொருளாதார நோக்கமே மானுடச் சமுதாய வாழ்க்கையின் செயலுந்தாகப் (motive) பரிணமிக்கிறது என்னும் கோட்பாடு குழந்தையின் அடுத்த கட்ட வளர்ச்சியில் தலையிடக் காண்கிறோம். இக்கோட்பாட்டைக் காரல் மார்க்சு கூறவில்லை; பிராய்டுதான் கூறுகிறார்.[37] பொருளாதாரமே வாழ்க்கையின் அடிப்படையானால், பொருளாதாரத்திற்கு அடிப்படை உழைப்பாகிறது. எனவே உழைப்பே வாழ்க்கையை நெறிப்படுத்தப் பயன்படும் கருவி என்பது தெளிவாகிறது. இத்தகைய உழைப்பிற்குக் குழந்தையைச் சமுதாயம் தயார் செய்கிறது. அதாவது வெறும் விழைவு நிறைவேற்றமே நடந்துகொண்டிருந்தால் வாழ்க்கைக்கு அடிப்படையான உணவு, உடை, உறையுள் போன்றவற்றைத் தரவல்ல வேலைகள் எவ்வாறு நடைபெறும்? பொருளாதார வளர்ச்சி நோக்கிய உழைப்புதான் ''வேலை யாகிறது. இந்தப் பயிற்சியின் விளைவு அதாவது, இந்தப்

---

36. ''We are all born 'prematurely' — Terry Eagleton P. 152

37. Introductory **Lectures on psychoanalysis,** quoted in Terry Eagleton, P. 151

பயிற்சியில் குழந்தை ஈடுபட வேண்டுமானால் அது தன் இயல்பூக்க விழைவுகளைச் சிறுகச் சிறுகத் தியாகம் செய்ய வேண்டும். இந்தத் தியாகத்தின் வெற்றிதான் மனிதனின் ஆளுமையாகப் பரிணமிக்கிறது.

மேற்கூறிய இருவகைப் பயிற்சிகளும் முதற்கட்ட நிலையில் குழந்தையின் இயல்பூக்க விழைவுகளையும், ஈடிபஸ் வேணாவை யும் தம்மியல்பில் செல்ல விடாமல் தடுக்கின்றன. குழந்தையின் அடுத்த கட்ட வளர்ச்சி நிலையில், அதாவது குழந்தையின் சிந்தனையாகிய மொழித் திறன் வளரும் நிலையில் இவ் விழைவு களும், வேணவாவும் சமுதாய வாழ்க்கைப் படிநிலைகளை நோக்கி மடைமாற்றம் செய்யப்படுகின்றன (sublimated). தன் னுடைய தந்தையும் இவ்வாறு செய்து குடும்பத் தலைமையும். தாயின் தனியன்பையும் பெற்றதுபோல் தானும் ஒரு நாளைக்குத் தலைமை பெறலாம் என்ற கருத்தால் ஆண் குழந்தையும், தன் னுடைய தாயும் இவ்வாறு பெற்ற பயிற்சியால் தன் தந்தையின் அன்பைத் தனக்கே உரியதாகப் பெற்றதுபோல் தானும் ஒரு நாளைக்குந் தந்தை போன்ற ஒரு ஆணின் தனியன்பைப் பெற லாம் என்னும் கருத்தால் பெண் குழந்தையும் இத்தகைய மடை மாற்றத்தைச் சிறுகச் சிறுக ஏற்றுக் கொள்கின்றன. இவ்வாறு ஏனைய குடும்ப உறுப்பினர்களைப் போலவும், சமுதாயத்தின் பிற உறுப்பினர்களைப் போலவும் குழந்தை செயற்படத் தொடங்குகிறது என்பது பிராய்டின் கருத்து.

இத்தகைய மடை மாற்றம் அவ்வளவு எளிதில் நடைபெறுவ தில்லை. இயல்பூக்க விழைவுகள் நிறைவேற ஒட்டாமல் தாய், தந்தை முதலானோரால் அடக்கப்படுகின்றன ஒடுக்கப்படு கின்றன; ஆனால் அவை அழிக்கப் படுவதில்லை. குழந்தையின் உடல்சார்ந்த விழைவுகளாதலின் அவை அழிவதில்லை. அடக்கப் படும் ஒவ்வொரு விழைவையும், நிறைவேறாத வேணவாவையும் குழந்தை மறைத்துக் கொள்கிறது; பதுக்கி வைக்கிறது. இவ்வாறு வேண்டாதன, தகாதன என்று சமுதாயம் கூறுவன வற்றையெல்லாம் மறைத்துக் கொள்ளப் பயன்படும் கொள்கலம் தான் **அடிமனம்** (unconscious mind) என்கிறார் பிராய்டு. வேண்டாதன, தகாதன என்னும் தடைகளின் (taboos) வாயி லாகப் பெறப்படும் சமுதாய ஒழுகலாறுகளின் தொகுப்பாக விளங்குவதை **அறிமனம்** (conscious mind) என்று பிராய்டு பெயரிட்டழைக்கிறார்.[38] சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்

---

38. இவற்றை முறையே நனவிலி மனம், நனவு மனம் என்று மூலமொழியின் மொழிபெயர்ப்புகளாகப்

படாத விழைவுகளும், ஈடிபஸ் வேணவாவும் வளர்ச்சிப் பருவத்தில் பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டு மீண்டும் அடிமனத்தே அழுத்தி வைக்கப்படுகின்றன. இத்தகைய விழைவுப் பதுக்கல்களும் ஆசை அழுத்தங்களும் மானுட வாழ்க்கை நெடுக நடந்த வண்ணமாகவே உள்ளன. குழந்தைப் பருவத்தில் தந்தையால் ஒடுக்கப் பட்டனவும், வளர்ந்த நிலையில் சமுதாயப் பண்பாட்டு மரபுகளால் அழுத்தப்பட்டனவும் என இடையறாது நடைபெறும் ஒடுக்கங்களால் அடிமனம் நிறைந்து வழியும் தன்மையை எய்துகிறது. இவ்வாறு குழந்தைப் பருவத்தில் ஒடுக்கப்படும் விழைவுகளும் வேணவாவும், முதிர்ந்த நிலையில் ஒடுக்கப்படும் இவ்விழைவுகளின் திரிபு வடிவங்களாகிய கருத்துகளும் விழைவுந்தல்களும் (drives) அடிமனத்தே அழுந்தி அழுந்திக் கிடக்கின்றன. எனினும் ஒடுக்கத்தை அமைதியாக ஏற்றுக் கொள்ளும் இயல்பற்றனவாகிய இவை, வெடித்து மேலெழும் வாய்ப்பை எதிர்பார்த்து, அமைதியற்று, அலைமேல் அலையெனத் தவித்த வண்ணம் அடிமனத்துள் சுழன்று வருகின்றன என்று அடிமன இயல்பைப் பிராய்டு விளக்குகிறார்.

மனித மனத்தை இவ்வாறு **அறிமனம், அடிமனம்** என்னும் இரு பகுதிகளாகப் பகுத்து இவ்விரு கூறுகளின் இயல்புகளையும் இவை மனித வாழ்வில் பெறும் பங்கினையும், இக்கூறுகளின் செயல்பாட்டால் விளையும் நன்மை தீமைகளையும் சமுதாயக் கண்ணோட்டத்திலும், தனிமனித உளவியல் கண்ணோட்டத்திலும் பகுத்து ஆராய்ந்த பிராய்டின் உளவியல் ஆய்வு முறைதான் **உளப்பகுப்பாய்வியல்** (psychoanalysis) என்று அழைக்கப்படுகின்றது.

குழவிப் பருவம் முதலாக இடையறாது நடைபெற்றுவரும் விழைவொடுக்கங்கள் (psychic repressions) இரண்டு நிலைகளில் வெளிப்படும் என்று பிராய்டு விளக்குகிறார். அடிமனத்தே புதைந்து கிடக்கும் நிறைவேறாத விழைவுகளை அறிந்து கொள்ளுதற்குரிய ஒரு நல்ல வாயிலாகக் கனவுகளைக் காட்டுகிறார் பிராய்டு. அவருடைய ஆய்வுகளில் ''கனவுகளின்

---

பெயரிட்டு அழைப்போரும் உளர். காண்க: அரங்க. நலங்கிள்ளி, **இலக்கியமும் உளப் பகுப்பாய்வும்** ப. 10.

விளக்கம்[39] என்னும் நூல் தலையாயது. அடுத்து, மக்களின் உரையாடல்களிலும் சொற்பொழிவுகளிலும் வெளிப்படும் விகட மொழிகளும் (jokes) வாய்த் தவறல்களும் (slips of the tongue) ஒருவரது விழைவொடுக்கங்களின் வெளிப்பாடாக நிகழ்கின்றன என்கிறார். நிறைவேறாமல் ஒடுக்கப்பட்ட விழைவுகள் இந்த இரு வகைகளில் வெளிப்படும் என்று பிராய்டு தம் ஆய்வுகளால் கண்டறிந்து கூறினார்.

நாம் காணும் கனவுகள் நம் அடிமனத்தின் தொழிற்படு நிலையின் விளைவுகள். இவை மூன்று நிலைகளை உடையன. ஒன்று கனவின் கருப்பொருள்; இரண்டாவது கனவின் வெளிப்பாடு; மூன்றாவது இக்கருப் பொருளைக் கனவாக மாற்றும் உத்தி.

கருப் பொருள் என்பது அடிமனத்தே கிடக்கும் நிறைவேறா விழைவுகள். இவை ''ஈத்'' (ID-instinctual Drives) என்று அழைக்கப்படும்; இவை அறிமனத்திற்கும், பண்பாட்டு உணர்வுக்கும் (super ego) ஒவ்வாத ஆசைகள்; அதாவது, சமுதாயத்தின் வாழ்க்கை நெறிக்கு முரண்பட்ட ஆசைகள்; கனவாகப் பரிணமிப்பதற்குத் தேவையான கச்சாப் பொருள்கள் (raw materials). இவற்றைக் கனவுக் கரு (latent content) என்று அழைக்கிறார் பிராய்டு.

கனவின்போதும் ஓரளவு விழிப்பாயிருக்கும் அறிமனம் இந்த விகார ஆசைகளை அவற்றின் வடிவத்திலேயே ஏற்றுக் கொள்வதில்லை. எனவே அடிமனம் இவ் விகார விழைவுகளை அறிமனம் ஏற்றுக் கொள்ளத்தக்க படிமங்களாக மாற்றித் தாறுமாறாக வெளிப்படும் ஆசைகளை ஓர் ஒழுங்கமைவுக்கு உட்படுத்திக் கோவையான, பொருள் விளங்கத்தக்கதொரு நிகழ்ச்சித் தொடர்போல வடிவமைத்து வெளிப்படுத்துகிறது. இவ்வாறு மாற்றியமைக்கும் தொழிற்பாட்டைப் பிராய்டு கனவுத்தி (dream work) என்று அழைக்கிறார்,

அறிமனம் ஏற்றுக் கொள்ளும் வகையில் மாற்றியமைக்கப் பட்ட அடிமன விழைவுகளின் வடிவம் நமக்கு இறுதியில் கனவாகத் தோன்றுகிறது. இந்தப் புறவடிவம் அல்லது இறுதி

39. Interpretation of dreams, on Sexuality and the Case Histories, 1900.

வடிவத்தைத் தான் நாம் கனவு என்கிறோம். இதனைக் கனவின் வெளிப்பாட்டு வடிவம் (manifest content) என்றழைக் கிறார் பிராய்டு.

கனவின் இந்த மூன்று கூறுகளுள் பிராய்டின் கவனத்தை மிகவும் ஈர்த்தது கனவுத்திதான். கனவின் கரு, கனவின் இறுதிவடிவம் என்னும் இரண்டைவிடக் கனவுத்தியே கனவின் சாரம் (essence of dreams) என்பது பிராய்டின் கருத்து. **கனவு களின் விளக்கம்** என்னும் தம்முடைய தலையாய நூலில் பிராய்டு முழுக்க முழுக்க இந்த அடிமனச் செயற்பாட்டைத் தான் ஆராய்கிறார்.

சமுதாயப் பண்பாட்டு உணர்வுக்கு ஒவ்வாத பாலியல் விழைவுகள், குறிகள், பாலுறவுச் செய்கைகள், அதிகார ஆதிக்க ஆசைகள், அவை தொழிற்படும் கொடூரமான காட்சிகள் போன்றவற்றை அடிமனம் கட்டுப்பாடற்ற நிலையில் அறிமன எல்லைக்குள் தள்ளுகிறது. இவ்வாறு தள்ளுமிடத்து, ஆசைக் குறிகளைச் சுருக்கி உருவகமாக்கியும், ஒன்றை மற்றொன்றாக மாற்றியும் சிறியதைப் பெரியதாக்கியும், பெரியதைச் சிறிய தாக்கியும், மேலதைக் கீழதாகவும், கீழதை மேலதாகவும் மாற்றியமைத்தும், சிலவற்றைத் தொகுத்தும் (மறைத்தும்), சிலவற்றைக் கவர்படு பொருளாக மயக்கியும், ஒப்பானவற்றை உறழ்ந்து காட்டியும், முரண்பட்டவற்றை ஒப்பாக்கியும் இன்ன பிறவாறெல்லாம் செய்து **ஏதோ ஒரு பொருள் தருவதுபோல் மாற்றி அமைக்கிறது**. இத்தகைய மாற்றியமைக்கும் கனவுத்திக் கூறுகளை ஆராய்வதே உளப் பகுப்பாய்வியலின் இன்றியமை யாத பணியாக அமைகிறது.

இத்தகைய அடிமனச் செயற்பாடுகளின் தன்மையை ஆராய்ந்த பிராய்டு கலைஞர்களின் படைப்புத் தன்மையோடு இதனை ஒப்பிட்டுப் பார்க்கிறார். கலைஞர்கள், குறிப்பாக எழுத்துலகப் படைப்பாளிகள் தம் மனத்தே தேங்கிக் கிடக்கும் உணர்வுகளை அவை தோன்றியவாறே படைக்காமல், பல்வேறு உத்திகளைக் கையாண்டு சமுதாயம் ஏற்றுக் கொள்ளத் தக்க வகையில் உருமாற்றிக் கவிதையாகவோ. நாடகமாகவோ, கதையாகவோ தருகிறார்கள் என்பது அவருடைய கருத்து. இதேபோன்று வாய்த் தவறல்களாகவும், விகடங்களாகவும் வெளிப்படும் ஆசைகளின் புறவடிவங்களையும் ஆராய்ந்து அவற்றிற்குரிய பச்சைப் படிமங்களை (raw images) உணர்ந்து

கொள்ளவும் இக் கனவுத்திகள் பயன்படுகின்றன என்று கருது கிறார். இதன் அடிப்படையில், படைப்பாளிகளின் ஆளுமை யினையும், அவர்தம் படைப்புகளுள் உலவும் பாத்திரங்களின் ஆளுமையையும் கண்டறியலாம் என உளப்பகுப்பாய்வியல் கோட்பாடுகள் இலக்கிய ஆய்வுக்குப் பயன்படுமாற்றைத் தெளிவுபடுத்துகிறார். லியனார்டோ டாவின்சி மைக்கல் ஆஞ்சலோ ஆகிய கலைஞர்களைப் பற்றியும், வில்லியம் ஜென்சன் என்னும் ஜெர்மானிய எழுத்தாளரின் கிராதிவா (Gradiva) என்னும் நூலைப் பற்றியும் பிராய்டு எழுதியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகள் இக்கலைஞர்கள் மற்றும் எழுத்தாளர் களின் உளவியல் இயற்கையை வெளிப்படுத்துவனவாக உள்ளன. பிராய்டின் உளப்பகுப்பாய்வியல் கோட்பாடுகளை அடி யொற்றிப் பல திறனாய்வாளர்கள் இத்தகைய இலக்கிய ஆராய்ச்சிகளைச் செய்துள்ளனர்.

உளப்பகுப்பாய்வியலின் அடிப்படையில் செய்யப்படும் இலக்கியத் திறனாய்வை நான்கு வகையாகப் பகுத்துக் காணலாம். **படைப்பாளியைக்** குறித்து இத்தகைய ஆய்வைச் செய்யலாம்; படைப்பின் **உள்ளடக்கம்** குறித்து ஆராயலாம்; படைப்பின் புறக் **கட்டமைப்பு** குறித்தும் ஆராயலாம்; அல்லது படைப்புக்குரிய **வாசகனை** அடிப்படையாகக் கொண்டும் இத் தகைய ஆய்வைச் செய்யலாம்.[40]

இதுவரை நடைபெற்றுள்ள, இப்போதும் நடைபெற்று வரும் பெரும்பாலான உளப்பகுப்பாய்வியல் திறனாய்வுகள் மேலே குறித்தவற்றுள் முதலிரண்டு வகைகளைச் சார்ந்தன. கட்டமைப்பு, வாசகன் என்னும் அடிப்படைகளில் எழுந்துள்ள இலக்கியத் திறனாய்வுகள் மிகமிகச் சிலவே.

படைப்பாளியின் உள்ளப்பாங்கினை விளக்குவதாகக் கருதிப் படைப்புக் கூறுகளை அலசி ஆராயும் போக்குகள் பலநேரங் களில் யூகங்களாகவே அமைந்துவிடுகின்றன. படைப்பாளியின் வாழ்க்கையில் அத்தகைய அடிமனப் பிறழ்வுகள் காணப் பட்டமைக்குரிய ஐயத்திற்கிடமற்ற வரலாற்றுச் சான்றுகள் கிடைத்தாலன்றி, அவனுடைய படைப்புகளில் காணப்படும் நிகழ்ச்சிகள், குறியீடுகள் போன்றவற்றின் அடிப்படையில் அவனு டைய மன விகாரங்களை அடையாளம் காண்பதாகக் கூறுவது உறுதியற்ற மேலும் ஆராயத்தக்க யூகமாகவே அமையும்;

---

40. Terry Eagleton, P. 179

இவற்றை முடிந்த முடிபுகளாகக் கொள்ளுவதற்கில்லை. புதுத் திறனாய்வுக் கோட்பாடுகளைப் பற்றி ஆராய்ந்தவிடத்து நாம் கண்ட நுதற்பொருள் மாயைப் போன்றே[41] இத்தகைய ஆய்வுகளை ஏற்பதிலும் சில திறனாய்வுச் சிக்கல்கள் தோன்றுகின்றன.

பிராய்டின் கோட்பாடுகளை அடியொற்றிப் படைப்பின் உள்ளடக்கக் கூறுகளாகிய பாத்திரங்கள், நிகழ்ச்சிகள், உவமை உருவகம் போன்ற உத்திகள் ஆகியவற்றை ஆராயும் ஆய்வுகளும் பலவாக வெளிவந்துள்ளன. இத்தகைய ஆய்வுகள் பாத்திரங்களின் உரையாடல், அவற்றின் நடைமுறை, கருத்து, படைப்புகளில் நிகழும் நிகழ்ச்சிகள், உவமை உருவகங்களில் கையாளப் பெறும் சொற்கள், படிமங்கள் போன்றவற்றை அடிமன அழுத்தங்களின் அல்லது ஒடுக்கங்களின் வெளிப்பாடுகளே என்று ஆராய்ந்து காட்டுகின்றன.

இந்த இருவகை ஆய்வுகளும் படைப்பாளியின் அல்லது பாத்திரங்களின் அடிமனக் கொந்தளிப்பை, விழைவொடுக்கங்களினால் விளைந்த விகாரங்களைப் பெரும்பாலும் பாலியல் கண்கொண்டே நோக்குகின்றன. அடிமனத்தே ஒடுக்கப்பட்டு வெளிப்பாட்டுக்கு ஏங்கி நின்று கலை முதிர்ச்சியால் படைப்பாக வெளிப்படுவனவற்றுள் பாலியல் உணர்வுகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன என்பது உண்மை. எனினும் இவ்வாறு வெளிப்படும் விழைவுந்தல்கள் (id) எல்லாமே பாலியல் சார்ந்தன என்று கருதுவதும், எல்லாச் சொற்குறிகளும் படிமங்களும் பாலியற் குறிகளையே குறிக்கின்றன எனக் கருதுவதும் பொருத்தமாகப் படவில்லை. ஏனெனில், சொற்குறிகட்கும், படிமங்கட்கும் அவை குறிப்பனவாகக் கருதும் பாலியற் குறிகட்கும் (phallic images) உள்ள தொடர்பு முற்றிலும் நிலையானதென்றோ, நேர் நேரானது என்றோ கொள்ளுவதற்கில்லை. இக்குறியீடுகள் மொழிநிலையில் இரண்டாம் அடுக்குக்கு உரியன.[42] முதலடுக்காகிய சாதாரண மொழி நடையில்

---

41. காண்க : இந்நூல் ப. 31.

42. 1,2,3,4 எனவரும் எண் தொடர்ச்சி அடியடுக்கு அல்லது முதல் அடுக்கு எனப்பெறும், $4^2$, $5^3$, $8^4$ எனவரும் எண்களின் மீதுள்ள 2, 3, 4 என்பன இரண்டாம் அடுக்கிற்கு உரியன (Second Power / Indices) இவ்வாறே மரம், கல், நரி என்னும்

பயன் படுத்தப் பெறும் மொழிக்குறிகளாகிய சொற்களுக்கும் (குறிப்பான்களுக்கும்) அவை குறிக்கும் உலகத்துப் பொருள் களுக்கும் (குறிபடு பொருள்களுக்கும்) உள்ள தொடர்பு இடு குறித்தன்மை வாய்ந்தது என்றும், இந்த இடுகுறித்தன்மை கூட நிலையானதன்று, ஊசலாட்டத் தன்மை உடையது என்றும் தெரிதாவின் மொழிக் கோட்பாடு விளக்கி நிற்பதை மேலே கண்டோம். இவ்வாறிருக்க, மொழிநடையின் இரண்டாம் அடுக்கில் தொழிற்படும் குறியீடுகளும் படிமங்களும் பாலியற் குறிகளைத் தான் சுட்டுகின்றன என்று கொண்டு அதன் அடிப்படையில் படைப்பாளியையும் பாத்திரங்களையும் திறனாய்வு செய்வது எந்த அளவிற்குப் பொருந்தும் என்பது சிந்தனைக்கு உரியதாகிறது. பாலியல் அழுத்தங்களுக்கு அடிமனம் கொள்கலனாவதும் வாய்ப்பு நேர்ந்த விடத்து அறிமனத்தின் உதவியால் கலைநயம் சார்ந்த குறியீடுகளாக வெளிப்படுவதும் உண்மையே எனினும், பிற இயல்பூக்கங் களும் ஒடுக்கப்பட்டு இவ்வாறே வெளிப்படுகின்றன என்பதைப் புறக்கணிக்கலாகாது. விழைவு நிறைவேறல்கள் எல்லாமே பாலியல் தொடர்பானவை என்று கொள்வது மானுட இயற்கைக்குப் பொருத்தமாகப் படவில்லை.

சிக்மண்ட் பிராய்டு இந்த இருவகை அடிப்படைகளில் மட்டுமே தம் இலக்கிய ஆய்வுகளைச் செய்துள்ளார். இவரைப் பின்பிற்றி ஏர்னஸ் ஜோன்ஸ் போன்ற ஐரோப்பிய அறிஞர் பலரும், நார்மன் ஹாலண்டு, சைமன் லெசர், கென்னத் பர்க், ஹரால்டு புளூம் ஆகிய அமெரிக்கத் திறனாய்வாளர்களும் இத்தகைய ஆய்வுகளைச் செய்துள்ளனர்.

தமிழிலக்கிய ஆய்வுலகிலும் இத்தகைய ஆய்வுகள் டாக்டர் பட்ட ஆய்வேடுகளாகவும், கட்டுரைகளாகவும், நூல்

---

தமிழ்ச் சொற்கள் அவ்வப் பொருள்களை நேரே உணர்த்துவது மொழி நடையில் முதல் அடுக்கு. இனி 'நீட்டோலை வாசியா நின்றான் **நன்மரம்**', 'பெருங் **கல்**' (மலை), 'இவன் **நரி**' என்னும் தொடர்களுள் இவை வேறு பொருள் உணர்த்துவது இரண்டாம் அடுக்குப் பொருள். இவை பரியாயப் பொருள்கள் அல்ல. உணர்வழுத்தத்தால் விளையும் உத்திப்பொருள் கள். பரியாயப் பொருள்கள் முதலடுக்குக்கு உரியன. இத்தகைய உத்திகள் இரண்டாம் அடுக்குக்கு உரியன.

களாகவும், அண்மைக்காலத்தே வெளிவந்துள்ளன. குறிப்பாகத் தமிழவன், இ. மறைமலை, அரங்க. நலங்கிள்ளி, தி. கு. இரவிச்சந்திரன் போன்றோரின் ஆய்வுகளைக் குறிப்பிடலாம்.[43] ஏனைய இரண்டு அடிப்படைகளாகிய **புறக் கட்டமைப்பு, வாசகன்** என்பவற்றைப்பற்றி எழுந்த ஆய்வுகள் மிகச் சிலவாகவே காணப்படுகின்றன. அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளிலும் இத்தகைய ஆய்வுகள் மிக அருகிய நிலையில் கட்டுரைகளாக மட்டுமே வெளிவந்துள்ளன. இவற்றுள் கட்டமைப்பு பற்றிச் செய்யப்படும் உளப்பகுப்பாய்வு மொழியியல், நடையியல், படைப்பியல் என்னும் துறைப் பொருளோடு இயைந்து நடைபெறும் இயல்பு உடையது. வாசகனை அடிப்படையாகக் கொண்ட ஆய்வுகள் பெரும்பாலும் வாசகனின் விழைவு நிறைவேறல்களாகக் கருதப்படுகின்றன. பிராய்டு முதலாக மேலே காட்டப்பெற்ற திறனாய்வறிஞர்களின் ஆய்வுகளையும் இத்தகைய விழைவு நிறைவேறல்களாகக் கருதுவோரும் உண்டு.

பிராய்டின் ஆய்வுகளாக இதுவரை கண்டவற்றால், அடிமனத்திற்கும் அறிமனத்திற்கும் இடையே அமைந்த தொடர்புகள், அடிமன இயற்கையை உள்ளவாறு அறியப் பயன்படும் கனவுகளின் தன்மை, செயற்பாடு என்பன சுருக்கமாக விளக்கப்பெற்றன. மேலும் கனவுகளின் வெளிப்பாட்டுத் தன்மை பற்றிப் பிராய்டு கூறும் கனவுத்திகளின் தொழிற்பாட்டு நிலைகளும் விளக்கப் பெற்றன. இவற்றின் அடிப்படையில் எழுந்துள்ள இலக்கிய ஆய்வுகள் குறித்தும் சுருக்கமாகக் கூறப்பட்டது.

உளப்பகுப்பாய்வுத் திறனாய்வு வகைகளுள் மூன்றாவதாகிய புறக்கட்டமைப்பு குறித்து நூல்களோ கட்டுரைகளோ

---

43. (அ) தமிழவன், **மேலும் ஜூலை, 1989**

(ஆ) இ. மறைமலை, **இலக்கியமும் உளவியலும்**

(இ) அரங்க. நலங்கிள்ளி, **இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்**

(ஈ) தி. கு. இரவிச்சந்திரன், ''பிராய்டிய நோக்கில் சங்க அக இலக்கியப் பாடல்கள்'' புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி, 1991, பிஎச்.டி. பட்ட ஆய்வேடு.

மிகுதியும் எழுவில்லை என்னும் செய்தியும் கூறப்பட்டது. இங்கே புறக்கட்டமைப்பு (formal construction) என்று கூறுவது படைப்பின் பாடுபொருள் அல்லது கதைப்பின்னல், படைப்பின் வடிவம் அல்லது வகைமையியல்பு, யாப்புச் சட்டகம் போன்றவற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாகாது. இவற்றைப் பற்றிய பல ஆய்வுகள் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே நிகழ்ந்து வந்துள்ளன. உளப்பகுப் பாய்வியல் திறனாய்வாளர்கள் குறிப்பாக இந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் தொழிற்பட்டு வரும் திறனாய்வாளர்கள், படைப்புகளின் உயிராக விளங்கும் அடிக்கருத்து, அக்கருத் தினை வெளிப்படுத்தக் கவிஞன் கையாளும் உத்தி என்னும் இரண்டினையும் கலை வடிவமாக்கும் பாங்கினை ஆராய்வதில் மிகுதியும் ஆர்வம் காட்டத் தொடங்கியுள்ளனர். இத்தகைய ஆய்வுகள் நிறைவு பெற்று இன்னும் நூல்களாக வெளிவர வில்லை. காரணம், அடிமனத் தொழிற்பாட்டுக்கும் கவிஞன் கலைப்பாற்படுத்தும் உத்திகளுக்கும் என்ன தொடர்பு, உண்மைப் படைப்பாளியாகிய அடிமனத்திற்கும் படைப்பை வெளிப்படுத்தும் ஆசிரியனுக்கும் படைப்பை எதிர்கொள்ளும் வாசகனுக்கும் என்ன தொடர்பு என்னும் வினாக்கள் பிராய்டின் ஆய்வு முடிவுகளால் தெளிவுபடவில்லை. இந்த வினாவிற்குப் பிராய்டுக்குப் பின்னர் வந்த உளவியல் அறிஞர் ழாக் லக்கான் தான் ஓரளவு ஏற்றுக் கொள்ளத் தக்க விடைகாண முயன்று சில கோட்பாடுகளை உருவாக்கியுள்ளார். அவருடைய ஆய்வு முடிவுகளை இனிக் காணலாம்.

# லக்கானின் கோட்பாடுகள்

சிக்மண்ட் பிராய்டுக்கும் டாக்டர் லக்கானுக்கும் இடைப் பட்ட சுமார் ஐம்பதாண்டுக்கால இடைவெளியில் உளவியல் துறை அறிஞர்களும், மருத்துவர்களும் மனம் குறித்து வெளிப் படுத்திய கருத்துகளும் பின்பற்றிய மருத்துவ முறைகளும் அறிவியலோடு தொடர்பற்றனவாக இருந்தமையால் இத்துறை பற்றிப் பல ஐய வினாக்கள் எழத்தொடங்கின. அறிவியல் சார்ந்ததாக ஒருதுறை கருதப்படவேண்டுமானால், அத்துறை தனக்கெனத் தனித்ததோர் ஆய்வுப் பொருளும், ஆய்வு நெறி முறையும், ஆய்வின் முடிபாகக் கோட்பாடுகளைக் கண்டு பிடிக்கும் இயல்பும் உடையதாக அமைதல் வேண்டும்[44]. உளவியல் துறையின் ஆய்வுப்பொருளான மனம் என்பது அறிவியல் சார்ந்த ஒரு தரவன்று. இயற்பியல்சார் முறைகளால் அளந்தறியப் படுவதாகவும், புறவயப்பட்ட முறைமையினால் சரிபார்க்கக் கூடியதாகவும் உள்ள ஒரு பொருளே அறிவியல் தரவு என்று ஏற்றுக் கொள்ளப்படும்.

மனம் என்பது இத்தகைய அறிவியல் தரவன்று என்பது வெளிப்படை. எனவே அறிவியல் துறைகள் உளப்பகுப்பாய் வியலை ஓர் அறிவியல் துறையாக ஏற்றுக் கொள்ளத் தயங்கின. எனினும் உளவியல் துறையினர் அறிவியல் துறையினரின் இக் கருத்தைப் பற்றிக் கவலைப்படாமல் தம் ஆய்வுகளைச் செய்து வந்தனர். ஆனால் உளவியல் துறையைச் சார்ந்த ஓர் அறிஞரே இத்தகைய ஐய வினாவை எழுப்பியபோது அவர்

---

44. ''The basic requirments of any Science are that its object be defined and that it have a method of observation and analysis appropriate to that object and capable of discovering its laws'' Jan Miel, ''Jacques Lacan and the Structure of the unconscious'' **Structuralism** ed. Jacques Ehrmann (Ny: Anchor Books, 1970) P. 97.

களால் இதனைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. எனவே பாரிஸ் உளப்பகுப்பாய்வுக் கழகம் 1953இல் 'உளப் பகுப்பாய்வியல் அறிவியல் சார்ந்த ஒரு துறையா' என்ற வினாவை எழுப்பிய உறுப்பினர் ஒருவரைத் தம் கழகத்திலிருந்து வெளியேற்றியது. பின்னர் உலக உளப்பகுப்பாய்வியல் கழகம் இவ்வெளியேற்றத்தை உறுதி செய்து இறுதியாக அவரை வெளியேற்றியது. இப்படி வெளியேற்றப்பட்டவர் தான் டாக்டர் ழாக் லக்கான் (Jacques Lacan) என்னும் உளப்பகுப் பாய்வியல் அறிஞர். இவருடன் சேர்ந்து வெளியேறிய பிற அறிஞர்களும் உளவியல் மாணவர்களும் ஒன்று கூடிப் பிரஞ்சு உளவியல் கழகம் என்னும் ஒரு புதிய அமைப்பை ஏற்படுத்திக் கொண்டனர். 1953 இல் ரோம் நகரில் நடை பெற்ற இந்தப் புதிய உளவியல் கழக மாநாட்டில் டாக்டர் லக்கான் படித்த ஆய்வுக் கட்டுரை உளப்பகுப்பாய்வியல் துறையின் கோட் பாட்டுரையாகப் பலராலும் மதிக்கப் பெற்றது. பின்னர் 1956இல் அவர் வெளியிட்ட ''மொழியும் வார்த்தையும்'' என்னும் ஆய்வுக் கட்டுரை ஐரோப்பிய மொழியலார், தத்துவ வாதிகள், மானுட வியலார், இலக்கிய அறிஞர்கள், உளப்பகுப்பாய்வியல் அறிஞர்கள் ஆகியோரின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. இதன் விளைவாக டாக்டர் லக்கானும் அவருடன் பணி யாற்றிய உளவியல் அறிஞர் டாக்டர் லகசேவும் ஐரோப்பிய உளப்பகுப்பாய்வியல் அறிஞர்களுள் மிகவும் குறிப்பிடத் தக்கவர் களாகக் கருதப்படலாயினர்.

பிராய்டின் உளப்பகுப்பாய்வு முறை அறிவியல் சார்ந்ததா என்னும் வினாவை அறிவியலறிஞர்கள் எழுப்பக் காரணம் என்ன என்று டாக்டர் லக்கான் ஆராய்ந்தார். அடிமனத்தின் இயல்பை ஆராய்வதைத் தம் இலக்காகக் கொண்டவர் பிராய்டு. இந்த அடிமனத்தை எவ்வாறு ஆராய்ந்தார்? அடி மனத்தை அணுகுவதற்குரிய 'இராஜ பாட்டை' கனவுகளே என்று பிராய்டு கண்டறிந்தார்.[45] அடிமனத்தை நேரிடையாக

45. (a) ''It is with this work [The Interpretation of Dreams] that the work of Freud begins to open the royal road to the unconscious. And Freud gave us notice of this;...'' —

Jacques Lacan, ''The Insistence of the Letter in the unconscious,'' **The Structuralists: From Marx to Levi Strauss** ed. Richard De George and Fernande De George, (Ny: Anchor books, 1972). P. 304.

(b) Terry Eagleton, P. 157.

ஆராய இயலாமையை உணர்ந்த பிராய்டு கனவுகளின் மூலமாக இதனை ஆராய்ந்தார். எனவே கனவுகள்தாம் இவரது ஆய்வுப் பொருளாக அமைகின்றன. இந்தக் கனவுகளும் அறிவியல் தரவுகளாகா என்பதை அனைவரும் அறிவர். இதனால்தான் பிராய்டின் ஆய்வுப் பொருள் அறிவியல் தரவன்று என்று அறிவியல் அறிஞர்கள் கருதினர் என்பதை உணர்ந்த லக்கான் இதனை மேலும் ஆராய்ந்த விடத்துப் பிராய்டின் ஆய்வுப் பொருள் கனவுகள் அல்ல என்று கண்டறிந்தார்.

பிராய்டு கனவுகளை ஆராய்ந்து விளக்கினார் எனினும், அவர் அவற்றை நேரிடையாக ஆராயவில்லை. தமக்குத் தகவலாளிகளாகப் (informants) பயன்பட்டவர்களின் வாய் மொழி வாயிலாகத் தான் கனவுகளைப் பிராய்டு ஆராய்ந்தார். அதாவது, கனவு என்னும் அடிமன நிகழ்வை நேரடியாக ஆராய இயலாது; எனவே கனவுக்குரியோர் அதனை மொழி வாயிலாகப் பதிவு செய்தனர்; இத்தகைய மொழிப் பதிவைத்தான், அதாவது கனவின் **மொழிவடிவத்தைத்தான்** பிராய்டு ஆராய்ந்தார். கனவை மொழிவாயிலாகத்தான் ஆராய வேண்டும்; ஆராயமுடியும் என்னும் கருத்தைப் பிராய்டு கனவு களின் விளக்கம் என்னும் தம்முடைய நூலின் முதல் இயலின் முதல் வாக்கியத்திலேயே தெளிவுபடுத்துகிறார்.[46]

எனவே பிராய்டின் ஆய்வுப் பொருள் கனவன்று; கனவின் மொழிவடிவமே. தகவலாளிகள் (மனநோயாளிகள்) தாம் கண்ட கனவுகளை மொழியின் வாயிலாக விவரித்துக் கூறும் கூற்றுகளைத்தான் பிராய்டு ஆராய்கிறார்.[47] ஆகவேதான் மொழியின் கூறுகளாகிய உவமை, உருவகம், ஆகுபெயர், விகட மொழிகள், சிலேடைகள், வாய்த் தவறல்கள் போன்றவற்றை ஆராய்வதில் பிராய்டு அதிகக் கவனம் செலுத்துகிறார். இந்த

---

46. ''The first sentence of the opening Chapter announces... that the dream is a rebus. And Freud goes on to stipulate...that it must be understood literally'' — Jacques Lacan, ibid, P. 304.

47. ''All the material available to the analyst [Freud] is verbal. what is analysed in the Psychoanalytic Interview is not the patient's dream, but the patient's report of his dreams'' — Jan Miel, p.98.

மொழிக் கூறுகளின் அமைப்பு (Structure) இவை தொழிற்படும் அல்லது வழங்கும் ஒழுங்கமைவு (system), இவற்றின் பொருள் குறிப்பீட்டு முறைமை (Nature of signification) ஆகியவற்றை மொழியியல் கண்ணோட்டத்தில் பிராய்டு ஆராய்கிறார். அவர் ஆய்வை மேற்கொண்டபோது (1900) சசூரின் இக்கால மொழியியல் கோட்பாடுகள் (1916) வெளி வரவில்லை. எனினும் அமைப்பு மொழியியல் கோட்பாடு களுக்கும் பிராய்டின் மொழியியல் விளக்கங்களுக்கும் இடையே அதிகமான வேறுபாடு காணப்பெறவில்லை.

பிராய்டின் ஆய்வுப் பொருள் கனவுகள் அல்ல; கனவுகளை பற்றிய மொழிவடிவங்களே. எனவே பிராய்டின் ஆய்வுப் பொருள் மொழியின் அமைப்பு விசேடங்கள்தானே தவிரப் பிறிதில்லை. மொழியின் அமைப்பு ஒழுங்கமைவு ஆகியவற்றை ஆராயும் மொழியியல் ஆய்வுகள் அறிவியல் அடிப்படையை உடையன என்பது வெளிப்படை. ஆதலால் பிராய்டின் உளப் பகுப்பாய்வியல் அறிவியல் அடிப்படையில் அமைந்த ஓர் ஆய்வணுகுமுறைதான் என்பதை டாக்டர் லக்கான் தம் ஆய்வுகளின் வழி உலகுக்கு எடுத்துக் காட்டினார். இந்தக் கண்டுபிடிப்பு பிராய்டுக்குப் பின்னர் உளப்பகுப்பாய்வியலுக்கு லக்கான் வழங்கிய மிகச் சிறந்த நன்கொடையாகக் கருதப் படுகிறது.[48]

இவ்வாறு கனவுகளின் மொழி வடிவங்களை, மொழியியல் அமைப்புக் கூறுகளின் அடிப்படையில் பிராய்டு விளக்கிக் காட்டியதன் மூலம், அடிமனத் தொழிற்பாடும் மொழியின் தொழிற்படு நிலையும் பெரும்பாலும் ஒத்திருப்பதைக் கண்ட லக்கான், அடிமனத்தின் அமைப்பும் மொழியின் அமைப்பும்

48. And it is his answar to this question [Is psychoanalys is a science?] that will...be seen ultimately to be the most important contribution of Dr. Jacques Lacan, and perhaps the most important contribution since Freud.— Jan Miel Pp.95-96.

ஒன்றே; அடிமனம் மொழியைப் போன்று செயல்படுகிறது.[49] ஒரு குழந்தையின் வாழ்க்கையில் மனத்தின் தோற்றமும் மொழியின் தோற்றமும் ஒரே காலத்தில் நிகழ்கின்றன; மனமே மொழி, மொழியே மனம் என்னும் முடிவுகளுக்கு வருகிறார். மனம் என்பது தனித்துவம் உடைய ஒரு பொருளன்று. அது ஒரு **மொழிப்பதியம்**. அதாவது வேணவாவின் (தீராத ஆசை) மீது செய்யப்பட்ட மொழிப் பதியமே மனித மனமாகச் செயற்படுகிறது. இக் கருத்தை லக்கான் பல நிலைகளில் வலியுறுத்திக் கூறுகிறார்.[50]

லக்கானைப் பொறுத்தவரை வேணவா, மொழி, மனம், பண்பாடு (Culture) என்பன[51] ஏறக்குறைய ஒரு பொருட்

---

49. (a) "The unconscious is the whole structure of language" — Jacques Lacan. p. 289.

(b) "Dr. Lacan was led inevitably to what is perhaps his most startling conclusion that **the structure of the unconscious is the structure of language.**" Jan Miel, p. 98.

50. (a) Lacan will contend that the self, conscious and unconscious, is a linguistic construction, the imposition of language on desire...' The law of man has been the law of language.' — Art Berman, pp. 185, 186.

(b) ஆசையின் மீது ஏறிய மொழி மனமாகச் செயற்படுகிறது. இரண்டின் இயல்புகளும் இயைந்து ஒன்றாகி மொழி வடிவமாக வெளிப்படுவதனால் மனத்தை 'Linguistic Construction' என்று லக்கான் கூறுகிறார். பொருளமைதி கருதி இத்தொடர் **மொழிப்பதியம்** என்று மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. **பதியம்** என்பது ஒரு தாவர இயல் கலைச் சொல். லக்கானின் கருத்துக்கேற்ற பொருத்தமான வேறு கலைச்சொல் தமிழில் தோன்றும் வரை இதனைப் பயன் படுத்தலாம்.

51. Nature, Society, and Culture, the last term of which could well be equated to language or that which essentially distinguishes human society from natural societies. Lacan "The Insistence of the Letter in the unconscious" **Ibid** P. 290.

பன்மொழிகள். பிராய்டைப் பின்பற்றி இக்கோட்பாடுகளை லக்கான் கண்டறிகிறார் என்பது உண்மையே. ''மீண்டும் பிராய்டின் பாதையில்'' (Back to Freud) என்னும் ஆய்வியக்கத்தை லக்கான் தோற்றுவித்துச் செயற்படுத்தியமையால் இதனை உணரலாம். வெறும் உளவியலோடு, இயல்பூக்கங்களோடு மட்டுமே தொடர்புடையனவாக இவ் இருவரின் கோட்பாடுகளைக் கொள்ளலாகாது. மனித மனத்தின், குறிப்பாக அடிமனத்தின் இயற்கையைக் கண்டறிவதில் இவர்கள் பெற்ற வெற்றி மானுடச் சமுதாயத்தின் பல்வேறு துறைகளைப் பாதித்து[52] அவற்றைச் செப்பஞ் செய்தது; மேலும் தம் ஆய்வில் முன்னேறிச் செல்ல வழிவகுத்தது எனின் அது மிகையாகாது.

பிராய்டைப் பின்பற்றியே லக்கான் தம் உளப்பகுப்பாய்வினைச் செய்தார். எனினும். ஆய்வுக்கோட்பாடுகளின் அடிப்படையில் நோக்கும்போது, பிராய்டு அமைப்பியல் கோட்பாட்டாளராகவும், லக்கான் மீயமைப்பியல் கோட்பாட்டாளராகவும் காணப்படுகிறார். அடிமனத்தின் செயற்பாடு மொழியின் செயற்பாட்டைப் போன்றது என்று பிராய்டு கண்டறிந்தார். லக்கானோ மனம் என்பது ஒரு பொருளன்று; நித்தியமானதுமன்று; அநித்தியமானதுமன்று; மொழியால்[53] இயக்கப்படும் வேணவாதான் மனம் என்று கண்டறிந்து கூறுகிறார். அறிமனம், அடிமனம் என்னும் அமைப்புகளைக்கண்டு, அறிமனம் சமுதாயத்தால் உருவாக்கப்படுவது என்றும் மொழிக்கூறு இப்பகுதிக்கு உரியது என்றும், அடிமனம் தன்னை வெளிப்படுத்த இந்த அறிமனப் பகுதியைப் பயன்படுத்துகிறது என்றும் பிராய்டு கருதினார். இக்கோட்பாடு அமைப்பியல் வாதத்திற்கு உட்பட்டது. எனவே பிராய்டு அமைப்பியல் வாதியாகக் கருதபடுகிறார்.

---

52. [Althusser shows] the relevance of Lacanian theory to issues beyond the consulting room... that such a body of work has deep-seated implications for several beyond pshchoanalysis itself. Terry Eagleton, P. 173.
53. **In Four Fundamental Concepts of Psycho-Analysis,** Lacan rejects ''the soul, either mortal or immortal which has been with us for so long and all other', ''such simplified notions'' — Art Berman, Pp.191—192.

பிற அமைப்பியல் வாதிகளும் மொழியை ஒரு சமுதாயக் கூறாக, சமுதாயப் படைப்பாகக் கருதினர். அமைப்பு மொழியியல் மொழியை ஒரு கருவியாகக் கண்டது. அனுபவ வழித் தத்துவக் கோட்பாட்டிற்கு (empiricism) உட்பட்ட மொழியியலாரும், புதுத் திறனாய்வாளர்களும் மனத்தைக் கருத்துப் பெட்டகமாகவும், மொழியை அதனை வெளிப் படுத்தும் கருவியாகவும் கருதினர். சமூகவியலாரும் சமுதா யத்தின் அடியமைப்பு, மேலமைப்பு என்னும் இருவகை நிலைகளில் கலை இலக்கியமும் மொழியும் மேலமைப்புக்கு உரியன என்னும் கொள்கையுடையவர்களாகக் காணப்படு கின்றனர்.

மீயமைப்பியல் கோட்பாட்டாளர்கள், முன்னைய அமைப் பியல் கோட்பாட்டாளர்களைப் போலவே தம்முள் கருத்து வேறுபாடுகள் பலவற்றை உடையோராயினும், மனம், மொழி என்னும் இரண்டினைப் பற்றிய கருத்துகளில் ஏறக்குறைய ஒரே நோக்குடைவர்களாகக் காணப்படுகின்றனர். மைக்கேல் ஃபூகோ, தெரிதா, அல்தசர் போன்ற மீயமைப்பியல்வாதிகள் மனம் பற்றி லக்கான் கூறிய கருத்துகளுடன் ஒன்றுபட்டு நிற்கின்றனர். மொழியின் குறிப்பீட்டு முறைமை (Signification) குறைபாடுடையது; ஊசற்பொருண்மை (free play) யுடையது; குறிப்பானுக்கும் குறிபடுபொருளுக்கும் இடையிலான தொடர்பு நிலையானதன்று என்னும் தெரிதாவின் மொழிக்கோட்பாடு லக்கானின் கோட்பாட்டினை அடியொற்றி நிற்கக் காணலாம். இதுபோன்றே உலகத்தில் மனிதனின் நிலை (Man's Order) பற்றிய ஃபூகோவின் கோட்பாடும் **அடிமனம்** என்பது ஒரு மனிதனுக்கு உள்ளே நிலையாக (வேறுபாடின்றி) இருக்கும் ஒரு பொருளன்று; மாறாக ஒருவன் பிறருடன் கொள்ளா நிற்கும் உறவு முறையின் விளைவாக அமைவது; எனவே உள்ளும் புறமுமாக நிற்கும் ஊசலாட்டத்தன்மையது என்று அடிமனத் திற்கும் சமுதாயத்திற்கும் இடையிலான உறவை விளக்கும் அல்தசரின் கோட்பாடும் லக்கானின் கேட்பாட்டை அடியொற்றி நிற்பவைதாம்.[54]

54. The unconscious is not some kind of seething tumultuous private region 'inside' us but an effect of our relations with one another. The unconcsious is 'Outside' rather than 'within' us— Terry Eagleton, P. 173.

தொடக்க காலச் சமூகவியலாளர் மொழியைச் சமுதாயத்தின் மேலமைப்புக்கு உரியதாகக் கருதினர். எனவே சமுதாய ஒழுகலாறுகளுக்கு அடியூற்றாக விளங்கும் வாழ்வியற் பார்வைக்கேற்ப மேலமைப்புக் கூறுகளும் மாறுதலுக்கு உட்படுத்தப்பெற வேண்டும் என்று கருதுவர்.[55] மொழி மேலமைப்புக்குஉரியதாதலின் உடன்காலத்தேவைக்கேற்ப அதனை மாற்றி அமைக்க வேண்டும்; ஒரு புதிய மொழியை (an esperanto) உருவாக்கவேண்டும் என்பது அவர்களுடைய கோட்பாடு. இதற்கேற்பக் கம்யூனிச சமுதாயத்திற்கு ஏற்றவாறு ஒரு மொழியை உருவாக்குவதைப் பற்றி முடிவெடுக்க ஒரு சிந்தனைக்கூட்டம் நடைபெற்றது. ஸ்டாலினின் சமுதாயத் தத்துவங்களுக்கேற்ப ஒழுகவேண்டிய கடப்பாடுடைய அறிஞர் பலரும் அந்த ஆலோசனைக் கூட்டத்தில் பங்கேற்றிருந்தனர். மொழி மேலமைப்புக் கூறுகளுள் ஒன்றன்று' என்னும் தம் முடிவைக் கூறி ஸ்டாலின் அக்கூட்டத்தைக் கலைத்து விட்டார். அறிஞர்கள் நிம்மதிப் பெருமூச்செறிந்தனர் என்று கூறப்படுகிறது.[56]

ஸ்டாலினின் இந்தக் கருத்தை லக்கான் ஏற்றுக் கொள்கிறாரா இல்லையா என்பது பற்றித் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. ஆனால் அப்படி ஒரு செயற்கை மொழி உருவாக்கப் படுமானால் சோசலிச சமுதாயத்தில் இயங்கும் அம்மொழியின் இலக்கியப் படைப்பை வடிவவியல் பார்வையில் ஏதேனும் ஒரு வகையில் கூட ஆராய இயலாமற்போகும் என்று மட்டும் தெளிவுபடுத்துகிறார்.[57]

---

55. In orthodox marxism language is customarily identified as part of the superstructure, basically ideological. The work of Lacan demonstrates, on the contrary, that the constitution of the subject is itself language. —Art Berman, p. 193.
56. We may recall that the discussion of the necessity for e new language in the cummunist society did in fact take place and Stalin, much to the relief of those depending on his philosophy, cut off the discussion with the decision : language is not a superstructure. — Lacan. p. 290. n. 5.
57. An esperanto in which the relations of language to socialist parties would have rendered any literary formalism radically impossible.
— Lacan, p. 290

ஏறக்குறைய மீயமைப்பியல் கோட்பாட்டுக்கு உரியதும், துறையறிஞர்களால் ஆழமாக ஆராய்ந்த பின்னரே வெளியிடப்படுவதற்கு உரியதுமான ஒரு செய்தியை — அதாவது, மொழி அடியமைப்போடு தொடர்புடையது; எனவே மேலமைப்புக் கூறன்று என்னும் ஆய்வுச் செய்தியை — ஒரு கம்யூனிச அரசியல்வாதி, அமைப்பியல்வாதக் கருத்துகள் மேலோங்கி நின்ற காலத்தே வாழ்ந்த ஓர் அரசியல்வாதி தம் முடிபாக வெளியிட்டு அதன் தொடர்பான ஆலோசனைகளுக்கு முற்றுப்புள்ளியிட்டார் என்பது இவ்விடத்து நாம் சிந்திப்பதற்கும் நினைவு கூர்வதற்கும் உரிய செய்தியாகும். லக்கானின் கோட்பாடு அறிஞரிடையே பரவுவதற்குப் பல ஆண்டுகள் முன்னரேயே ஸ்டாலின் இக்கருத்தை வெளியிட்டுள்ளார் என்பதும் சிந்தித்தற்குரியது.

## இலக்கிய ஆய்வுகள்

வேணவாவை உள்ளீடாக உடைய மொழி உலகத்துப் பொருண்மையை (Reality) ஒருபோதும் நேரடியாக உணர்த்தாது என்பது லக்கானின் கொள்கை. குழந்தையின் ஈடிபஸ் வேணவா மொழியோடு தொடர்பு கொள்ளுமிடத்து அதாவது குழந்தை மொழிபேசத் தொடங்குமிடத்துச் சமுதாயக் கட்டுப்பாட்டால் (Law of man—phallocentricism) தடை செய்யப்படுகிறது. எனினும் ஐம்புல நுகர்ச்சி உடைய உடலோடு தொடர்புடையதாகலின் இவ் வேணவா அழிவதில்லை. இதனை 'ஆரா இயற்கை அவா' எனலாம். எனவே இது வெளிப்படுமிடத்துத் தன்னை மற்றொன்றாக மாற்றிக்காட்டுகிறது. வேணவாவும் மொழியும் ஒன்றாதலின் மொழியும் எப்போதும் பொருளைச் சுட்டுவதில்லை. தன்னையே சுட்டுவதாகத்தான் மொழி அமைகிறது.[58] மொழி இத்தகைய சுழற்சித் தன்மை உடையது என்னும் தெரிதாவின் கருத்தை

---

58. Since the signified cannot be described, discussed or explained without resorting to more language, no signification can be sustained other than by reference to another signification''. There is an ''incessant sliding of the signified under the signifier''. The signified is for ever evasive. What language refers to is itself. — Lacan, **Ecrits** pp. 150, 154, quoted in **Art Berman**, p.187.

முன்னரே கண்டோம். இந்த உளப்பகுப்பாய்வியல் கருத்தை உட்கொண்டு பல இலக்கிய ஆய்வுகள் நடைபெற்றுள்ளன.

லக்கான் ஓர் இலக்கியத்திறனாய்வாளர் அல்லர். எனினும் மொழிகுறித்து அவர் கண்டறிந்த கோட்பாட்டை விளக்குவதற் காக லக்கான் சில இலக்கிய ஆய்வுகளைச் செய்துள்ளார். காட்டாக, எட்கர் ஆலன் போவின், 'களவாடிய கடிதம்' என்னும் சிறுகதையைப் பற்றிய லக்கானின் திறனாய்வைக் குறிப்பிடலாம்.

இக்கதையின் மையப் பொருளாகிய ஒரு கடிதம் அது தாங்கி நிற்கும் மறைபொருளைத் தெரிந்து கொள்வதற்காக இருவேறு குழுவினரால் இரண்டு முறை களவாடப் படுகிறது. எனினும் எந்தக் குழுவும் களவாடியதும் அதைப் பிரித்துப் படிப்பதில்லை. அடுத்தவர் அறியாவண்ணம் அதனை ஒளித்து வைப்பதுமில்லை. எல்லோரும் பார்க்கக் கூடிய இடத்தில் மாற்றி மாற்றி வைக்கப்படுகிறது. கதை முடிவில் கடிதம் கைமாறுகிறதே தவிர, கடிதத்தின் உட்பொருள் இன்ன தென்று அதனைக் களவாடியவர் எவரும் அறிந்திலர். இக் கதையில் வரும் கடிதம் ஒரு குறிப்பான் (signifier); அதனுள் அடங்கியிருக்கும் செய்தி ஒரு குறிபடுபொருள் (signified) இதில் குறிப்பான் கைகள் பல மாறினாலும் தன் குறிபடு பொருளைச் சுட்டுவதே இல்லை. மனிதனின் மொழியும் இவ்வாறு தான் செயல்படுகிறது என்று லக்கான்காட்டுகிறார். ''களவாடியகடிதம்'' என்னும் இக்கதை லக்கானின் மொழிக் கோட்பாட்டை விளக்கும் ஒரு கதையுருவகமாகக் (allegory) கருதப்படுகிறது.

லக்கானின் கோட்பாட்டை அடியொற்றிப் பல வகை யான இலக்கிய ஆய்வுகளை மேற்கொள்ளலாம். முதலாவதாக இலக்கிய வகைமைகளின் அடிப்படையில் தன்னுணர்ச்சிக் கவிஞனுக்கும் பிறவகைப் படைப்பாளிக்கும் இடையில் உள்ள வேறுபாடுகளை ஆராயலாம். அதாவது இந்த இருவகைக் கவிஞர்களும் தம்மை எவ்வாறு வெளிப்படுத்திக்கொள்கின்றனர் என்று ஆராயலாம். தன்னுணர்ச்சிக் கவிஞன் தன்னைக் குறிப் பிடப் பயன்படுத்தும் 'நான்' என்னும் குறிப்பானுக்கும் ஒரு கதாசிரியன் அல்லது காப்பியப் புலவன் பயன்படுத்தும் 'நான்' என்னும் குறிப்பானுக்கும் இடையிலான வேறுபாடுகளை ஆராயலாம். இந்த இருவகைப் படைப்பாளிகளின் மனங் களும் ஒரே தன்மையில் வெளிப்படுகின்றனவா?

மொழி ஒருபோதும் பொருளை நேராகச்சுட்டுவதில்லை என்னும் கருத்தை மேற்கொண்டால் இந்த இருவகை 'நான்'களும் எவ்வாறு வேறுபடுகின்றன என்று ஆராயலாம்.[59] இத்தகைய் ஆய்வினை வெறும் இலக்கியப் பயிற்சி மட்டுமே உடையார் மேற்கொள்ளுதல் மிகவும் அருமைப்பாடு உடையது என்பது வெளிப்படை.

அடுத்ததாக, எந்த ஒரு கூற்றும் (text) கேட்போரை அதாவது ஒரு வாசகனை முன்னிட்டு வெளிப்படுகிறது. எனவே கூற்று நிகழ்த்துவோனுக்கு வாசகன் இன்றியமையாத களனாகின்றான். அதாவது, தனிமனித மனம் சமுதாயத்தின் (பிற மனங்களின்) பங்கேற்பின்றித் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில்லை. இதற்கேற்பத் தனிமனித மனம் தான் கருது வதை நேரே குறிக்காமல் பிறிதொன்றன் மேலிட்டுக் குறிக்கும் இயல்புடையது. குறிக்கக் கருதியதற்கும் குறித்ததற்கும் இடையிலான இடைவெளியில் மறைந்தது என்ன? மறைத்தது என்ன? என்னும் வினாக்களுக்கு விடைகாண வேண்டும். இதன் அடிப்படையில் ஒரு படைப்பில் கூறப்பட்டது என்ன, கூறாமல் ஒடுக்கப்பட்டது அல்லது தவிர்க்கப்பட்டது என்ன என்று ஆராய லாம். காட்டாக, இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் கூறியது என்ன? கூறாது விட்டது என்ன? அல்லது எதைக் கூறுவதற்குப் பதிலாக எதனைக் கூறுகிறார்? ஏன்? போன்ற வினாக்களை முன்வைத்துச் சிலப்பதிகாரப் பொருண்மையினையும் கட்டுக் கோப்பையும் ஆராயலாம். இத்தகைய ஆய்வும் அருமைப்பாடு உடையதுதான். எனினும் முந்தையதினும் இது சற்று எளிமை யானது. சமுதாயவியல் உண்மைகள், வரலாற்றிடையில் மறைந்துபோன வழக்காற்றுச் செய்திகள், கண்ணகி கதையின்

---

59. உதாரணமாக, ''நான் நாளை டில்லி புறப்படு கிறேன்'' என்னும் வாக்கியத்தில் உள்ள 'நான்' என்னும் சொல்லும், இக் கூற்றுக்கு அடிப்படையான மனத்தைக் குறிக்கும் 'நான்' என்னும் சொல்லும், ஒன்றல்ல என்பது வெளிப்படை. முதல் 'நான்' இக் கருத்தை வெளிப்படுத்துபவன் (narrator); இரண் டாவது 'நான்' இக்கருத்துக்கு உரியவன் (author). மொழியின் தடுமாறு இயற்கையால் இந்த இருவகை 'நான்'களும் வெவ்வேறு பொருள்களைச் சுட்டு கின்றன.

மெய்ம்மையான வரலாறு போன்றவை வெளிப்பட வெளிப்பட வாசகனை உள்ளிட்ட இத்தகைய ஆய்வுகள் எளிமையாகலாம்.[60] இக்காலப் படைப்புகளை இத்தகைய வாசகர் நோக்கில் ஆராய்வதில் இடர்ப்பாடுகள் தோன்ற வழியில்லை.

இனி மொழி குறித்து லக்கான் கண்டறிந்து கூறிய கோட்பாடுகளின் அடிப்படையிலும் இலக்கிய ஆய்வுகளை மேற்கொள்ளலாம். மீயமைப்பியல்வாதக் கருத்தின்படி மனம் மொழியாகச் செயல்படுகிறது. அடிமனத்தின் தொழிற்பாடும் மொழியின் தொழிற்படு நிலையும் ஒரே தன்மையின என்று முன்னர்க் கண்டோம். அடிமனம் உருவகம், உவமை, ஆகு பெயர் போன்ற உத்திகளாக வெளிப்படுகிறது. எனவே கவிதை மொழியும் அடிமனத் தொழிற்பாடும் ஒரே தன்மையின என்று பிராய்டு கருதினார். அவரைப் பின்பற்றிய லக்கான் மீயமைப்பியல்வாத நிலையினராதலின், மொழியெல்லாம் இலக்கிய மொழியே; சாதாரண மொழி, இலக்கியமொழி என்னும் வேறுபாடுகள் பொருளற்றன என்னும் கருத்தை வெளிப்படுத்தினார். இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் பரவலான பல ஆய்வுகளை இலக்கிய உலகில் மேற்கொள்ளலாம். கிளைமொழி, இழிசனர் மொழி, பாமரர் மொழி, கவிதை மொழி, செம்மொழி போன்ற பாகுபாடுகளின் வன்மை மென்மைகளை இந்த நோக்கில் அணுகிப் பார்க்கலாம். நாட்டுப்புற இலக்கியங்களை இந்தக் கோணத்தில் ஆராயலாம். நாடகம், நாவல், சிறுகதை போன்ற படைப்புகளில் பாத்திரங்களுக்கேற்ப அமைக்கப்படும் உரையாடல்களின் மொழிவேறுபாடுகளை ஆராயலாம்.

அடிமனமே மொழியாயின், மொழின் இயற்கையே கவிதை நடையாயின், ஒரு படைப்பு நிகழ்வதற்குக் காரணமான அடிமனத்தின் இயற்கையை அப்படைப்பினைக் கொண்டு ஆராயலாம். இத்தகைய, சில ஆய்வுகள் புதுத்திறனாய்வுக் காலம் முதற்கொண்டே வெளிவந்திருப்பினும் அவை மீயமைப்

---

60. இங்கே பதிகச் செய்திகள் ஓரளவு பயன்படலாம், அதனை இயற்றியவர் அடிகளே ஆயினும் பிறரே ஆயினும் அதனால் வேறுபாடு விளையாது. ஏனெனில் காப்பியம் இயற்றிய பின்னரே பதிகம் இயற்றப் பட்டதாகையால் அடிகளும் ஒரு வாசகனாக இருந்து அதனை இயற்றினார் என்றுதான் கொள்ளுதல் வேண்டும்.

பியல் கருத்துகளோடு ஒத்தவை அல்ல. அவையெல்லாம் அனுபவவழித் தத்துவத்தின் அடிப்படையில் மனம் வேறு, மொழி வேறு என்று கருதிப் பெரும்பான்மையும் உள்ளடக்தினை ஆராயும் போக்குடையவை. உள்ளடக்கம் வேறு உருவ அமைப்பு வேறு என்னும் கொள்கையை உளப்பகுப் பாய்வியல் திறனாய்வு ஏற்றுக் கொள்வதில்லை, இரண்டுமே ஒரே தன்மையின, ஒன்றாக உருவாவன என்று கொண்டு அதன் அடிப்படையில் படைப்புகளை ஆராய்வதில் உளப்பகுப் பாய்வுத் திறனாய்வு ஆர்வம் காட்டுகிறது.

இலக்கியப் பயிற்சியில் ஈடுபாடுடைய உளவியல் அறிஞர் களும், உளவியல் கோட்பாடுகளில் ஆர்வமும் பயிற்சியும் உடைய இலக்கிய அறிஞர்களும் மிகும்போது இத்தகைய ஆய்வுகள் பெருகுவதற்கு வாய்ப்பு ஏற்படும். மேலை நாடு களில் உளப்பகுப்பாய்வியல் திறனாய்வாளர்களாக உள்ளோரில் பெரும்பான்மையினர் உளவியல் அறிஞர்களாகவும், சிறு பான்மையினர் உளவியல் பயின்ற இலக்கிய வாணர்களாகவும் உள்ளனர். நம்நாட்டுக் கல்வி, இலக்கியச் சூழலில் இத்தகைய நிலை இன்னும் வளரவில்லை. தமிழ்ப் பேராசிரியர்கள் சிலர் முயன்று உளவியல் பயிற்சியும் கோட்பாட்டுப் பயிற்சியும் பெற்றுப் பல கட்டுரைகளையும் நூல்களையும் எழுதி வரு கின்றனர். இம்முயற்சிகள் இன்னும் பரவலாகவும் ஆழமாகவும் மேற்கொள்ளப் பெறுமானால் தமிழாராய்ச்சி உலகில் உளப்பகுப்பாய்வியல் திறனாய்வு மேலும் செழித்து வளர வாய்ப்பு ஏற்படும் என்று நம்பலாம்.



# முடிவுரை

அறிமுகவுரையில் குறிப்பிட்டதுபோல் இதுவரை இருபதாம் நூற்றாண்டில் தோன்றி வழங்கா நிற்கும் மூவகை இலக்கியக் கோட்பாட்டுக் குரல்களைக் கேட்டோம். புதுத் திறனாய்வுக் கோட்பாடும், அமைப்பியல்வாதக் கோட்பாடும், மீயமைப்பியல் வாதக் கோட்பாடும் முறையே ஒன்றையொன்று தொடர்ந்து எழுந்து வந்துள்ளன. இந்த நூற்றாண்டு முடியும் தருவாயில் வாழும் நமக்கு இந்த மூவகைக் கோட்பாடுகளும் நடைமுறையில் இருப்பனவாகவே தோன்றுகின்றன. ஓரிடத்தில், ஒரு நாட்டி லேயே இம் மூன்றும் வழக்கில் இல்லையெனினும், ஒவ்வொரு கோட்பாட்டுக் குரலும் ஏதோ ஓர் அரங்கில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கக் காண்கிறோம்.

வளர்ந்து நிற்கின்ற நாடுகளாகிய ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் புதுத்திறனாய்வின் குரல் தேய்ந்தும், அமைப் பியல் வாதக் குரல் சற்று அடங்கியும், மீயமைப்பியல் வாதக் குரல் ஓங்கியும் ஒலிக்கக் கேட்கிறோம். வளர்ந்துவரும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் புதுத் திறனாய்வுக் குரல் இன்னும் உரக்க ஒலித்துக் கொண்டிருக்கிறது. அமைப்பியல்வாதக் குரலும் ஏறுமுக வளர்ச்சி பெற்று ஒலிக்கக் காண்கிறோம். மீயமைப்பியல் வாதக் கோட்பாட்டுக் குரல்கள் கீழ்வானத்தே தோற்றம் பெற்றுத் தம் வளர்ச்சியை நம்பிக்கையோடு ஒலிக்கத் தொடங்கி யுள்ளன. அறிவியல், பொருளாதாரம், போக்குவரத்து போன்ற துறைகளின் வளர்ச்சியால் இவை இவ்வாறு முன்னும் பின்னுமாக வளர்ந்து இலக்கியக் கோட்பாட்டுலகில் வலம் வருகின்றன.

வரலாற்றடைவில் வளர்ந்துள்ள இந்த மூன்று இன்றியமை யாத கோட்பாடுகளைத் தொகுத்துக் காணுமிடத்து **மனித மனம், மொழி, இலக்கியப் பயன்** என்னும் மூன்று பொருள் களைப் பற்றிப் பல்வேறு அறிஞர்களிடையே தோன்றிய கருத்து வேறுபாடுகளே இலக்கியக் கோட்பாடுகள் இவ்வாறு பல்கிப் பெருகக் காரணமாயின என்று உணர்கிறோம். மேலும் மானுட அறிவுத் துறைகள் பலவாகப் பெருகி வளர்ந்தமையும், தனித்

துறை ஆய்வுகள் சுருங்கிப் பல்துறை-பன்முக ஆய்வுகள் வளர்ந்தமையும் இலக்கியக் கோட்பாடுகள் செறிவடைந்து சிக்கலுறக் காரணமாயின என்றும் உணர்கிறோம்.

இக்கோட்பாடுகளை அடியொற்றி நிகழ்த்தப்பட்டுள்ள, நிகழ்த்தப்பட்டுவரும் இலக்கிய ஆய்வுகளை நோக்கினால் கீழ் வரும் செய்திகள் புலனாகின்றன :

> புதுத்திறனாய்வுக் கோட்பாடுகள் படைப்புகளை நேரடியாக அணுகுவதில் ஆர்வமுடையன. இத்தகைய ஆய்வுகள் இலக்கியப் படைப்புகளை முருகியல் நோக்கில் அணுகி வாசகர்களுக்குப் படைப்புகள் பற்றிய நேரடி விளக்கங்களைத் தருகின்றன. அதாவது, புதுத்திறனாய்வாளன் வாசகரைப் படைப்புக்கு நேரே அழைத்துச் சென்று அதன் சிறப்புகளை விளக்குகிறான், அல்லது அதன் சிறப்பின்மைகளை எடுத்துக்காட்டுகிறான்.
>
> அமைப்பியல் கோட்பாடுகளின் அடிப்படையில் செய்யப்பெற்றுள்ள ஆய்வுகள் சமுதாயத்தின் வெளிப்பாடுகளாகிய பல்வேறு கலைகளில் ஒன்றாக இலக்கியத்தைக் கருதுவதால், இலக்கியத்திற்கும் பிற கலைகளுக்கும் உள்ள உயிரியத் தொடர்புகளை ஆராய்வதில் ஆர்வம் காட்டுகின்றன. ஓர் இலக்கியத்தின் உருவ, உள்ளடக்கச் சிறப்புகளைப் பிற கலை, இலக்கியங்களோடு தொடர்புபடுத்தி ஆராய்கின்றன. எனவே இலக்கிய ஒப்பாய்வின் எல்லைக்குள் இத்தகைய ஆய்வுகள் நுழைகின்றன. பிற துறைகளோடும் கலைகளோடும் தொடர்புறுத்தி ஆராயப் பெற்றாலும் இலக்கியம், இலக்கியம் அல்லாதன என்னும் எல்லைகள் அமைப்பியல்வாத ஆய்வுகளில் மறைவதில்லை. இலக்கியம் பிற துறைகளால் விளக்கம் பெறுவதும், பிற துறைகள் இலக்கியத்தால் விளக்கம் பெறுவதும் இத்தகைய ஆய்வுகளால் விளையும் பயன்களாகக் காணப்படுகின்றன.
>
> மீயமைப்பியல் கோட்பாடுகளின் அடிப்படையில் செய்யப்பெற்றுள்ள இலக்கிய ஆய்வுகள் மிகச் சிலவே. ஆயினும் இந்த ஆய்வுகளைக் காணுமிடத்து இலக்கியப் படைப்புகள் அல்லது இலக்கியம் என்னும் துறை பெறுமிடம் மிக மிகக் குறைவென்று கூறலாம். அதாவது, அறிவுத் துறையின் எல்லைகள் இல்லையாகி எல்லாத் துறைகளும் ஒரே துறையின் என்னும் கருத்தீட்டுக்கு உட்பட்ட இந்த

ஆய்வுகளில் கோட்பாடுகளை விளக்க இலக்கியங்கள் உதார ணங்களாகப் பயன்படுகின்றன. அவ்வளவே. அறிவுத் துறை கள் எல்லாவற்றிலும் அல்லது பலவற்றில் பயிற்சியுடை யார்க்கு இந்த ஆய்வுகள் பயன்படுமளவிற்கு இலக்கியத் துறையில் மட்டும் பயிற்சியுடையார்க்கு இவை பயன்படுமா என்பது ஐயமே.

தத்துவ அடிப்படையிலும் கோட்பாட்டின் அடிப்படை யிலும் ஏனைய இரண்டினைவிட மீயமைப்பியல் மிக மிக ஆழமும் அகலமும் உடையது என்பதில் ஐயமில்லை. மானுட இருப்புக்கு அடிப்படையாக நிற்கும் பொருள்களை (உள்ளம், உடல், மொழி, உலகம் போன்றன) உள்ளவாறு உணர்ந்து உணர்த்துவதில் மீயமைப்பியல்வாதிகள் மிக முன் னணியில் நிற்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால் இலக்கிய ஆய்வுப் பயன் என்னும் ஒரு குறிப்பிட்ட நோக்கில் காணுமிடத்துப் புதுத்திறனாய்வில் படைப்பு தலைமையிடம் பெற, அமைப்பியல் திறனாய்வில் படைப்பு பிற துறை களோடு சமமான இடத்தைப் பெற. மீயமைப்பியல் திற னாய்வில் இலக்கியமும் ஆராயப் பெறுகிறது என்னும் அளவே இடம் பெறுகிறது.

**மனம், மொழி, இலக்கியப் பயன்** என்னும் முப்பொருள் பற்றி மரபுவழித் திறனாய்வு வெளிப்படுத்திய செய்திகள் பெரும்பான்மையும் புதுத்திறனாய்விலும் இடம் பெறு கின்றன. இன்றியமையாமை வரிசையில் (hierarchy of essentiality) முன் பின்னாக மாறி நிற்பினும் அமைப்பியல் திறனாய்வில் இவை சிற்சில மாற்றங்களுடன் தொடர்ந்து வருகின்றன. மீயமைப்பியல் எல்லையைத் தொட்டதும் இவை பெரும்பான்மையும் இல்லையாகின்றன, அதாவது இதற்கு முன்னர் இப்பொருள்கள் பெற்று நின்ற ஆய்வு முடிவுகள் எல்லாம் அல்லது பல மறுக்கப்படுகின்றன, அல்லது பிறழ்ச்சிக் கருத்துகள் என்று இகழ்ந்து ஒதுக்கப் படுகின்றன,

இலக்கியக் கோட்பாடுகள் இவ்வாறு பல்துறை-பன்முகப் பார்வைகளின் காரணமாக ஆழமும் அகலமும் பெற்றுத் தாம் வழங்கும் நாடுகளின் அரசியல், அறிவியல், சமுதாயம் மற்றும் கலை இலக்கியப் பண்பாடுகளின் காரணமாகப் பல்வேறு பரிமா ணங்களைப் பெறலாயின. இவற்றையெல்லாம் உட்கொண்டு

இச் சிறிய சொற்பொழிவில் தொகுத்துக் கூறுவதென்பது மிகவும் கடினமான செயல். ஆய்வுப் பொருளின் பரப்பும் ஆழமும் ஒரு புறம் மருட்டவும், சொற்பொழிவாளனின் அறிவுச் சுருக்கமும் கால நெருக்கடியும் ஒருபுறம் பின்னுக்கு இழுக்கவும் நேர்ந்த சூழலில் இச்சிறிய பணி ஒருவாறு நிறைவேற்றப்பட்டுள்ளது.

தொகுத்துக் கூறவேண்டிய கட்டாயத்தின் காரணமாகச் சில கோட்பாடுகள் கூர்மை மழுங்கிய நிலையில் விளக்கப்பட்டுள்ளன. காலமும் இடமும் சுருங்கும் போது இத்தகைய மழுங்கல்களும் தெளிவுக் குறைபாடும் தவிர்க்க இயலாதன வாகிவிட்டன.

பல்துறை அறிவும், பரந்துபட்ட அனுபவமும், தேவையான கால அவகாசமும், நெருக்கடியில்லாத சூழலும் அமையத்தக்க நல்ல வாய்ப்பினைப் பெறும் எதிர்காலத் தமிழாய்வுப் பெருமக்கள் இக்குறைகள் அணுகாதவாறு இம் முயற்சியில் ஈடுபட்டு இத்துறையை மேலும் வளப்படுத்துவார்கள் என்று நம்புகிறேன்.



# கலைச்சொல் அகராதி

இந்த நூலை உருவாக்குவதில் தமிழல்லாத பிறமொழிக் கருத்துகள் ஏராளமாகப் பயன்பட்டுள்ளமை தெளிவு. அந் நிலையில் ஒரு நூற்றாண்டு காலமாக வழங்கி வரும் பிறமொழிச் சொற்களைக் குறிப்பாகக் கலைச் சொற்களைத் தமிழ்ப்படுத்து வதில் பல சிக்கல்கள் நேர்ந்தன. தமிழில் இதுவரை இப்பொருள் பற்றி முழுநூலாக எதுவும் வெளிவந்ததாகத் தெரியவில்லை. எனினும் இலக்கியக் கோட்பாடுகள் மற்றும் திறனாய்வுகள் தொடர்பாக வெளிவந்துள்ள பிறமொழிக் கட்டுரைகளையும் நூல்களையும் தழுவித் தமிழில் சில கட்டுரைகளும் நூல்களும் வெளிவந்துள்ளன. இத்தகைய கட்டுரைகளிலும் நூல்களிலும் தமிழாக்கம் பெற்றுள்ள கலைச் சொற்களில் பொருத்த முடையன என்று கருதியவற்றை அவ்வாறே இந்நூல் பயன் படுத்திக் கொண்டுள்ளது.

இவை தவிர்ந்த பெரும்பாலான கலைச் சொற்கள் மொழி பெயர்ப்பாகவும், மொழியாக்கமாகவும், சில இடங்களில் கருத் தாடற் பொருளை அடிப்படையாகக் கொண்டு கருத்துப் பெயர்ப்பாகவும் தமிழில் தரப்பட்டுள்ளன. இத்தகைய தமிழாக் கத்தில் **கருத்தமைதியே** ((fidelity to the original sense) முக்கிய காரணியாகக் கொள்ளப்பட்டுள்ளது. புதியவை யாதலின் இவற்றுள் சில கலைச் சொற்கள் செயற்கையாகத் தோன்றலாம். வழங்க வழங்க நாளடைவில் செயற்கைத் தன்மை மறைந்து இயல்பானவையாக இவை வழங்கப்படலாம். அல்லது இவற்றைவிடப் பொருத்தமான கலைச் சொற்கள் தமிழில் தோன்றுமிடத்து இத்தகைய கலைச் சொற்கள் சில வழக்கு வீழலாம். அப்படி வீழ்வதும் மொழியின் இயற்கை தான். அதுவரை இவற்றைப் பயன்படுத்துவதில் தவறில்லை அல்லவா?

| | | |
|---|---|---|
| absolute origin | — | தனிமூலம் |
| affetcive fallacy | — | பாதிப்பு மாயை |
| allegory | — | கதையுருவகம் |
| anthropology | — | மானுடவியல் |
| arbitrariness | — | இடுகுறித்தன்மை |
| art for art's sake | — | கலை கலைக்காகவே |
| autonomous | — | தன்னியலானது |
| basic structure | — | அடியமைப்பு |
| binary opposition | — | இரட்டை எதிர்மை |
| catalytic agent | — | செயலூக்கி |
| chronotype | — | வினை நிகழ்ச்சி |
| circular theory | — | சுழற்சி வாதக் கோட்பாடு |
| conscious mind | — | அறிமனம் |
| construct | — | கருத்தீடு |
| contrastive distribution | — | வேற்று நிலை வழக்கு |
| conventional | — | மரபு வழிப்பட்ட |
| deconstruction | — | உள்ளியியல் அணுகுமுறை |
| defamiliarisation | — | அசாதாரணமாக்குதல்/ புதுமைப்படுத்தல் |
| diachronic method | — | வரலாற்று முறை |
| dialogism | — | அவாய் நிலைக் கோட்பாடு குறை நிரப்பிக் கோட்பாடு |
| dream content | — | கனவுக்கரு |
| dream work | — | கனவுத்தி |

| | | |
|---|---|---|
| empirical criticism | — | அனுபவவழித் திறனாய்வு |
| empiricism | — | அனுபவவழித் தத்துவக் கோட்பாடு |
| empty meaning | — | வாய்பாட்டுப் பொருண்மை/ துறைப் பொருண்மை |
| esperanto | — | செயற்கை மொழி |
| external structure | — | புறப்பரிமாணம் |
| fallacy | — | மாயை |
| free play | — | ஊசல் தன்மை/தடுமாற்றம் |
| formalism | — | வடிவ இயல் கோட்பாடு |
| grammar of literature | — | கவிதை இயல் |
| general science of literature | — | கவிதை இயல் |
| historical fallacy | — | வரலாற்றுமுறை மாயை |
| hypothesis | — | கருதுகோள் |
| ID | — | விழைவுந்தல் |
| idiolect | — | தனிமனித மொழி வழக்கு |
| ideology | — | வாழ்வியல் பார்வை |
| infinity | — | எண்ணிலி |
| informant | — | தகவலாளி |
| instinct | — | இயல்பூக்க நெறி |
| instinctual drive | — | விழைவுந்தல் |
| intentional fallacy | — | நுதற் பொருள் மாயை |
| joke | — | விகட மொழி |

law of man — சமுதாயக் கட்டுப்பாடு
life sciences — உயிரியல் துறைகள்
linguistic construct — மொழிப் பதியம்
linguistic construction — மொழிப் பதியம்
literariness — இலக்கியத் தன்மை/ இலக்கியச் செவ்வி
literary idiolect — தனிமனித இலக்கிய வழக்கு
literary parole — இலக்கியப் புறவடிவம்
literary structuralism — இலக்கிய அமைப்பியல்வாதம்
literary system — கவிதை இயல்
Logocentricism — மூலப்பொருள்வாதம்
meaning — பொருள், பொருண்மை
medium — வாயில்
mind — மனம்
multidisciplinary — பல்துறை சார்ந்த
myth — தொன்மம்
New Criticism — புதுத்திறனாய்வு
nucleus structure — அணுப்பரிமாணம்
Oedipus complex — ஈடிபஸ் வேணவா
ontological term — பொருண்மைக் கலைச்சொல்
phallic image — பாலியற்படிமம் / குறி
Phallocentricism — சமுதாயக்கட்டுப்பாடு
philology — மூலமொழியாய்வு
phonocentricism — ஒலி முதல் வாதம்
pleasure principle — இன்பநெறிக் கோட்பாடு/ இயல்பூக்க நெறிக்கோட்பாடு

| | | |
|---|---|---|
| poetics | ... | கவிதையியல் |
| poetic truth | ... | இலக்கிய உண்மை |
| post-structuralism | ... | மீயமைப்பியல் வாதம் / அமைப்பியல் மருவிய கோட்பாடு |
| practical criticism | ... | செயல்முறைத் திறனாய்வு |
| prejudice | ... | முற்சாய்வு |
| psychic repression | ... | விழைவொடுக்கம் |
| psychoanalysis | ... | உளப்பகுப்பாய்வியல் |
| raw images | ... | பச்சைப் படிமம் |
| reality principle | ... | வாழ்க்கைநெறிக் கோட்பாடு |
| referent | ... | சுட்டப்பெறும் பொருள் |
| reflection | ... | சிந்தனை |
| register | ... | மொழிவழங்கும் புலம் |
| scepticism | ... | சூனியவாதம் |
| scientific data | ... | அறிவியல் தரவு |
| scientific truth | ... | அறிவியல் உண்மை |
| Self | ... | மனம் |
| sign | — | மொழிக்குறி |
| slip of the tongue | — | வாய்த்தவறல் |
| structuralism | — | அமைப்பியல்வாதம் |
| structural linguistics | — | அமைப்பு மொழியியல் |
| structural meaning | — | துறைப் பொருண்மை / வாய்பாட்டுப் பொருண்மை |

structuralist poetics — அமைப்பியல்வாதக் கவிதையியல்

super ego — பண்பாட்டு மனம்

super structure — மேலமைப்பு

supplementarity — குறை நிரப்பும் தன்மை

synchronic method — உடன்கால முறை

system — விதியொழுங்கு

text — கூற்று

theory of Ideas — மூலப்பொருள் கோட்பாடு

theory of meaning — பொருண்மைக் கோட்பாடு

the langue — அகவடிவம்

the parole — புறவடிவம்

theory of signification — (பொருள்) குறிப்பீட்டுமுறை

unconscious mind — அடிமனம்

undecidability — சுட்டலாகாத்தன்மை

utterance — கூற்று



# துணை நூற்பட்டியல்


**எது இலக்கியம்**

Cela, Camilo Jose. NOBEL Lecture, 1989, "In praise of Story telling" PMLA Jan 1991: (PP.10-17)

Eagleton, Terry. Literary Theory An Introduction (Minneopolis : University of Minneasota press, 1983)

Stanton, Domna C. "What is literature? — 1994" PMLA May 1994: (PP 359-365

Wellek, Rene & Warran, Austin. "The nature of literature" & "The Function of literature" Theory of literature Penguin Books rep. 1966: (pp.20-37)

**புதுத்திறனாய்வு (New Criticism)**

Bennett, Tonny. Formalism and Marxism (London: Methuen, 1979)

Brooks, Cleanth. The well wrought Urn (1947, Newyork: Harvest — Harcourt, 1975)

Eliot, T.S. — "Tradition and the Individual Talent," The sacred wood, (London : Methuen, 1928)

Fowler, Roger. — Linguistic criticism (Oxford, 1986)

Lemon, Lee T. and Reis, Marion J. (eds) — Russian formalist criticism: four Essays (Lincoln, Nebraska 1965)

Lentricchia, Frank — After the New Criticism (Chicago UP 1980)

Ransom, John Crowe — The New Criticism (Nor folk Conn : New Directions, 1941).

,, — The world's Body (New york 1938)

Richards I. A. — Principles of Literary criticism (London : 1924)

,, — Science and poetry (London 1926)

,, — Practical criticism, (London : 1928)

Saussure, Ferdinand de, — Course in general linguistics trans. Roy Harris. (London : Duck worth 1983)

Wellek Rene und Warren, Austin. — Theory of Literature (New York 1942)

Wellek, Rene — A History of Modern Criticism vol. 5 English Criticism 1900-1950 (New Haven, Conn 1986)

,, — Vol. 6 : American Criticism 1900-1950 (New Haven, Conn: 1986)

Wimsatt, W.K. and Beardsley, Monroe , — The Verbel Icon (Lexington : U of Kentucky, 1954)

Jakobson, Roman. — "Closing statement: Linguistics and poetics" in Style in Language ed. Thomas Sebeok Cambridge, Mass. 1960) pp. 350-359.

அமைப்பியல் (Structuralism)

Cyer A. J. — Philosophy in the Twentieth Century (New york : Random House, 1982)

Chomsky, Noam. — Language and mind (New York Harcourt, 1968)

Culler, Jonathan. — Structuralist PoeticsItahca-carnell univ press 1975)

Eagleton, Terry. — Criticism and Ideology (London: 1976)

Fish, Stanely. Is There a Text in this class? (Cambridge : Harvard univ: press, 1980)

Foucault, Michel. The Order of Things:AnArchaeology of the Human Sciences. Newyork : vintage - Random House. 1973)

Frye, Northrop Anatomy of Criticism (1957) Princeton : Princeton UP,1973)

Hawkes, Terence. Structuralism and Semiotics (Los Angeles : U of California 1977)

Hirsh, E. D. Validity in Interpretation (New Haven, cann. 1976).

Husserl, Edmund The Idea of Phenomenology (The Hague 1964)

Iser, wolfgang. The Act of Reading : A theory of Aesthetic Response (Baltimore : Johns Hopkins Up, 1978)

,, The Implied Reader, (Baltimore: Johns Hopkins U P, 1974)

Jameson, Fredric Marxism and Form (Princeton: (Princeton U P, 1971)

Levi Strauss, Claude. — Structural Anthropology Trans. C. Jacobson and T. Grundfest (New York : Basic 1963)

,, — The Sevage Mind (Chicago : U of Chicago, 1966)

Marx, Karl — Preface to A contribution to the Critique of Political Economy" in De Goerge, Richard and Fernan de George (eds) The Structuralists : From Marx to Levi Strauss.

Sartre, Jean - Paul. — What is Literature trans. B. Frechtman (Gloucester, mass: Smith, 1978)

Skinner, B. F. — Science and Human Behavior (New york: MacMillan, 1953)

Todorov, Tzvetan — "Structuralism and Literature" in Approaches to poetics ed. by Seymour Chatman (Newyork: Columbia Up, 1973)

,, — Introduction to Poetics Trans. R, Howard (Minneapolis: U of Minneasota, 1981)

**மீயமைப்பியல்** (Post - Structuralism)

Ann Jefferson and David Robey (eds). — Modern Literary Theory : A Comparative Introduction (London : 1982).

Barthes, Roland — "The Death of the Author" in Twentieth century literary Theory ed. K. M. Newton (New york: Martins Press 1988)

,, — S/Z Trans R. Miller (Newyork : Hill and wang, 1974)

Culler, Janathan. — On Deconstruction Ithaca Cornell Up, 1982)

Derrida, Jacques. — "Structure, Sign and play in the Discourse of Human Science" in Twentieth Century literary theory : An Introductory Anthology (State U of NY Press, 1987)

,, — Of Grammatology trans. G. C. Spivak (Baltimore : Jons Hapkins Up, 1976)

,, — Writing and Difference trans. A. Bass (Chicago : Chicago Up, 1978)

,, — Margins of Philosophy trans. A. Bass (Chicago : Chicago Up, 1982)

Donovan, Josephine (ed) — Feminist Literary Criticism Explorations in Theory (Lexington; Up of Kentucky, 1975)

,, Feminist Theory : The Intellectual Traditions of American Feminism (New york : Ungar, 1985).

Ehrmann, Jacques (ed) Structuralism (Newyork Ancho Books, 1970)

Felmon Shoshana. (ed) Literature and Psychoanalysis Boltimore: 1982)

,, ''The Madnass of Interpretation: Literature and psychoanalysis'' in Twentieth century Literary Theory ed. K. M. Newton (New york : Martins press 1988)

Hartman, Geoffrey. (ed.) Deconstruction and Criticism (London, 1979)

,, Saving the Text : Literature/ Derridal /Philosophy (Baltimore: Johns Hopkins Up 1981)

,, Criticism in the wilderness: The Study of Literature Today (New Haven: Yale Up. 1980)

Lacan, Jacques. The Four Fundamental Concepts of Psychoanalysis Trans. A. sheridan (New york : Norton 1981)

Norris, Christopher. Deconstruction : Theory and Practice (London: Methuen, 1982)

Riffaterre Michael. Semiotics of Poetry (Bloomington : Indiana 1978).

Showalter Elaine (ed) The New Feminist Criticism: Essays on woman Literature and Theory (New york, 1985)

,, "Towards a Feminist Poetics" in Twentieth Century Literary Theory ed. K.M. Newton (New york) Martins press 1988)

Wright, Elizabeth. Psychoanalytic Criticism : Theory in Practice (London 1984)

**கோட்பாட்டுத் தொகுப்பு நூல்கள் :**

(General : Surveys and Collections)

Berman, Art From the New Criticism to Deconstruction (Chicago : U of Illionois press 1988)

De George, Richard and Fernande, Da George (eds) The Structuralists : From Marx to Levi Strauss. (Newyork : (Anchor Doubleday, 1972)

Eagleton, Terry Literary Theory: An Introduction Minneopolis : U of minneasota press 1983)

Harari, Josue (ed) — Textual strategies : Perspectives in Post Structuralist Criticism (Ithaca NY: Cornell Up. 1979)

Lambropoulos. Vassilis and David N. Miller (eds.) — Twentieth century Literay Theory. An Introductory Anthology (State U of NY Press, 1987)

Natoli, Joseph. (ed) — Tracing Literary Theory (Chicage U of illionois press 1987)

Newton, K. M. (ed) — Twentieth Century Literary Theory : A Reader (New york : St. Martins press, 1988)

**தமிழ் நூல்கள்**

குளோறியா சுந்தரமதி, (மொ. பெ.) — **இலக்கியக் கொள்கை** (சென்னை : உலகத் தமிழாராய்ச்சிக் கழகம் 1967)

தமிழவன், — **ஸ்ட்ரக்சுரலிசம்,** (திருநெல்வேலி பாரிவேள் பதிப்பகம், 1981)

''திருவள்ளுவமாலை'' — **திருக்குறள்** — சென்னை : கழக வெளியீடு மறுபதிப்பு ஆகஸ்டு 1970)

நலங்கிள்ளி, அரங்க. — **இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்** பாண்டிச்சேரி வாணிதாசன் பதிப்பகம், 1992)

பூர்ணச்சந்திரன் க. **அமைப்பு மைய வாதமும் பின் அமைப்பு வாதமும்** *(கோவை: நிகழ் வெளியீடு, 1991)*

மறைமலை சி. இ. **இலக்கியமும் உளவியலும்** *(சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 1991)*

**இலக்கியமும் சமூகவியலும்** *(சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 1991)*



# பொருட்பெயர் அகராதி

★

## பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 7 | 11 | பொருத்தமுடையாதக் | — | பொருத்தமுடையதாகக் |
| 10 | 19 | அரிஸ்டாலின் | — | அரிஸ்டாடலின் |
| 34 | 15 | புதுத்திறனாய்வாளர் கன் | — | புதுத் திறனாய்வாளர் கள் |
| 36 | 26 | திறனாய்வாளர்சுள் | — | திறனாய்வாளர்கள் |
| 37 | 8 | வடிவவியவாளரும் | — | வடிவவியலாளரும் |
| 52 | 10 | existentialism | — | empiricism |
| 67 | 26 | ாகேட்பாடுகள் | — | கோட்பாடுகள் |
| 80 | 11 | குறியீட்டு | — | குறிப்பீட்டு |
| 83 | 29 | 'சூன்யவாதம்⁹ | — | 'சூன்யவாதம்' |
| 93 | 7 | விரும்புதல். | — | விரும்புதல், |
| 94 | 17 | நாளைக்குந் | — | நாளைக்கு |
| 95 | 17 | ளிளக்குகிறார் | — | விளக்குகிறார் |
| 99 | 3 | மாயைப் | — | மாயையைப் |
| 103 | 23 | requirments | — | requirements |
| 104 | 17 | மொழியலார் | — | மொழியியலார் |
| 106 | 27 | answar | — | answer |
| 108 | 28 | கருதபடுகிறார் | — | கருதப்படுகிறார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 109 | 16 | நோக்குடைவர் | — | நோக்குடையவர் |
| 110 | 31 | e | — | a |
| 111 | 1 | மீயமைப்யியல் | — | மீயமைப்பியல் |
| 114 | 26 | மொழின் | — | மொழியின் |
| 115 | 3 | உள்ளடக் | — | உள்ளடக்கத் |
| 131 | 4 | Sevage | — | Savage |
| 132 | 7 | Janathan | — | Jonathan |
| 133 | 8 | Boltimore | — | Baltimore |
| 140 | 16 | பீமானுடம் | — | மீமானுடம் |

—O—

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, அஞ்சல், சென்னை-600113

## புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| Silver Jubilee Special Lectures | 60.00 |
| Collected Papers of Thaninayagam Adigal | 100.00 |
| திருமுறை இலக்கியம் | 50.00 |
| அழகியல் சிந்தனைகள் | 30.00 |
| இலக்கியத்தின் நோக்கமும் பயனும் தொகுதி—1 | 65.00 |
| இலக்கியத்தின் நோக்கமும் பயனும் தொகுதி—2 | 60.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் | 75.00 |
| முத்தாரம்மன் கதை | 85.00 |
| சந்திரபதன் கதை | 40.00 |
| கன்னிவாடி நரசிங்க நாயக்கர் வளமடல் | 20.00 |
| கருணை அம்மன் அந்தாதி | 22.00 |
| ஒப்பிலக்கியம் : கொள்கைகளும் செயல்முறைகளும் | 15.00 |
| விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள் | 30.00 |
| தமிழர் கார் இயல் | 45.00 |
| தமிழ் நாடக மலர் | 60.00 |
| ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும் | 85.00 |
| Mysticism of Love in Saiva Tirumurais | 50.00 |
| எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி-2 | 30.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகாரம்-களவியல் | 85.00 |
| The Contributions of the Tamils to Indian Culture Vol-IV - Religion & Philosophy | 80.00 |
| Vol.III-Socio - Cultural Aspects | 90.00 |
| Vol.II - Art & Architecture | 30.00 |
| Vol-I - Language & Literature | 18.00 |
| எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி I. | 47.00 |
| சிவகிரி குமர சதகம் | 39.00 |
| புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை | 27.00 |
| தேரையர் அந்தாதி | 33.00 |
| குசலவர் சுவாமி கதை | 36.00 |
| குணவாகடம் | 40.00 |
| தோட்டுக்காரி கதை | 28.00 |
| சங்கத் தமிழரின் மனிதநேய மணி நெறிகள் | 24.00 |